சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சிமைய வெளியீடு 5.6.7

உ

சிவமயம்

# திருவுந்தியார் – திருக்களிற்றுப்படியார்
# உண்மை விளக்கம்





உரையாசிரியர்
'செந்நெறிச் செல்வர்', 'மெய்ஞ்ஞான வள்ளல்'
'சித்தாந்த வித்யாசாகரம்'
திரு.கு.வைத்தியநாதன்,
இயக்குநர்.



திருவாவடுதுறை ஆதீன
சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்
திருவிடைமருதூர் – 612 104.

1998

சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சிமைய வெளியீடு 5.6.7

உ

சிவமயம்

# திருவுந்தியார் – திருக்களிற்றுப்படியார் உண்மை விளக்கம்





உரையாசிரியர்
'செந்நெறிச் செல்வர்', 'மெய்ஞ்ஞான வள்ளல்'
'சித்தாந்த வித்யாசாகரம்'
திரு.கு.வைத்தியநாதன்,
இயக்குநர்.



திருவாவடுதுறை ஆதீன
சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்
திருவிடைமருதூர் – 612 104.

1998

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

– தவத்திரு மாதவ சிவஞான யோகிகள்.

## மெய்கண்ட சாத்திரம்
## (பதினுன்கு)

உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் – வந்த அருள்
பண்புவினா போற்றி கொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மை நெறி சங்கற்பம் உற்று.

2-4

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்

குருமுதல்வர்

அருள்திரு நமசிவாயமூர்த்திகள்

சிவமயம்

# முன்னுரை

சைவ சித்தாந்த சாத்திரங்கள் எனப்படும் **அறிவியல் நூல்கள்** பதினன்கனுள், திருவுந்தியாரும் திருக்களிற்றுப்படியாரும், சிவஞானபோதம் என்னும் அறிவியல் நூலுக்கு முன்னர்த் தோன்றியவையாகும். சைவசித்தாந்தம் பயில விரும்புபவர்கள் முதன் முதலாகக் கற்கவேண்டிய நூல் **உண்மை விளக்கம்** ஆகும்.

இந்த மூன்று நூல்களின் தொகுப்பே இந்தப் புத்தகமாகும். இவற்றுள் திருவுந்தியாரை அருளிச் செய்தவர், திருவியலூர் உய்யவந்த தேவநாயனர் ஆவர். திருக்களிற்றுப்படியாரை அருளிச் செய்தவர், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனர் ஆவர். உண்மை விளக்கத்தை அருளிச் செய்தவர், மனவாசகங்கடந்தார் ஆவர்.

இந்நூல்களை அருளிச் செய்த ஆசிரியர்கள் வரலாற்றினையும், இந்நூல்களின் சிறப்பையும் பயிற்சி மையத்தின் வெளியீடு ஆகிய **''சைவ சமய வரலாறு''** என்னும் நூலில் காணலாம்.

**'' நன்றாக வைத்து என்னை நாய் சிவிகை**
**ஏற்றுவித்த என்தாதை, தாதைக்கும் எம்**
**அனைக்கும் தம் பெருமான் ''**

என்னும் மணிவாசகத்திற்கு ஏற்ப, அடியேனின் **''ஞானத்தந்தை'' ஆகிய திருவாவடுதுறை ஆதீனத்து இருபத்து மூன்றாவது பட்டத்தில் எழுந்தருளிச் சிவஞானச் செங்கோல் ஓச்சிவரும் திருவுயர் குரு மகாசந்நிதானம் சீர் வளர் சீர் சிவப்பிரகாசப் பண்டாரச் சந்நிதி அவர்கள்,** அடியேனை இத்தகு சிவப்பணியில் முயக்குவித்தருளிய அருட்டிறத்தை நினைந்து போற்றி, மனம் மொழி மெய்களால் அவர்கள் பொன்னார் திருவடிகளை வழிபடுகிறேன்.

சீர் வளர் சீர் குரு மகாசந்நிதானம் அவர்களது அருளாசியினை நினைந்து, மாணவர்கள் இந்நூற்களைக் கற்றுணர்ந்து பயனுறுமாறு வேண்டுகிறேன்.

திருவிடைமருதூர் . அடியேன்,
28.2.1998. **கு. வைத்தியநாதன்.**

உ

சிவமயம்

# திருவுந்தியார்

## சிவபெருமானே குருவாய் வருதல்

**1.** அகளமாய் யாரும் அறிவு அரிது; அப்பொருள்
சகளமாய் வந்தது என்று உந்தீபற;
தானாக தந்தது என்று உந்தீபற.

**தெளிவுரை:**

'உந்தீபற' என்பது இறைவனது ஞான வெற்றியைப் போற்றிப் பரவும் முறையில் மகளிர் இருவர் கூடி விளையாடும் விளையாட்டு வகைகளில் ஒன்று ஆகும். உந்தி – குதித்து ; பற – வேகமாக மேலே எழுதல்.

இனி, 'உந்தீபற' என்னும் தொடருக்கு 'உங்கள் தீமைகள் எல்லாம் பறந்து போவதாகுக' என்றும், 'உங்கள் அறியாமை உங்களை விட்டு நீங்குமாறு இறைவனைப் போற்றுவீராக' என்றும் பொருள் கொள்வதும் பொருந்தும்.

இந்தத் திருவுந்தியாரில் 'உந்தீபற' என்னும் தொடர், பாடல் ஒன்றில் இரண்டு வீதம், நாற்பத்து ஐந்து பாடல்களிலும் தொண்ணூறு இடங்களில் வருகின்றது. எனவே, ஒவ்வொரு பாடலுக்கும் உள்ள தெளிவுரையில் இதற்குப் பொருள் கூறப் பெறவில்லை.

திருவாசகத்தில் வரும் திருவுந்தியார்ப் பதிகத்திற்கும், இவ்வாறு பொருள்கொள்வது பொருந்தும்.

உருவம், அருவுருவம், அருவம் என்னும் மூவகை நிலைகளுக்கும் அப்பாற்பட்டு, எண்குண வடிவினனாய் நிற்பவன் சிவபெருமான். அந்நிலையில் அவன் முழு நிறைவுடைப் பொருளாக இருப்பதால் அவனது வியாபகத் தன்மை ஒருவராலும் அறிய இயலாததாகும். அவனே உயிர்கள் பால் உள்ள இரக்கம் காரணமாக, மூவகைத் திருமேனிகளைத் தாங்கி குருவடிவில் எழுந்தருள்கின்றான். அவ்வாறு திருமேனி தாங்கி வரும் பொழுது, பக்குவம் உள்ள ஆன்மாக்களுக்குத் தானே வலியச் சென்று அருள் செய்கிறான்.

சகளம் - வடிவம், அகளம் - அகண்டிதம்; அஃதாவது ஏகதேசத் தன்மையற்ற வியாபகப் பொருள். தானாகத் தருதல் - பிறிது காரணம் இன்றித் தன் அருளே காரணமாக எளிவந்து வலியக் கொடுத்தல்.

இந்தத் திருவுந்தியார்ப் பாடலுடன் ஒத்த கருத்துடைய திருக்களிற்றுப்படியார்ச் செய்யுள்கள். 4,5

## உலகப் பற்றில் உள்ள பயிற்சியை விடுதல்

2. பழக்கம் தவிரப் பழகுவது அன்றி
உழப்புவது என்பெணே உந்தீபற;
ஒருபொரு ளாலே, என்று உந்தீபற;

**தெளிவுரை:**

உயிர்கள் உலகப் பற்றில் அழுந்தி நீண்ட நாட்களாகப் பழகிப் பழகி அப்பழக்கத்தை எளிதில் விட்டுவிடுவதில்லை. அப்பழக்கத்தை விடுவதற்கு ஒரேவழி சரியை,கிரியை,யோகம் என்னும் சிவநெறிகளில் பழகுவது ஒன்றே ஆகும். அந்நெறிகளை விட்டு, ஐம்புலன்களைப் பற்றி, உலகப் பொருள்களை நுகரும் பொருட்டு உழன்று திரிவது பேதைமை அல்லவா? எனவே திருவருள் ஆகிய ஒரே பொருளில் அழுந்திக் கிடப்பதையே பழக்கத்தில் கொண்டு வரவேண்டும்.

தொடர்புடைய திருக்களிற்றுப் படியார் செய்யுள்கள் 6,7

## சிவநெறிகளில் நிற்பதற்குப் பயன்

3. கண்ட – அத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்,
பிண்டத்தில் வாரார் என்று உந்திபற;
பிறப்பு இறப்பு இல்லை என்று உந்திபற.

**தெளிவுரை:**

அருளே காரணமாக ஆசிரியத் திருமேனி கொண்டு, சிவபெருமான் எழுந்தருளி வந்திருப்பதைக் கண்ணினாலே கண்டு, ஆன்மா அவரையே பற்றி நிற்கவேண்டும். அந்நிலையில் ஆன்மாவின் பாசமாம் வினைப்பற்று அறவே நீங்கிவிடும். அதன் பயனாக, மேலும் பிறப்புட்பட நேராது; பிறவாப் பெருநிலையாகிய வீடுபேறு அடைதல் உறுதி என்பதால், இறப்பும் ஏற்படுவதில்லை.

''பிண்டத்தில் வாரார்'' என்பது பிறப்புட்படார் என்பதைக் குறிக்கும். மறுபடியும் '' இறப்பு இல்லை'' என்றது, இறந்தவர்கள் பிறப்பார்கள்; இந்த ஆன்மா வீடுபேறு பெறுவதால் இறப்பதில்லை; எனவே மீண்டும் பிறப்பதில்லை என்பதை உறுதிப் படுத்தும் பொருட்டு ஆகும். ''கண்டத்தை'' என்ற சொல், தகர ஒன்று நீங்கி 'கண்டதை' என்று வரும். கண்ட + அத்தை = கண்டத்தை. அஃதாவது கண்ட அதனை (கண்டதனை – கண்டதை) என்று பொருள் கொள்வதும் பொருந்தும்.

தொடப்புடைய களிறு (களிற்றுப்படியார்): 8.

## பேரின்பப் பெருநிலை

4. எங்கன் இருந்தது என்று எவ்வண்ணம் சொல்லுகேன்?
அங்கன் இருந்தது என்று உந்திபற;
அறியும் அறிவுஅது அன்று உந்திபற.

**தெளிவுரை:**

குருவின் திருவருளால் அடியேன் பெற்ற பேரின்பப் பெருநிலை எத்தன்மையதாய் இருக்கும் என்று எப்படிச்

சொல்ல முடியும்? அதுபோல இருந்தது, இதுபோல இருந்தது என்று எப்படிச் சொல்ல இயலும்? அதற்கு உவமை கூறுவதற்கு வேறு எந்தப் பொருளும் இல்லை; அதற்கு அதுவே உவமையாகும். எந்தப் பொருளையும் சுட்டறிவினலேயே அறியும் இயல்புடைய உயிர்க்குப் பேரின்பப் பெருநிலையின் இயல்பை எந்தச் சொல்லாலும் சொல்லி விளக்க முடியாது. அதனை அனுபவித்து உணரமட்டுமே முடியும்.

இங்ஙன் என்பதும் பாடம்; தொடர்புடைய களிறு 9,10

## ஆன்மாக்களுக்கு குரு அருளும் முறைமை

**5.ஏகனும் ஆகி அநேகனும் ஆனவன்**
**நாதனும் ஆனன் என்று உந்தீபற;**
**நம்மையே ஆண்டான் என்று உந்தீபற.**

**தெளிவுரை:**

இறைவன் தனக்குவமை இல்லாதவன். எனவே, அவன் 'ஏகன்' எனப்படுகிறான். '' ஒருவன் என்னும் ஒருவன்'' ஆகிய இறைவன் எண்ணில்லாத உயிர்களோடு கலந்து உயிர்க்கு உயிராகவும் இருக்கிறான். எனவே, அவனே 'அனேகன்' எனவும் படுகிறான். உயிர்கள்பால் கொண்ட பெருங்கருணை காரணமாக, அவனே குருநாதனாக எழுந்தருளியுள்ளான். உலகில் எத்தனையோ உயிர்கள் இருக்கையில், நம்மையும் ஒரு பொருளாகக் கருதி, 'நம்மை அடிமை கொண்ட' அவனது ஆண்டமையை நினைந்து உளம் உருகுவோமாக. 'நம்மையே' என்பதில் உள்ள ஏகாரம் ''நம்மையும்'' என்று இழிவு சிறப்பு உம்மைப் பொருளது. இந்த இடத்தில் '' ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க'' என்ற சிவபுராணத் தொடர் நினைவுகூர்தற்குரியது. 'நாதன்' என்ற சொற்கு, முப்பத்தாறு தத்துவங்களின் முதல் தத்துவம் ஆகிய நாதத் தத்துவத்துக்கும் அப்பாற்பட்டு நிற்கும் இறைவன் என்று பொருள் கொள்வாரும் உளர். (களிறு–11).

## எல்லாம் சிவன் செயல்

6. நம்செயல் அற்று, இந்த நாம்அற்றபின், நாதன்
தன்செயல் தானேஎன்று உந்திபற;
தன்னையே தந்தான் என்று உந்தீபற.

தெளிவுரை;

தன்முனைப்போடு நாம் செய்கின்ற செயல்களே, நமது துன்பங்களுக்குக் காரணமாய் உள்ளன. இறைவன் நமக்குத் தந்த கருவி கரணங்கள் இன்றி, எந்தச் செயலையும் நம் விருப்பத்துக்கு நம்மால் செய்ய முடியாது. இந்த உணர்வு மேலிடுமாயின் தன்முனைப்பு நீங்கும், நானே எல்லாம் நடத்துகிறேன் என்ற உணர்வு ஒழியும், அப்போது ''எல்லாம் அவன் செயல்'' என்ற எண்ணம் உறுதிப்படும். அந்த உறுதிப்பாடு மேம்பட, மேம்பட அவனது திருவருளில் உள்ளம் தோயும். அப்போது அவன்பால் பேரன்பு பெருகும். அந்நிலையில், அவன் நமக்குப் பேரின்பப் பொருள் ஆகிய தன்னையே நமக்கு விரைவில் தந்தருள்வான்.

''தருவான்'' என்று எதிர்காலத்தால் கூறப்பட வேண்டியது **விரைவுபற்றித்** ''தந்தான்'' என்று இறந்த காலத்தால் கூறப்பட்டது.

நமது விருப்பம் உலகியலின்பால் இருக்கும்போது, நமது செயல் தன்முனைப்புடையதாக இருக்கும்; நமது விருப்பம் இறைவன்மாட்டு இருக்கும்போது, நமது செயல் தன்முனைப்பற்று, அவன் செயலாக இருக்கும். *(களிறு 12,13)*

## இறைவனோடு உடனாய் நிற்பதற்கு உபாயம்

7. உள்ளம் உருகில் உடன் ஆவர் அல்லது
தெள்ள அரியர்என்று உந்தீபற;
சிற்பரச் செல்வர்என்று உந்தீபற;

தெளிவுரை:

உயிர்கள் உய்யும் பொருட்டுச் சிவபெருமான், எத்தனை எத்தனை பேருதவிகளைச் செய்து வருகின்றான் என்பதை நினைந்து நாம்உள்ளம் உருகவேண்டும். அத்தகைய நன்றியுணர்வோடு உருக

உருக, ஆன்ம அறிவை மறைக்கும் ஆணவம் சிறிது சிறிதாக நீங்கி, ஆன்மா பக்குவ நிலையினை எய்தும். அந்நிலையில் உயிரின் சிறப்பு இயல்பு வெளிப்பட்டு, ஆன்மா இறைவனுடன் கூடிநிற்கும் பெருநிலையைப் பெறும். இஃதன்றி வேறு எந்த முறையாலும் இறைவனைத் தெளிவாக அறிவது அரிதே ஆகும். இறைவனின் பேருதவிகளை நினைந்து நினைந்து உருகுபவர், ஞானப் பெருவெளியாகிய இறை வியாபகத்தைப் பெறுவர்.

'சிற்பரம்' என்பது 'சித்பரம்' என்னும் தொடர், தமிழ் இயல்புக்கு ஏற்ப, நிற்பதாகும். சித்–ஞானம்; பரம்–பெருவெளி. 'சிற்பரச் செல்வர்' என்பது, ஞானப் பெருவெளியாகிய முழு நிறைவினைப் பெறுவர் என்பதாகும். ''உள்ளம் உருகில், உடனுவ ரல்லது, தெள்ள அரியர்'' என்று கூட்டிப் பொருள் கொள்க. (களிறு–(14) முதல் (21) வரை).

இந்த இடத்தில், '' உள்ளம் உருகில் உடனுவார் (2–111–4) என்னும் சம்பந்தர் வாக்கு நினைவு கூர்தற்குரியது.

## சிவனோடு கூடி நிற்றற்கு உபாயம்

8. ஆதாரத் தாலே, நிராதாரத்தே சென்று
மீதானத் தே, செல்க உந்திபற;
விமலற்கு இடம்அதுஎன்று உந்தீபற,

**தெளிவுரை:**

இப்பாடல், யோகநெறியில் நின்று சிவபெருமானோடு கூடி நிற்பதற்குரிய வழியைக் கூறுகிறது. இதில் 'ஆதாரம்' என்பது மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் ஆறு ஆதாரங்களைக் குறிக்கும், 'நிராதாரம்' என்பது, ஆஞ்ஞை நிலைக்கு அப்பால் உள்ள ஆயிர இதழ்த் தாமரையில் அம்மையுடன் கூடிநிற்கும் சிவபெருமான் இருக்கும் இடம் ஆகும். 'மீதானம்' என்பது, தலை உச்சிக்கு மேலே பன்னிரண்டு அங்குலம் உயர்ந்த இடம்; அங்குச் சிவபரம்பொருள் விளங்கித் தோன்றும். அதுவே சிவபெருமான் (விமலன்) வீற்றிருக்கும் இடமாகும். நமது இருகரங்களையும் தலைக்கு உயரே

தூக்கி வழிபடுவதன் நோக்கம் இஃதே ஆகும். ஆதாரம் - உடலில் உள்ள நிலை; நிராதாரம் – உடலைக் கடந்த நிலை; சமாதி நிலை, மீதானம் – அதற்கும் மேலான நிலை. இந்த ஆறு ஆதாரங்களையும் யோக நெறியில் உயிர் மலநீக்கம் பெறும் பொதுநிலை என்றும், நிராதாரத்தைத் திருவருள் உணர்வு என்றும், மீதானத்தைச் சிவப்பேறு என்றும் கூறுவாரும் உளர். (களிறு–22).

## ஆதார யோகத்தின் இயல்பு

**9. ஆக்கில் அங்கே, உண்டாய் அல்லது அங்கு இல்லையாய்ப்**
**பார்க்கில் பரம்அதுஅன்று உந்திபற;**
**பாவனைக்கு எய்தாதுஎன்று உந்திபற.**

**தெளிவுரை:**

மேலே சொன்னபடி, ஆறு ஆதாரங்களில் நின்று, இறைவனது திருவுருவத் திருமேனியைத் தியானிக்கும் பொழுது, இறைவனோடு உயிர் கூடி இருப்பதாகத் தோன்றும்; தியானத்திலிருந்து விடுபட்டபோது, அவ்வாறு கூடியிருந்தது இல்லையாய்த் தோன்றும்; அஃதாவது, கூடாதிருப்பதுபோல் இருக்கும். தியானத்தின்போது ஆராய்ந்து நோக்கும்போது, நாம் கூடியிருந்தது சிவபெருமானோடு அன்று என்று தோன்றும். எனவே, இவ்வாறு தியானத்தின் போதும் தோன்றி மறையும் தன்மையை உயிர் உணர்வதால், இறைவன், தியானத்தினும் பெறுதற்கு அரியவன் என்பது தெளிவாயிற்று.

ஆதார தியானத்தில் உயிர் படிப்படியாக ஒவ்வொரு நிலையினைக் கடந்து மேலே சென்று கொண்டிருக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும். எனவே, அப்போதும் மாயாகருவிகளில் மனம் செல்வதால், இத்தகு யோக நிலையிலும் இறைவன், தியான பாவனைக்கு எட்டாதவன் எனப்பட்டது. (களிறு – 23,24)

## மந்திர யோகத்தின் பயன்

**10. அஞ்சே அஞ்சு ஆக அறிவே அறிவுஆகத்**
**துஞ்சாது இருந்து, உணர்ந்து உந்திபற;**
**துய்ய பொருள்ஈது என்று உந்திபற.**

தெளிவுரை:

சிவாயநம என்னும் அஞ்சு எழுத்தே, இறை, அருள், உயிர், மறைப்பாற்றல், மலம் என்று ஐந்து பொருள்களாக உள்ளளது என்னும் திருவருள் ஞானமே, உனக்கு அறிவாகக் கொண்டு, மலவாதனையால் மயங்காமல் இருந்து சிவபரம்பொருளை இடைவிடாது தியானித்து இருப்பாயாக. அந்நிலையில் தூய்மையே வடிவாகிய சிவபெருமான் இவனே என்பதை நீ உள்ளவாறு உணர்வாயாக.

அஞ்சு – திருவைந்தெழுத்து

அஞ்சு ஆக – அஞ்சு பதங்களாக

அறிவே அறிவாக – திருவருள் கண்கொண்டு காண்பது

துஞ்சாது இருத்தல் – மறவாமல் இருத்தல் என்றும் பொருள் கூறலாம்.

'இருந்துணர்ந்து, என்னும் பாடம், இந்நூலில் கொள்ளப்பட்டுள்ளது 'உணர்ந்திருந்து' என்றும் பாடம் உண்டு. ஆயினும் பொருள் மாறுபாடு இல்லை. 'துஞ்சாது இருந்து' என்னும் தொடருக்கு, மல இருளில் பட்டு மயங்காது இருந்து' என்று பொருள் கூறுவாரும் உளர். (களிறு–25)

## நிராதார யோகத்தின் இயல்பு

11. தாக்கியே தாக்காது நின்றதுஓர் தற்பரம்;
நோக்கின் குழையும் என்று உந்திபற;
நோக்காமல் நோக்க என்று உந்திபற.

தெளிவுரை:

இறைவன் அந்தந்தப் பொருளுக்கு அந்தந்தப் பொருளாக நிற்கிறான். இதனை அது அதுவாய் நிற்றல் அவன் இயல்பு என்கிறது சாத்திரம். **''அவையே தானே ஆய்''** என்பது சிவஞான போதம். அவ்வாறு ஒவ்வொரு பொருளோடும் இறைவன் ஒன்றாய் நின்றாலும், தன் தன்மை மாறுபடாமல், அப்பொருளின் தன்மை தன்னைத் தாக்காமல் நிற்கிறான், எந்நிலையிலும், இறைவன் தன்நிலையில் நிற்பதற்கு உவமையாக, எதையும் கூறமுடியாது.

அத்தகைய இறைவனை, உயிர்கள் தம் அறிவினால் காண முற்பட்டால், அவன் ஒருபோதும் உயிர்களுக்குப் புலப்படமாட்டான். எனவே, இறைவனை நம் அறிவினால் கண்டுவிடலாம் என்னும் தன் முனைப்பு நீங்கப் பெற்று, அவனது தன்மையாகிய அருளின் துணைக்கொண்டே அவனைக் காணவேண்டும்.

''தற்பரம்'' என்பது, உயிர்களின் அறிவு இச்சை செயல்களுக்கு எட்டாத நிலையில், வியாபித்து நிற்கும் இறைவனைக் குறிக்கும். ''குழையும்'' என்பது, தன் அறிவைக்கொண்டு இறைவனை அறிந்து விடலாம் என்று எண்ணினால், அவனருளைக்கூட காணமுடியாது என்பதைக் குறிக்கும். (களிறு – 26).

## குருநாதரின் பெருமை

**12.** **மூலை இருந்தாரை முற்றத்தே விட்டவர்**
**சாலப் பெரியர் என்று உந்தீபற;**
**தவத்தில் தலைவர் என்று உந்தீபற.**

**தெளிவுரை:**

பிறப்புக்கு உட்படுகின்ற உயிர்கள், அன்னையின் வயிற்றில் கிடந்தது. அவை ஒருவீட்டுக்குள் அடங்கிக் கிடந்ததைக் குறிக்கும்; பிறவிக்கு வந்த பின்பும்கூட, நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் என்னும் ஐந்து நிலைகளுக்கு உட்பட்டு, மாயா கருவிகளுள் முடங்கிக் கிடக்கின்றன. ''மூலை'' என்பது கட்டுப்பட்டுக் கிடக்கும் ஓர் இடத்தைக் குறிக்கும். ''முற்றம்'' என்பது வீட்டுக்கு வெளியே உள்ள திறந்த வெளியாகும்.

தத்துவங்கள் ஆகிய மூலைகளில் ஒடுங்கி கிடந்த உயிர்களைச் சிவானந்தம் ஆகிய முற்றத்திலே கொண்டு வந்துவிட்ட குருநாதர், அளவிடற்கரிய பெருமைகளை உடையவர். முன்பு பல்வேறு பிறவிகளில் நாம் செய்த தவத்தின் பயனாக, சிவபெருமானே குருநாதராக எழுந்தருளி வந்துள்ளார் என்பதை அறியவேண்டும்.

''தவத்தின் தலைவர்'' என்பது நாம் செய்த தவத்தால், ஆன்மாக்களின் தலைவராகிய சிவபெருமானே, நமக்குச் சிவானந்தத்தை வழங்கத் தக்கவர் என்பதைக் குறிக்கும். (களிறு:27,28)

## சிவம் விளங்கும் இடம்

**13.** ஒட்டு அற்று நின்ற உணர்வு. பதி மட்டித்
தேட்டு அற்ற இடம் சிவம் உந்தீபற;
தேடும் இடம் அது அன்று உந்தீபற

**தெளிவுரை:**

சிவபெருமான், அங்கு இங்கு எனாதபடி எங்கும் ஒளிமயமாய்,இடநீங்கம் இன்றி, ஒரே தன்மை உடையவனாகிப் பரந்து நிற்கிறான். எனவே, அங்கு இங்கு என்று அலையாமல், இருந்த இடத்தில் இருந்தவாறே, அவன் ஒருவனை மட்டுமே நினைந்திருக்கும் உணர்வு ஒன்றி நின்றால் அஃதே அவன் இருக்கும் இடம் ஆகும். ''நினைப்பவர் மனத்துளான்'' என்பது அப்பர் வாக்கு. அந்த இடத்தில் அவனை நேர்முகமாகவே காணலாம், அதனை விட்டு, ஆன்மபோதம் ஆகிய தன்முனைப்புடன் எங்கே சென்று தேடினாலும், அவன் இருக்கும் இடத்தை அறிய முடியாது 'பதி முட்டுதல்' என்பது, பதிஞானம் விளங்கித் தோன்றுதல் ஆகும். ''தேட்டு அற்ற இடம்'' என்பது வேறு எந்தப் பொருளையும் தேடாமல், அவனை மட்டுமே தேடி நிற்கும் நிலை ஆகும். 'ஒட்டு அற்று' என்பது, அங்கே காணலாம், இங்கே காணலாம் என்று ஓடி ஓடித் திரியாமல் என்பதைக் குறிக்கும். '' நின்ற உணர்வு'' ஆவது, சிவபெருமானை மட்டுமே நினைந்திருக்கும் நிலை ஆகும். (களிறு:29).

## திருவருளும் குருவருளும்

**14.** கிடந்த கிழவியை கிள்ளி எழுப்பி
உடந்தை உடனேநின்று உந்தீபற;
உன்னையே கண்டது என்று உந்தீபற.

தெளிவுரை:

தொடக்கமில் காலந்தொட்டு (அநாதியே) திருவருள், உயிர்களுடன் மறைந்து நிற்கிறது. உயிர்கள் ஆணவமலப் பற்றுக்கொண்டு இருப்பதால், திருவருள் வெளிப்படாமல் இருக்கிறது. ஆணவமலப் பற்று என்பது தன்முனைப்புடன் இருப்பதாகும்.

ஞாஞசிரியன் ஆகிய குருநாதர், நமது அறியாமையைப் போக்கியதும், திருவருளைக்காணும் ஆர்வம் நமக்கு ஏற்படுகிறது, அந்நிலையில், நம் குருநாதர், திருவருளைத் தூண்டி, அருட்கண்ணினுல் நம்மை நோக்குகிறுர். அப்போது ஞானம் வெளிப்பட்டு விளங்குகிறது. அந்நிலையில் தற்போதம் அடங்கி விடுவதால், சிவபெருமான் நம்மைத் தன்பால் ஈர்த்துக் கொள்கிறுன்.

எனவே, குருவருளாலேயே திருவருளைப் பெற முடியும் என்பது பெறப்பட்டது; மேலும் திருவருளின் உதவியாலேயே சிவபெருமானைக் கூடி நிற்க முடியும் என்பது தெளிவாயிற்று.

கிழவி – சிவபெருமானின்று என்றும் பிரிப்பின்றி நிற்கும் உரிமையை உடைய அருட்சத்தி. 'கிடந்த' என்பது உயிர்களோடு மறைந்து நிற்கின்ற என்பதாகும். 'கிள்ளி எழுப்புதல்' பக்குவமுள்ள ஆன்மாவின்கண் திருவருளைத் தோற்றுவித்தல் ஆகும். (களிறு – 30).

## திருவருளைப் பற்றும் முறைமை

**15.** பற்றை அறுப்பதுஓர் பற்றினைப் பற்றில், அப்
பற்றை அறுப்பர்என்று உந்திபற;
பாவிக்க வாரார் என்று உந்திபற;

தெளிவுரை:

கருவி கரணங்களோடு கூடிநிற்கும் உயிர், 'எனது' என்னும் புறப்பற்றினை அறுப்பதற்குத் திருவருள் பற்று ஒன்றே வழியாகும்.அத்தகு திருவருளைப் பொருந்தி, உயிர் ஞானமயமாய் நிற்கும். அந்நிலையில் ஞானமயமாய் நிற்கிறேம் என்னும் உணர்வு உயிர்க்கு இருக்கக்கூடாது. அவ்வாறு நிற்குமாயின் 'நான்' என்னும் அகப்பற்று உடையதாகிறது உயிர்.

திருவருளைப் பற்றித் திருவருளில் அழுந்தி நிற்கும் உயிர்க்குள்ளஅகப்பற்றையும், சிவபெருமான் அறுத்துவிடுவான்.

எனவே, சிவபெருமானைக் கூடவேண்டும் என்னும் பாவனை உயிர்க்கு இருக்கக்கூடாது. சிவபெருமானின் ஆற்றல் ஆகிய திருவருளைப் பற்றி தன்முனைப்பும் அற்று நிற்கும் உயிரையே திருவருள் சிவபெருமானிடத்து இட்டுச் செல்லும். ஆக, ஆன்மாவுக்கு ''நான் ஞானி'' என்னும் உணர்வு இருக்கும் ஆயின், அந்த ஆன்மா சிவத்தைப் பெற முடியாது. 'பாவிக்க' என்பது 'மனத்தால் கற்பித்து முயற்சி செய்ய' என்பதாகும். (களிறு:31).

## பற்றற்ற நிலையின் தன்மை

**16. உழவாது உணர்கின்ற யோகிகள் ஒன்றோடும்**
**தழுவாமல் நிற்பர்; என்று உந்திபற;**
**தாழ்மணி நாவேபோல் உந்திபற.**

**தெளிவுரை:**

கருவி கரணங்களைக் கொண்டு, பெரிதும் முயன்று உழைத்தாலும் சிவபெருமானை அடையமுடியாது. அவ்வாறு செய்யும் முயற்சி பயனற்றுப்போய், அயர்வு உண்டாகும். எனவே அவ்வாறு அழுந்தி முயலாமல் திருவருளின் துணைக்கொண்டு சிவபெருமானைக் கண்டு வழிபடும் சீவன் முத்தர்கள் உலகப் பொருள்களுள் ஒன்றிலும் பற்று வைக்காமல் இருப்பார்கள். எதனையும் திருவருட்கண் கொண்டே உணரப் பெற்று நிற்பார்கள்.

அஃது எதுபோல எனின், தரையில் வைக்கப்பட்ட தாழ்ந்த 'நா'வினை உடைய மணியின் 'நா' அசைவற்று ஒலி எழுப்பாமல் இருப்பதைப்போல ஆகும். அஃதாவது மணியின் நாக்கு தொங்கிக் கொண்டு இருக்கும்வரை, அசைவுற்று ஓசையும் எழுப்பிக்கொண்டு இருக்கும். அந்த மணி தொங்காமல், தரையில் வைக்கப்பட்டால், நாக்கும் தரையில் பட்டு, அசைய வழி இராது; ஆதலால், ஓசையும் எழாது. பற்றற்ற நிலை என்பது இஃதே ஆகும்.

''உழவாது'' என்பது, கருவி கரணங்களால் முயன்று உழைத்துப் பயன் இன்றி அயர்வு அடையாமல் இருத்தல் ஆகும். (களிறு:32)

## சிலம்பொலி வழியே வழிபடும் முறைமை

**17.** திருச்சிலம்பு ஓசை ஒலிவழியே சென்று
நிருத்தனைக் கும்பிடுஎன்று உந்தீபற;
நேர்பட அங்கே நின்று உந்தீபற.

**தெளிவுரை:**

அல்லும் பகலும் அனவரதமும், சிவபெருமான் திருநடனம் புரிந்த வண்ணம் இருக்கிறன். அவனது திருவடியில் உள்ள திருச்சிலம்பிலிருந்து எப்போதும் அருளோசை வெளிப்பட்டுக் கொண்டே இருக்கிறது. அந்த அருளோசை இரண்டு விதமாக வெளிப்படுகிறது. அவனது திருவடியையே பற்றி நிற்பவர்க்கு, அவரது அகச்செவியில் கேட்கும் அளவில் 'ஓசை' ஆகவும், அவரது உணர்வுக்குப் புலனுகும் நிலையில் 'ஒலி' ஆகவும் பெயர்களைப் பெற்று இலங்குகின்றது. இதனையே அப்பரடிகள், ''ஓசை ஒலி எலாம் ஆனுய் நீயே'' என்று பரவிப் போற்றினுர்கள். எனவே, புலன்களின் வழியே செல்லாமல், திருச்சிலம்பின் ஓசை ஒலி வழியே சென்று கூத்தப் பெருமானை வழிபடவேண்டும். உள்ளத்தை ஒருமுகப் படுத்தி வழிபட்டால் அன்றி, திருச்சிலம்பு ஓசையும் ஒலியும் புலப்படா. எனவே சேரமான் பெருமாள் நாயனுரைப் போல, திருவருளின் வழியே சென்று வழிபடவேண்டும் 'நேர்பட நிற்றல்' என்பது, புலன்களின் வழியே மயங்காது அருள்வழியே ஒருமுகப்பட்டு நிற்றல் ஆகும். (களிறு:33)

## சார்ச்சிச் சிறப்பு

**18.** மருளும் தெருளும் மறக்கும் அவன்கண்
அருளை மறவாதே உந்தீபற;
அதுவே இங்கு உள்ளது என்று உந்தீபற.

**தெளிவுரை:**

உலகப் பொருள்களைக் கண்டு மயங்கி நிற்பதும், பின்பு அவற்றின் நீங்கித் தெளிவு பெற்று விட்டதாகக் கருதுவதும் திருவருளை மறந்து செயல்படுவனவே ஆகும். எப்போதும்

திருவருளை மறவாது இருப்போமாயின், இத்தகைய மயக்கமும் தெளிவு பெற்றது போன்ற பிரமையும் (கலக்கமும்) ஏற்படாது. எனவே, இறைவனது திருவருளை எக்காலத்தும் எந்நிலையிலும் மறவாது இருக்க வேண்டும். அந்நிலையில்தான் நமக்குள்ள மறப்பும் நினைப்பும் அற்றுப் போகும். திருவருள் ஒன்றே, சிவபெருமானை அடைவதற்கு, ஆன்மாவுக்கு பற்றுக்கோடாக உள்ளது. எனவே, திருவருளைச் சார்ந்து நிற்பது ஒன்றே நமக்கு வேண்டப்படுவதாகும்; அதுவே சிறப்பும் ஆகும். திருவருட் சார்பு இன்றி நமக்கு எந்தச் சிறப்பும் இல்லை. ''அதுவே இங்குள்ளது'' என்பது, சிவனருளே கண்ணாகச் சிவமே கண்டு இருப்பது அன்றி, வேறு ஒரு காரியமும் ஈண்டைக்குச் செய்ய வேண்டுவதில்லை என்பதாம். (களிறு:34).

## சிவம் வெளிப்படும் முறைமை

**19.** கருது வதன்முன், கருத்து அழியப் பாயும்;
ஒருமகள் கேள்வன் என்று உந்தீபற;
உன்ன அரியன் என்று உந்தீபற.

**தெளிவுரை:**

திருவருளின் வழியிலேயே நாம் நிற்கப் பழகிவிட்டால், நமக்கு என்று ஒரு கருத்து இருக்காது. எல்லாம் சிவனருள் என்னும் உணர்வு தலைப்படத் தலைப்பட, தனித்து நிற்கும் முனைப்பு நம்மை விட்டுப் படிப்படியாக நீங்கும். அந்நிலையில் ஆன்மாவின் அறிவிச்சை செயல்கள் அழிந்து சிவபெருமானின் அறிவு இச்சை செயல்கள் ஆன்மாவின் கண் தொழிற்படும். அப்போதும், சிவபெருமானை நினைப்பதற்கு முன்பே அவன் வெளிப்பட்டு நிற்பன். இந்த இடத்தில் அடியார் பெருமக்களுக்கு இறைவன் பொதிசோறு கொண்டு வந்து கொடுத்தருளிய நிகழ்ச்சிகளை நினைவுகூர்தல் நல்லது.

இறைவன் அம்மையப்பராய் இருப்பவன். எனவே, அவனை ''ஒரு மகள் கேள்வன்'' என்றார். கேள்வன் – நாயகன். கதிரவனும் ஒளியும் போல என்றும் பிரிப்பின்றி நிற்பவன்.

இவ்வாறு அருள்வயப்பட்டு நின்றால் அன்றி அவன் வெளிப்படுவதில்லை என்பதை உணர்த்தும் பொருட்டே, ''உன்ன அரியன்'' என்றார். அஃதாவது எவராலும் தம் அறிவினால் நினைதற்கு எட்டாத நிலையில் இருப்பவன். ''சிந்திப்பரியன'' என்னும் அப்பர் வாக்கு இங்குச் சிந்தனைக்குரியது. (களிறு:35).

## சிவானந்த அனுபவத்தின் இயல்பு

**20.** **இரவு பகல்இல்லா இன்ப வெளியூடே**
**விரவி விரவி நின்று உந்தீபற;**
**விரைய விரையநின்று உந்தீபற.**

**தெளிவுரை:**

'இரவு' என்பது, கருவி கரணங்கள் கூடாத நிலையில் உயிர்கள் ஆணவ மலத்தைப் பற்றி, அதனால் முழுமையாக மறைப்புண்டு இருக்கும் ''கேவல நிலை'' யைக் குறிக்கும்.

'பகல்' என்பது, கருவி கரணங்களுடன் கூடிய நிலையில் உயிர்கள் மாயா கருவிகளைப் பற்றி, ஏகதேச அறிவு விளங்கிச் சுட்டியறிவும் நிலை ஆகிய ''சகலநிலை''யைக் குறிக்கும்.

இவ்விரு நிலைகளினின்றும் நீங்கி, பேரின்பப் பெருவெளியில், சிவபெருமானைக் கூடி நின்று, உயிர்கள் பேரின்பம் நுகரும் அந்நிலையில் உயிர்க்கு மீண்டும் சகல கேவல நிலைகள் ஏற்பட்டுவிடாமல் இருக்கும் பொருட்டு, திருவருளை விட்டுச் சற்றும் பிரியாமல், உயிர்கள் நிற்க வேண்டும்.

'விரவி விரவி' என்னும் அடுக்குத் தொடரில், முதலில் வரும் 'விரவி' திருவருளை விட்டுச் சிறிதும் பிரியாத நிலையையும் அடுத்து வரும் 'விரவி' திருவருளோடு இடைவிடாது கலந்து இருக்கவேண்டுவதன் இன்றியமையாமையையும் குறிக்கும். 'விரைந்து விரைந்து' எனும் அடுக்குத் தொடர், இருவகைப் பற்றுக்களுக்கும் மீண்டும் இடங்கொடாது இருக்க வேண்டுவதன் அவசியத்தைக் குறிக்கின்றது. (களிறு: 36,37).

## சிவபெருமானின் இயல்பு

21. சொல்லும் பொருள்களும் சொல்லா தனவும், அங்கு
அல்லனுய் ஆனுன்என்று உந்தீபற;
அம்பிகை பாகன் என்று உந்தீபற.

தெளிவுரை:

நமது அறிவுக்கு எட்டிய பொருள்களைச் சொற்களால் அளவுபடுத்திக் கூறுகின்றோம். அவ்வாறு கூறும் பொருள்கள் அனைத்தும் நம்மால் சுட்டி அறியப்படும் மாயா காரியங்கள் ஆகிய நிலையற்ற பொருள்களே ஆகும்.

நமது கற்பனைக்கும் எட்டாத முயலின் கொம்பு, ஆகாயத் தாமரை போன்று நமது சொற்களில் அடங்காத பொருள்கள், இல்பொருள்கள் ஆகும்.

இவ்விருவகைப் பொருள்களையும் போல் அல்லாமல், நமது மனோவாக்குகளுக்கு எட்டாத நிலையில், இறைவன் நிற்கின்றான்; என்றாலும், நம்மால் உணரத்தக்க நிலையில் 'சொரூப நிலை எனப்படும் சிறப்பியல்பு உடையவனாய் இருக்கிறான். நாம் அவனை உணரும் பொருட்டு, 'அருள் ஆகிய அம்மையோடு கூடி அம்மையப்பராய் இருக்கிறான். இஃது அவனது பொது இயல்ட ஆகும்.

இறைவன், மாயா கருவிகளைப் போன்று, நிலையற்றவனும் அல்லன்; ஆகாயத்தாமரை போன்று இல்பொருளும் அல்லன் 'அம்பிகை' என்பது, இறைவனது திருவருளைக் குறிக்கும் இறைவன் அருள் மயமாய் நிற்கிறான். (களிறு:30 முதல் 40 வரை)

## மெய்ப்பொருளைக் கூடுதற்கு வேறோர் உபாயம்

22. காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள்
ஆற்றுவது ஆற்றல் என்று உந்தீபற;
அல்லாதது அல்லதுஎன்று உந்தீபற:

தெளிவுரை:

மூச்சுப் பயிற்சியை ஒழுங்குபடுத்தி, மனத்தை அலைய விடாமல் செய்து, இறைவனுடைய திருவடியிலேயே அழுந்தி நிற்கப் பழக்கும் முறை இந்தப் பாடலில் கூறப்படுகிறது.

இப்பயிற்சியை ஆசிரியர் சொல்லித்தந்தபடியே செய்ய வேண்டும். இது பிராணயாமம் எனப்படும். இஃது அட்டாங்க யோகத்துள் ஒன்று ஆகும்.

சாதாரணமாகப் பன்னிரண்டு அங்குலம் காற்றை நாம் வெளியிடுகிறோம்; எட்டு அங்குலம் காற்றையே உள்ளே இழுக்கிறோம். இவ்வாறு நான்கு அங்குலம் விரயமாவதைத் தடுக்கும் பொருட்டு, 'கும்பகம்' என்னும் முறையில் உள்ளே இழுக்கும் காற்றை மனத்தில் நிறுத்தி வைத்துப் பின்பு வெளியிடவேண்டும். இவ்வாறு காற்றினை நிறுத்தி வைத்துப் போற்றுவதுபோல், இறைவனது திருவடியில் மனம் ஒன்றும்படி செய்யலாம். அதனால் சிவயோகம் சித்திக்கும்.

'கருத்தைக் கருத்தினுள் ஆற்றுவது' என்பது, உயிர்களின் கருத்துக்குக் கருத்தாய் இருக்கும் இறைவனது திருவடியில் கூடி இருத்தல் ஆகும். 'ஆற்றல்' என்பது, ஞான வெற்றியைக் குறிக்கும். 'அல்லாதது அல்லது' என்பது, இந்த வழியில் அல்லாது வேறு எந்த வழியிலும் மனத்தை அடக்க முடியாது என்பதைக் குறிக்கும். (களிறு:41).

## வீடு பேற்றுக்கு வழி

**23. கள்ளரோடு இல்லம் உடையார் கலந்திடில்**
**வெள்ள வெளியாம்என்று உந்தீபற;**
**வீடும் எளிதாம்என்று உந்தீபற.**

தெளிவுரை:

சிவபெருமான், உயிர்களின் பெத்த நிலையில் மறைந்துநின்றே உயிர்களுக்கு அறிவுறுத்துகிறான். எனவே 'கள்ளன்' எனப்படுகிறான். ''உள்ளம் கவர் கள்வன்'' என்பது சம்பந்தர் வாக்கு.

பெத்தநிலையில் உயிர்கள் உடம்போடு கூடி வாழ்கின்றன. உடம்பு உயிர்க்கு இல்லம் போன்றது, எனவே 'இல்லம் உடையார்' என்பது பெத்த நிலையில் உள்ள உயிர்களைக் குறிக்கும்.

இந்நிலையில் சிவபெருமானின் பெருங்கருணைத் திறத்தை எண்ணி உயிர்கள் நிற்குமாகில், உயிர்க்குள்ள மல மறைப்பு நீங்கி, இருவினை ஒப்பு வாய்க்கப் பெற்று, சத்திநிபாதம் எய்தி இறையருளில் கலக்கும். அந்நிலையில், மறைப்பாற்றலாகி நின்ற அருளாற்றல் உயிர்க்கு முத்திப் பேற்றினைத் தந்தருளும். உயிர் பேரின்பப் பெருவெளியில் நின்று வீடு பேற்றினை எளிதில் பெறும். ''வெள்ள வெளி'' என்பது, பரவெளி ஆகிய வியாபகத்தைக் குறிக்கும். (களிறு: 42,43).

## சீவன் முத்தர்க்கு உலக வாதனை இல்லை

**24.** எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண்டே, நின்றார்
விட்டார் உலகம்என்று உந்திபற;
வீடே வீடு ஆகும் என்று உந்திபற.

**தெளிவுரை:**

சூரியன், சந்திரன், நிலம், நீர், தீ, காற்று, வான், உயிர் என்னும் எட்டுப் பொருள்களின் அகத்தும், புறத்தும், சிவபெருமான் அது அதுவாய் வியாபித்து இருக்கிறான். இவ்வாறு இறைவன் எட்டு பொருள்களிலும் வியாபித்து இருப்பதை ''அட்டமூர்த்தம்'' என்கிறோம். இவற்றைத் திருமேனியாகக் கொண்டு திகழும் சிவபெருமானை இடைவிடாது பேரன்பினால் பற்றி நிற்பவர்கள், உலகப்பொருள்களோடு பொருந்தி நின்றார்களாயினும், அவற்றுள் சிவபெருமானையே காண்பதால், அவர்கள் உலகப்பற்றை அறவே விட்டவர்களே ஆவர். இவ்வாறு இறைப்பற்றுக் கொண்டு, உலகப் பற்றை அறவே நீத்தவர்களே, சீவன் முத்தர் எனப்படுவர் இவர்களுக்கு உலகத்தில் எந்தவிதத் துன்பமும் நேருவதில்லை இதனை '' இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை'' என்னும் அப்பர் வாக்கினால் அறியலாம். எனவே உலகப் பற்று அற்றுப் போகவே. திருவடிப் பற்றுடைய அவர்கட்குப் புகலிடம் வேறு இல்லை ஆகவே, இவ்வுலகில் வாழும்போதே அவர்கள் வீட்டின்பத்தை

அனுபவித்துக் கொண்டு இருக்கிறார்கள். 'வீடே வீடாகும்' என்பது இவ்வுலகே அவர்கட்குத் திருவடிப்பேறு ஆகும் என்பதை குறிக்கிறது. (களிறு: 44–45).

## இருவினை ஒப்பின் இன்றியமையாமை

25. சித்தமும் தீய கரணமும் சித்திலே
ஒத்ததே ஒத்தது என்று உந்திபற;
ஒவ்வாதது ஒவ்வாதுஎன்று உந்திபற.

**தெளிவுரை:**

உயிர்கள், கருவி கரணங்களின் துணைக் கொண்டு இவ்வுலகில் வாழ்கின்றன. இக்கருவி கரணங்களை இருவகைகளில் பயன்படுத்தலாம். அவற்றுள் ஒன்று புறம்; மற்றொன்று அகம். புறத்தே பயன்படுத்தும்போது, உலகப்பற்று உண்டாகும்; அகத்தே உள்முகப்படுத்தி இறைசிந்தனையுடன் பயன்படுத்தினால், இறைப்பற்று ஏற்படும். அஃதாவது அவற்றைப் பயன்படுத்தும்போது இறைவன் திருவருளின்றி இவற்றை நாம் பெற்றிருக்க முடியாது என்று எண்ணிப் பயன்படுத்தவேண்டும். அந்நிலையில் அக் கருவிகரணங்கள் பசுத்துவம் நீங்கி, சிவகரணங்களாக மாறும். அப்போது, ஆன்மா திருவருளோடு ஒத்துச் சென்று, ஒத்தது உணரும். அப்போது நல்வினைப் பயனாகிய இன்பத்தைக் கண்டு மகிழ்வதும், தீவினைப் பயனாகிய துன்பத்தைக் கண்டும் துவள்வதும் நிகழாது. இஃது இருவினை ஒப்பு எனப்படும்.

இவ்வாறு ஒத்தது உணராத உயிர்கள், இருவினை ஒப்பு பெறுவதில்லை. எனவே, திருவடியினைக் கூடுதல் என்பது அவ்வுயிர்களுக்கு ஒவ்வாதது ஆகும். 'சித்தம்' என்பது ஆன்மா. 'சித்து' என்பது திருவருள். 'தீயகரணம்' என்பது புறநோக்குள்ள கருவி கரணங்கள். 'ஒத்ததே ஒத்தது' என்ப்து இருவினை ஒப்புடையதே திருவடிப் பேற்றினைப் பெறும் என்பதாகும். 'ஒவ்வாதது ஒவ்வாது' என்பது இதற்கு எதிர்மறை ஆகும். (களிறு 46–50 வரை).

## சிவானுபவம் ஏற்படும் விதம்

**26.** உள்ளும் புறமும் நினைப்பு அறின், நின்உள்ளே
மொள்ளா அமுதாம் என்று உந்திபற;
முளையாது பந்தம் என்று உந்திபற.

**தெளிவுரை:**

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறிகளில், சரியை கிரியை ஆகியன புறத்தே செய்யும் நல்வழிபாடுகள், யோகம் அகத்தே செய்யும் வழிபாடு. இவ்விருவகை வழிபாடுகளும் பொதுவாக ஏகதேச நினைவோடு செய்யப்படுவனவாகும். 'ஏகதேச நினைவு' என்பது, கருவி கரணங்களோடு நாம் செய்கிறோம் என்னும் நினைவுடன் செய்வதாகும்.

அவ்வாறு ஏகதேச நினைவோடு செய்யும் நினைப்பை விட்டு, உள்ளும் புறமும் ஆகிய எவ்விடத்தும் சிவமே நிறைந்துள்ளது என்னும் வியாபக உணர்வுடன் சரியை முதலிய வழிபாடுகளைச் செய்ய வேண்டும். இவ்வாறு இறைவழிபாடுகளைச் செய்து வந்தால், எவராலும் பெறுதற்கு அரிய சிவானுபவம் உனக்கு உண்டாகும். அதன் பயனாக, ஏகதேச நினைவு ஆகிய குறையுணர்வினால் வரும்தொடர்பு ஒருபோதும் உன்னிடத்தில் தோன்றாது. ''மொள்ளா அமுது'' என்பது, எவராலும் முகந்து கொள்ளப்படாத சிவானுபவம் ஆகும். 'குறைவிலா நிறைவே கோதிலா அமுதே'' என்பது திருவாசகம். ''பந்தம் முளையாது'' என்பது, ஏகதேச நினைவு ஆகிய குறையுணர்வினால் ஏற்படும் பந்தபாசம். ''பந்தபாசம் அறுக்க வல்லார்களே'' என்பது சம்பந்தர் வாக்கு. (களிறு:51–52).

## உலகியல் துன்பம் நீங்கும் முறைமை

**27.** அவிழ இருக்கும் அறிவுடன் நின்றவர்க்கு
அவிழும், இவ்அல்லல்என்று உந்தீபற;
அன்றி க்விழாது என்று உந்தீபற.

**தெளிவுரை:**

இறைவன், இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்பவன்; எனவே அவனுக்கு அல்லல் இல்லை. உயிர்கள் பாசத் தொடர்பு காரணமாக அல்லல் உறுகின்றன. அல்லல் – துன்பம், உலகில் வாழும்போது துன்பங்கள் இல்லாமல் வாழ விரும்புபவர்கள், திருவருளின் வழியே அடங்கி நிற்கவேண்டும். அந்நிலையில், உயிர்க்குள்ள துன்பத்தையும் திருவருள் போக்கும்.

திருவருள்வழி அமைந்து ஒழுகும்போது, உயிர்க்குள்ள அறியாமை நீங்கும்; அறியாமையே துன்பத்திற்குக் காரணம். ஆதலின், அறியாமை நீங்கவே, அல்லலும் தீரும். வேறு எந்த வழியில் நின்றாலும், உயிர்க்குள்ள துன்பம் நீங்குதற்கு இடமே இல்லை. ''என்றும் அல்லல் தீரும்; அவலம் அடையாவே'' (1–26–11) என்பது சம்பந்தர் வாக்கு. ''அவிழ இருக்கும் அறிவு'' என்பது, ஊழ் வலியை வெல்ல வல்ல திருமுறை ஞானத்தைக் குறிக்கும். திருமுறைப் படனம் எல்லாத் தீங்குகளையும் நீங்கச் செய்யும். இஃது எனக்குற்ற அனுபவ உண்மை. உயிர்க்குள்ள அறியாமையைப் போக்கும் வல்லமை, திருவருளின் வடிவாகிய திருமுறைகளுக்கு உள்ளது. (களிறு:53–56 வரை).

## திருவருளில் உள்ள உறைப்பு

**28.** வித்தினைத் தேடி முளையைக் கைவிட்டவர்
பித்துஏறி னார்கள்என்று உந்தீபற;
பெறுவதுஅங்கு என்? பெணே உந்தீபற.

**தெளிவுரை:**

''வித்து'' என்பது, முத்திப் பேற்றிற்குக் காரணம் ஆகிய திருவருளைக் குறிக்கும். ''முளை'' என்பது, அத்திருவருளிலிருந்து வெளிப்பட்டுத் தோன்றும் ஞானத்தைக் குறிக்கும்.

வயலில் வித்தினை விதைத்தவர்கள், அந்த வித்திலிருந்து முளை தோன்றிய நிலையில் (In the sprout stage) அந்த முளையைப் பேணி வளர்ப்பார்கள். அவ்வாறே, திருவருளில் தோய்ந்து இருப்பவர்கள், ஞானம் தோன்றியபொழுது, அந்தத் திருவருள் ஞானத்தைக் கைவிட்டு விடாமல் அதில் உறைப்புடன் அழுந்தி நிற்பார்கள்.

அவ்வாறு திருவருள் ஞானத்தில் அழுந்தி நிற்பவர்கள், மயக்கத்தை தருகின்ற பிறவிக்கடலிலிருந்து கரை ஏறியவர்கள் ஆவர். எனவே, அதனைவிடப் பெறற்கு அரிய பேறு வேறு ஏதுமில்லை. 'பெண்ணே' என்ற சொல் இதன் அருமை தெரியாத பேதைமை உடையவர்களைக் குறித்து நின்றது. 'அங்கு' என்றது, பாசத்தால் விளையும் பிறப்பு நிலையைக் குறிக்கும். (களிறு:57).

## குருவின் துணையின்றிச் சிவத்தை உணர முடியாது

**29.** சொல்லும் இடம் அன்று; சொல்லப் புகும்இடம்
எல்லை சிவனுக்கு என்று உந்தீபற;
என்றால் நாம் என்செய்கோம் உந்தீபற.

**தெளிவுரை:**

சிவபெருமான் முழுநிறைவுடைப் பொருள். அஃதாவது அங்கு இங்கு எனாதபடி எங்கும் ஒளிமயமாய் வியாபித்து நிற்பவன். உயிர்களாகிய நாம் ஏகதேச அறிவினை உடையவர்கள். எனவே, சிவபெருமானுடைய எல்லையை, நம்முடைய குறைந்த உணர்வினால் ஆகிய சொற்களைக் கொண்டு அளந்து அறிய முடியாது.

சிவபெருமானே குருவாக எழுந்தருளி வந்து, அவனது வியாபகத்தை நமக்கு உணர்த்தினால் அன்றி அவனது நிறைவுடைமையை நம்மால் அறிந்து, கூடுதல் முடியாது. ஆக, அவனது அருளைத் துணையாகக் கொண்டு சென்றே அவனை அடைய முடியும். இஃது இவ்வாறு இருக்கையில், நமது அறிவைக் கொண்டு நம்மால் என்ன செய்துவிட முடியும்? எதுவும் முடியாது என்றபடி, 'சொல்லப் புகும் இடம்' என்பது, வாக்கு இறந்த இடம் ஆகும். (களிறு 58–62).

## சிவபெருமானை எந்நிலையிலும் கூடி இன்புறலாம்

**30.** வீட்டில் இருக்கில் என்? நாட்டிலே போகில்என்?
கூட்டில் வாள் சாத்தி நின்று உந்தீபற;
கூடப்படாதது என்று உந்தீபற.

தெளிவுரை:

திருவருள் ஞானத்தைத் துணைஎனக் கொள்ளாமல், துறவறத்தில் நின்ருல் என்ன? மனையறத்தில் நின்று, சிவபூசை முதலியன நடத்தி, மூர்த்தி தலம் தீர்த்தம் என்று பல்வேறு தலங்களுக்குச் சென்று தரிசித்தல் என்ன? திருவருளை விட்டு, எந்நிலையில் நின்ருலும், சிவபெருமானை அடைய முடியாது. திருவடி ஞானம் என்பது ஒரு வாளைப் போன்றது. ஆன்மா, அவ்வாளினைச் சாத்தும் உறைபோன்றது. இங்கு ஆன்மாவைக்கூடு (உறை) என்ருர்.

திருவருளின் துணை இன்றி, வேறு எந்த வகையாலும், சிவானுபவம் ஆன்மாவுக்குக் கூடாது என்பதைக் ''கூடப்படாதது'' என்று கூறினர். எனவே, ஆன்மாக்கள் துறவற நெறியில் நின்ருலும் சரி, இல்லற நெறியில் நின்ருலும் சரி எந்நிலையில் நின்ருலும், திருவருள் துணைக்கொண்டு நின்ருலன்றி சிவபெருமானைக் கூடி இன்புறமாட்டா. (களிறு: 63–64).

## சித்தாந்த சைவத்தின் சிறப்பு

**31.** சாவிபோம் மற்றைச் சமயங்கள் புக்குநின்று
ஆவி அருதே என்று உந்திபற;
அவ்வுரை கேளாதே உந்திபற.

**தெளிவுரை:**

உலகத்தில் நூற்றுக் கணக்கான மதங்கள் உள்ளன. அவற்றின் பெரும்பாலானவற்றின் தத்துவக் கொள்கைகள் தருக்கநெறி முறைகளில் அமையவில்லை. எனவே, அம்மதங்கள் உயிர்க்கு உறுதி பயப்பனவாக இல்லை. சித்தாந்த சைவ சமயம் ஒன்றே, உயிர்க்குப் பேருதவி புரிந்து வரும். இறை இயல்பையும், அறியாமைக்குட்பட்ட உயிர்களின் இயல்பையும், உயிர்க்கு அறியாமையைச் செய்யும் தளை இயல்பையும் குறித்துக் காரண–காரிய இயைபுபடுத்திப் பகுத்தறிவுக்கு ஏற்ப, கொள்கைகளைக் கொண்டிருக்கிறது.

எனவே, மற்ற சமயங்களில் உயிர்க்கு உறுதி பயக்கும் உண்மைகள் இல்லாமையால், அச்சமயங்கள் நெற்பதரைப் போன்றவையாகும். ஆதலினுல், உயிர்க்கு உறுதி விளைவிக்காத அச்சமயங்களைச் சார்ந்து, நற்பயனை இழந்துவிடல் ஆகாது. அது மட்டுமன்று அச்சமயங்களின் கொள்கைகளையும் கேட்டு, காலத்தை வீணுக்கி விடலாகாது. இவ்வுண்மையைக் கருத்தில் கொண்டே சிவஞானபோதம் அவையடக்க வெண்பாவில், ''கேளாம் புறன்'' என்றருளிச் செய்தார் மெய்கண்ட தேவநாயஞர். (களிறு:65 முதல் 68 வரை)

## சீவன் முத்தர்க்கு உலக வாதனை தாக்குதல் இல்லை

**32.** துரியம் கடந்த இத் தொண்டர்க்குச் சாக்கிரம்
துரியமாய் நின்றது என்று உந்திபற;
துறந்தார் அவர்கள் என்று உந்திபற.

**தெளிவுரை:**

'துரியம் கடந்த நிலை' என்பது, உயிர்களின் சுட்டறிவுக்கு எட்டாத ஒளிமயமான சிவபோகத்தில் திளைத்திருப்பது. 'துரியநிலை' என்பது, மலவாசனை சற்றும் இன்றி, பேரானந்தப் பெருவொளி தோன்றும் இடம். இதனை 'சுகபிரபை' என்றும் கூறுவர்.

சீவன் முத்தர்கள் ஆகிய சம்பந்தர், அப்பர் போன்ற பெரியவர்கள் துரியங்கடந்த நிலையிலிருந்து, இறைவன் ஆணைப்படி நம்பொருட்டு இவ்வுலகில் அவதரித்து வாழ்ந்த காலத்தில், துரிய நிலைக்கு இறங்கி வந்தவர்கள். இங்குச் சுட்டி அறியப்படும் நிலையிலும் அவர்கள், நம்மைப் போன்று விழிப்பு நிலையில் இருந்தாலும், உலகப் பொருள்களில் தோய்வு இன்றி நின்றுர்கள், எனவே, ''துரியமாய் நின்றது'' என்றது.

'துறவிகள்' என்பவர்கள், ''யான், எனது'' என்னும் செருக்கு அறவே நீங்கப் பெற்று இறைவன் திருவடியையே சிந்தித்து இருப்பவர்கள் ஆவர். அத்தகைய நிலை, நின்மல துரியம் ஆகிய தற்போதம் இழந்து நிற்கையிலேயே ஏற்படும். அவர்களே உண்மையில் துறந்தவர்கள் எனப்படுவார்கள். அத்தகையோரே ஞானிகள் எனப்படுவர். ''நடப்பதெல்லாம் நம்பன் செயல்'' என்று இருப்பார்கள். (களிறு:69 முதல் 75 வரை)

## சிற்றின்ப நுகர்வு பேரின்ப நுகர்வாக அமைதல்

33. பெற்றசிற் றின்பமே பேரின்பமாம் அங்கே,
முற்றவரும் பரிசு உந்திபற;
முளையாது மாயை என்று உந்திபற;

தெளிவுரை:

குருநாதர் அருளால், மெய்ப் பொருளை உணர்ந்த நிலையில் எடுத்த இவ்வுடம்பில் நின்று உலக போகங்களை நுகர நேரும்போதும் ஆன்மா மெய்ப் பொருளையே நோக்கி நிற்றலால், உலக இன்பமாகிய சிற்றின்பமும் பேரின்பமாகவே வந்து முடியும். சிற்றின்பம் நுகரும் நிலையிலும், ஆன்மா சிவத்துடன் ஒன்றித் தற்போதம் இழந்து நிற்றலால், அந்தச் சிற்றின்பப் பயன் ஆன்மாவை அணுகாது. அதனை இறைவனே ஏன்றுக்கொள்வான். இதனையே, ''முற்றவரும் பரிசு'' என்கிறார்.

அத்தகைய ஆன்மாக்களின் கருவிகரணங்கள் எல்லாம் சிவகரணங்களாக அமைவதால், அவர்களுக்கு மீண்டும் மாயையால் வரும் பிறப்பு விளையாது. இதனையே ''முளையாது மாயை'' என்றார்.

இவ்வுண்மையைச் சுந்தரர் பெருமான் வரலாற்றில் வைத்துத் தெளிவாக உணரலாம். ''அங்கே'' என்ற சொல், ஆன்மா மெய்ப்பொருளை நோக்கி நிற்கும் அந்நிலையில் என்னும் பொருளைத் தரும். (களிறு:76).

## இறைவன் பேரின்பம் அருளும் முறைமை

34. பேரின்ப மான பிரமக்கிழத்தியோடு
ஓர் இன்பத்து உள்ளான் என்று உந்திபற
உன்னையே ஆண்டான் என்று உந்திபற.

தெளிவுரை:

சிவபெருமான் அருட்சத்தியுடன் என்றும் பிரிப்பின்றி விளங்குகிறான். அருட்சத்தி பேரின்ப வடிவினை உடையது. அஃதே அவனுடைய குணமும் ஆகும். ''பிரமக் கிழத்தி'' என்பது, யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையனுக்கே உரிய

அருட்சக்தியைக் குறிக்கும். அருளேயே திருமேனியாக உடைய இறைவன், என்றும் பேரின்ப நிலையில் இருக்கிறுன். அத்தகைய இறைவன், அவனைச் சார்ந்து நிற்பவர்க்கும், அத்தகைய பேரின்பத்தையே வழங்குகிறுன்.

''ஆண்டான்'' என்பது, எல்லா உயிர்களுக்கும் தலைவனுக உள்ளவன் என்பதைக் குறிக்கும். ''உன்னையே'' என்ற சொல், அவனைச் சார்ந்து நின்றவர்க்கே பேரின்பத்தை வழங்குகிறுன் என்பதைக் குறிக்கும். உயிர்கள் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடையன. இறைவனைச் சார்ந்து நிற்கும் உயிர்களே, பேரின்பத்தைப் பெறுகின்றன. பிற உயிர்கள் அவ்வின்பத்தைப் பெறுவதில்லை. நீ அவனைச் சார்ந்து நிற்பதால், பேரின்பத்தைப் பெறுகிறுய் என்னும் உண்மையை விளங்கும் பொருட்டே, 'உன்னையே ஆண்டான்'' என்ருர். இறைவன் இவ்வாறு தன்னைச் சார்ந்து நிற்கும் ஆன்மாக்களுக்கே பேரின்பத்தை வழங்குகிறுன். (களிறு:77).

## இறைச் சார்புக்கு ஓர் உவமை

**35.** **பெண்டிர்பிடிபோல, ஆண்மக்கள் பேய்போலக்**
**கண்டாரே கண்டார்என்று உந்திபற**
**காணுதார் காணுர் என்று உந்திபற.**

**தெளிவுரை:**

பேயினுல் பிடியுண்ட பெண் தன்னைமறந்து, தன்செயல் அற்று, அப்பேயின் செயலே விளங்க நிற்பாள். அந்தப் பெண்ணைப் பிடித்த பேயும், அந்தப் பெண்ணின் செயல்களை மாற்றித், தன்னுடைய செயல்களை அப்பெண்ணிடத்து விளங்கச் செய்து அவளோடு ஒட்டி இருக்கும்.

அதுபோல, இறைச்சார்புற்ற ஆன்மாவும், தன்னை மறந்து, தன்செயல் அற்று, திருவருட் செயலே தன்னிடத்து விளங்கித் தோன்றும். அவ்வான்மாவை ஆட்கொள்ளும் சிவபெருமானும் அவ்வான்மாவின் செயல்களை மாற்றித் தன்னுடைய செயல்களை அவ்வான்மாவிடத்து விளங்கச் செய்கிறுன்.

இவ்வாறு சிவபெருமானை உள்ளபடி கண்டு அவனோடு ஒன்றி நிற்பவர்களே, அவனை உள்ளவாறு காண்பவர் ஆவர். இவ்வாறு காணாதவர்கள், எக்காலத்தும் அவனைக் காணார்.

உயிரைப் பெண்ணாகவும் இறைவனை ஆணாகவும் உவமை கூறியிருப்பதற்குக் காரணம், உயிர்க்கு இன்பம் வழங்கி உயிர்களை ஆள்பவன் என்பதனால் ஆகும். (களிறு:78,79).

## திருவருள் நிலையின் சிறப்பு

**36.** **நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடின்**
**நாலாம் நிலையாம் என்று உந்திபற**
**நாதற்கு இடம்அது என்று உந்திபற.**

**தெளிவுரை:**

''நாலாய பூதம்'' என்பது, ''மண் நீர் நெருப்பு காற்று விண்'' ஆகிய ஐம்பெரும் பூதங்களுள் நான்காவது நிலையில் உள்ள காற்றினைக் குறிக்கும். ''நாதம்'' என்பது மூலாதாரத்தில் பிரணவமாகப் பதிந்துள்ள சூக்குமை வாக்கு ஆகிய நாதத் தத்துவத்தைக் குறிக்கும்.

நாலாம் பூதம் ஆகிய காற்றினால் உந்தப் பெறுகின்ற, சூக்குமவாக்கு ஆகிய நாதத் தத்துவமும் ஒன்றி நிற்குமாயின், அந்நிலையே 'நின்மலதுரியம்' ஆகிய நாலாம் நிலையாகும். அதுவே ஆன்மா திருவருள் நிலையில் நிற்பதாகும். அந்நிலையே சிவபெருமான் எழுந்தருளி இருக்கத் தக்க இடமும் ஆகும். எனவே, ஆன்மா நின்மல துரியத்தில் நிற்கும்போது, சிவபெருமானைக் கூடுதற்கு இடமாக அஃது உள்ளது. இவ்வுண்மையையே ஞானசம்பந்தப் பெருமான்

**''ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி, ஒண்சுடர்ஞான**
**விளக்கினை ஏற்றி, நன்புலத்து ஏனைவழி திறந்து**
**ஏத்துவார்'' (3–22–3).**

என்று அருளிச் செய்தார்.

''நின்மல துரியம்'' என்பது, மலவாசனை சற்றும் இன்றி வியாபக அறிவு விளங்கித் தோன்றும் நிலை ஆகும். (களிறு:80-81).

## செந்நெறியின் இயல்பு

**37.** **சென்ற நெறிஎல்லாம் செந்நெறி ஆம்படி**
**நின்ற பரிசுஅறிந்து உந்திபற;**
**நீ,செயல் செய்யாதே உந்திபற.**

**தெளிவுரை:**

''நெறி எல்லாம்'' என்பது, உலகில் உள்ள பல்வேறு சமயங்களைக் குறிக்கும். 'நெறி' என்னும் சொற்கு, இங்குச் 'சமயம்' என்று பொருள். ''செந்நெறி'', சிவநெறியைக் குறிக்கும்.

உலகில் உள்ள எல்லாச் சமய நெறிகளும் ஏணிப்படிகளாக அமைந்துள்ளன. அவை அனைத்தும் முடிவில் தன்னிடத்தே வந்து சேரும்படி எல்லோரையும் 'செந்நெறி' ஆகிய சிவநெறிக்கே உரியவராகத் திருத்திஅருள்புரிய வல்லவன் சிவபெருமான். எனவே, எல்லாச்சமயங்களிலும் உள்ள எல்லா உயிர்களுக்கும் ஒரே தன்மையில் அருள்சுரப்பவன் நமது சிவபெருமான் என்பதை நீ அறிவாயாக. ''நின்ற பரிசு அறிந்து'' என்பது சிவபெருமான் இந்த நிலையில் இருக்கிறான் என்பதை நீ அறிவாயாக என்பதாகும். எனவே, இத்தகைய திருவருட்டிறத்தையறிந்து நீ எதையும் தன் முனைப்பினால் செய்வதைத் தவிர்ப்பாயாக என்கின்றார். சிவநெறிக்கு வரும் தகுதியுள்ளவன் வந்து சேர்வான் என்பது கருத்து. *(களிறு:83–83)*.

## திருவருளின் வழி அடங்கி நிற்றல்

**38.** **பொற்கொழுக்கொண்டு வரகுக்கு உழுவதுஎன்?**
**அக்கொழு நீ அறிந்து உந்திபற**
**அறிந்துஅறி யாவண்ணம், உந்திபற.**

**தெளிவுரை:**

பொன்னால் செய்த கலப்பையைக் கொண்டு, யாரும் நிலத்தை உழமாட்டார்கள். அதனால், பொன் தேய்வடையும்; நிலமும் பண்படாது. வரகு, பொன்னைவிட மதிப்பு குறைந்தது. எனவே வரகு பயிரிடுவதற்காகப் பொன்னால் கலப்பை செய்து உழுவது அறிவற்ற செயலாகும். ''பொற்கலப்பை'' திருவருளுக்கு

உவமை. ''வரகுக்கு உழுவது'' திருவருளின் பெருமை அறியாமல், கிடைத்த பிறப்பை வீணுக்குவதற்கு உவமை.

எனவே திருவருளின் பெருமையை அறிந்து, தன்முனைப்பு அற்றுத் திருவருளின் வழி அடங்கி நின்று ஒழுகுதல் வேண்டும். 'அறிந்து' என்பது திருவருளின் பெருமையை உணர்ந்து என்பதைக் குறிக்கும். ''அறியாவண்ணம்'' என்பது, உயிரறிவு முனைத்துத் தோன்ருதபடி திருவருளின் வழி அடங்கி நிற்பதைக் குறிக்கும். முதலில் வந்த ''அறிந்து'' என்பது, பிறப்பை வீணுக்கக்கூடாது என்பதைத் தெளிந்து என்பதைக் குறிக்கும். (களிறு:84).

## சிவபானையில் நிற்றல்

**39.** அதுஇது என்னுது அனைத்துஅறிவு ஆகும்
அதுஇது என்று அறிந்து உந்தீபற
அவிழ்ந்த சடையான் என்று உந்தீபற

**தெளிவுரை:**

அது என்றும் இது என்றும் ஒருபொருளைச் சுட்டி அறியும் உயிர்களைப் போல் அன்றி, எல்லாப் பொருள்களையும் ஒருங்கே அறியும் பேரறிவுடைப் பொருளாக இருப்பவன், சிவபெருமான், அத்துணை பெரும் பொருளாகிய சிவபரம்பொருளே, குருவடிவில் எழுந்தருளி வந்து, நமக்குப் பேரருள் புரிந்து உயிர்க்கு அறிவுறுத்துகிருன் என்பதை அறிவாயாக.

சிவபெருமானின் சடை, ஞானத்தை உணர்த்துகின்றது. ஞானத்திரளாய் நிற்கும் அவன், ''சடையான்'' எனப்படுகிருன். அவனது ஞானம் எங்கும் பரந்து விரிந்துள்ள சிறப்பை விளக்கவே ''அவிழ்ந்த'' சடையான் எனப்பட்டான். எனவே, ''அவிழ்ந்த சடையான்'' என்ற தொடர், ஞானமே வடிவாகிய சிவபெருமானின் வியாபகத் தன்மையைக் குறித்து நின்றது.

முதலில் உள்ள ''அது இது'' என்பது, உயிர்களால் சுட்டியறிப்படும் பொருள்களைக் குறிக்கும். அடுத்துள்ள ''அது இது'' என்பது, குருவடிவில் வந்த அவன், வியாபகப் பொருள் என்பதைக் குறிக்கும். (களிறு:85 முதல் 91 வரை).

## ஆன்மா சிவம் ஆதல்

40. அவன் இவன் ஆனது அவன் அருளால் அல்லது
இவன் அவன் ஆகான் என்று உந்தீபற
என்னும் இவனே என்று உந்தீபற

**தெளிவுரை:**

அவன்-சிவபெருமான்; இவன்-ஆன்மா, உயிர்க்குள்ள ஆணவமல மறைப்பைப் போக்கும் பொருட்டு, சிவபெருமான் உயிர்க்குத் தனுகரணபுவன போகங்களை அருளிச் செய்தான். அவனருள் இன்றி உயிர்கள் ஏகதேச அறிவையேனும் பெற்றிருக்க மாட்டா.

உயிரின் பெத்த நிலையில் உயிர்க்கு உதவியது இறைவன் அருளே ஆகும்; அதே அருள்தான் ஆன்மாவின் முத்தி நிலையிலும் ஆன்மாவுக்குப் பேருதவி புரிகின்றது. ஆக, இறைவன் திருவருளின் உதவியின்றி, ஆன்மா சிவமாதல் இல்லை என்பது பெறப்படும். அன்றும், இன்றும் என்றும் உயிர் திருவருளின் உதவியின்றி உய்வதில்லை.

ஆன்மாவைச் சிவம் ஆக்கி, சிவானந்தத்தை அனுபவிக்கச் செய்யும் திருவருள் ஒன்றே, ஐந்தொழில் ஆற்றுகின்றது. சிவானுபவம் ஒன்றினுக்கு மட்டுமே உரிய ஆன்மா ஐந்தொழில் ஆற்றுவதில்லை. எனவே, ஆன்மா என்றும் சிவபெருமானுக்கு அடிமையே ஆகும். 'இவன் அவன் ஆகான்' என்பது, உயிர் என்றும் சிவம் ஆகாது; அது என்றும் சிவத்திற்கு அடிமையே என்பதைக் குறிக்கும். (களிறு:92).

## அஞ்ஞானமே பேரின்ப நுகர்வுக்கு தடையாய் இருப்பது

41. முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்து
அத்தி பழுத்தது என்று உந்தீபற
அப்பழம் உண்ணுதே உந்தீபற.

**தெளிவுரை:**

முத்தி – முத்தி ஆகிய கனி
முதலுக்கு (விளைவதற்கு) முதல் ஆகிய ஆன்மா.

மோகக்கொடி – அஞ்ஞானம் என்னும் கொடி
அத்தி பழுத்தது – 'அவா' என்னும் பழம் பழுத்தது.

ஆன்மா என்னும் கொடியிலே, அஞ்ஞானம்என்னும் கொடி, பல விதமாகப் படர்ந்து மூடிக்கொண்டு, 'அவா' என்னும் கொடி, பழுத்தது. பிறவிக்கு வித்து ஆகிய அக்கனியை ஆன்மா உண்ணக்கூடாது. அவ்வாறு 'அவா' என்னும் கனியை ஆன்மா உண்ணுமல் இருந்தால்தான், முத்தி ஆகிய கனி விளையும்.

முத்திக்கனி பழுக்க வேண்டிய ஆன்மா என்னும் முதற்கொடியிலே, மோகம் என்னும் கிளைக்கொடி படர்ந்து, ஆன்மா என்னும் முதற்கொடியை மூடி மறைத்தது; அதன் பயனுக 'அவா' என்னும் பழம் பழுத்தது. பிறவிக்கு வித்து ஆகிய 'அவா' என்னும் கனியை ஆன்மா உண்ணுமலிருந்தால், முத்திக்கனி (ஆன்மாவுக்குக் கிட்டும்) விளையும். இச்செய்யுளின் உருவக அணி அமைப்பு கூர்ந்து நோக்குதற்குரியது. (களிறு:93–94).

## இறைவனுடன் ஒன்றி நிற்கும் முறைமை

**42.** **அண்டம் முதலாய் அனைத்தையும் உட்கொண்டு**
**கொண்டத்தைக் கொள்ளாதே உந்திபற**
**குறைவற்ற செல்வம் என்று உந்திபற.**

**தெளிவுரை:**

நிலம் முதல் நாதம் ஈருன முப்பத்தாறு தத்துவங்களிலும் திரண்டுள்ள எல்லாப் பொருள்களிலும், அது அதுவாய்க் கலந்து நிற்கும் சிவபரம்பொருளை இடைவிடாது எண்ணி, அதன் வியாபகத்தில் உயிரின் உணர்வை விரிவடையச் செய்தல் வேண்டும்.

தனு கரண புவன போகங்கள் ஆகிய இந்த மாயா காரியங்களிலேயே உள்ளத்தைப் பதித்துக் காலத்தை வீணுக்கக் கூடாது; அவற்றின் வழியே செல்வதை விட்டுவிடவேண்டும். இதனையே, ''கொண்டதைக் கொள்ளாமை'' என்னும் தொடர் உணர்த்துகின்றது.

உயிர்க்கு குறைவற்ற செல்வம் என்பது, மாயாகாரியங்களை விட்டு ஒழித்தலும் சிவபெருமானையே பற்றி நிற்றலும் ஆகும். மாயா காரியங்கள் குறைவினையுடைய செல்வம், ''குறைவிலா நிறைவு'' ஆகிய சிவபெருமான் ஒருவனே குறைவற்ற செல்வம். ''கொண்டதை'' எனக் கூறுதற்குரிய சொல், ''கொண்டத்தை'' எனத் திரிந்து நின்றது. களிறு:(95–96)

## பயனற்ற உயிர்கள்

**43. காயத்துள் மெய்ஞ்ஞானக்கள், உண்ணமாட்டாதே**
**மாயக்கள் உண்டார் என்று உந்திபற**
**வறட்டுப் பசுக்கள் என்று உந்திபற**

**தெளிவுரை:**

சிவபெருமான், நமது உடலையே இடமாகக்கொண்டு எழுந்தருளி உள்ளான். இதனை, **''இறைவனே, நீ என் உடல் இடம் கொண்டாய்''** என்னும் மணிவாசகம் மெய்ப்படுத்துகின்றது. எனவே, உயிர்கள் தத்தம் உடலில் இடங்கொண்டருளிய சிவபெருமானின் திருவடித் தாமரையில் ஊற்றெடுத்துப் பெருகும் தேனை உண்டு, இரண்டறக் கலந்து நிற்கவேண்டும். இந்த மெய்ஞ்ஞானத்தேனை உண்ணுமல், மாயா காரியமாகிய உலக வாழ்வை இன்பம் எனக் கருதி மயக்கம் உற்றவர்கள், பயனற்றவர்கள் ஆவர். அஃதாவது பால் சுரக்காத வறட்டுப் பசுக்களைப்போல, அவர்கள் பிறவிப் பயனை அறியாமையால், தமக்கும் பிறர்க்கும் பயன்படாமல் ஒழிவர்.

''மெய்ஞ்ஞானக்கள்'' என்பது, சிவபெருமானுடைய திருவடிஞானம் ஆகிய அருளமுதம் ஆகும். ''மாயக்கள்'' என்பது, நிலையில்லாத மாயாகாரியங்கள் ஆகிய தனுகரண புவன போகங்கள் ஆகும். இந்த இடத்தில்

**''காயத்துள் அமுதுஊற ஊற, நீ கண்டு கொள்**
**என்று காட்டியசேய மாமலர்ச் சேவடி'' (581)**

என்னும் மணிவாசகம் நினைவுகூர்தற்குரியது. (களிறு:97–99).

## குருநாதரை நன்றியுணர்வுடன் வாழ்த்துவது

**44.** சிந்தையின் உள்ளும், என் சென்னியினும் சேர
வந்தவர் வாழ்க என்று உந்தீபற
மடவாள் உடனே என்று உந்தீபற

**தெளிவுரை:**

சிவபெருமான், குருமூர்த்தமாக எழுந்தருளி வந்து தன் திருவடித் தாமரை மலர்களை, எனது தலை உச்சியின்மீதும், எனது சிந்தையின் மீதும் சூட்டியருளினன். அவ்வாறு குருவடிவாக வந்தருளிய சிவபெருமானை வாழ்த்துகிறேன். ''கோகழி ஆண்ட குரு மணிதன் தாள் வாழ்க'' என்பது மணிவாசகம். எனக்குத் திருவடி சூட்டியருளிய எம்பெருமான், என்னைப் போன்றோர்க்கும் மெய் உணர்வு அளித்தருளிச் செய்யும்படி அவரை வாழ்த்துகிறேன். அவன் அருள் வடிவாக எழுந்தருளியுள்ளமையால் அருளாகிய அம்மையுடனே இன்றுபோல் என்றும் இருந்து வாழ்வானாக.

உச்சியில் திருவடி சூட்டியருளியது, தீக்கையின்போது ஆசிரியத் திருமேனி கொண்டு எழுந்தருளியபோது, சிந்தையில் திருவடி சூட்டியருளியது, அடியேன் தியான நிலையில் அமர்ந்து இருக்கும்போது, முன்னது உருவத் திருமேனியும் பின்னது அருவத் திருமேனியும் ஆகும். (களிறு–100).

## நூலின் பெருமை உணர்த்துவது

**45.** வையம் முழுதும் மலக்கயம் கண்டிடும்
உய்யவந்தான்; உரை உந்தீபற
உண்மை உணர்ந்தார் என்று உந்தீபற.

**தெளிவுரை:**

ஆன்மாக்கள் ஈடேறும் பொருட்டு இந்நூலைத் திருவாய் மலர்ந்தருளியவர், உய்யவந்த தேவநாயனார் ஆவர். இந்நூலினைக் குரு முகமாகக் கேட்டு சித்தாந்த சைவ மரபு அறிந்து, அவ்வழியே ஒழுகுதல் வேண்டும். அவ்வாறு ஒழுகுபவர் அனைவர்க்கும் இந்நூல் மும்மல நீக்கத்தைச் செய்யும்.

''வையம் முழுதும்'' என்பது உலக மக்கள் அனைவர்க்கும் என்பதாகும். ''மலக்கயம்'' என்பது, ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலத் தொடர்பினை நீக்குதலைச் செய்வது ஆகும். ''கண்டிடும்'' என்பது (உலக மக்கள் அனைவரும்) காண்பர் என்பதாகும்.

ஆக, இந்நூலைக் கற்று உணர்ந்தவர்கள் மெய்ப்பொருளின் உண்மையினை உணர்ந்து பிறவிப் பெருங்கடலில் நீந்தித் திருவடி நெடுங்கரையில் சேர்ந்து பேரின்பம் நுகர்ந்து இருப்பார்கள். ''உண்மை உணர்ந்தார்'' என்பது, முப்பொருள் உண்மை உணர்ந்து திருவடிப் பேற்றின் உண்மையை உணர்வார் என்பதைக் குறிக்கும். இப்பாடற் கருத்தைத் திருக்களிற்றுப்படியார் 96 ஆம் பாடலில் வைத்துக் காணலாம்.

திருவுந்தியார் தெளிவுரை நிறைவுற்றது



உ

சிவமயம்

# திருக்களிற்றுப்படியார்

## சிவபெருமான் அம்மையப்பரே

1. அம்மைஅப்பரே, உலகுக்கு அம்மைஅப்பர் என்று அறிக;
அம்மை அப்பர் அப்பரிசே வந்து அளிப்பர் – அம்மைஅப்பர்
எல்லா உலகுக்கும் அப்புறத்தார்; இப்புறத்தும்
அல்லார்போல் நிற்பார் அவர்.

**தெளிவுரை:**

'ஆதிபகவன்' ஆகிய சிவபெருமான், தன்னில் பிரிவில்லாத உமையம்மையைத் தன்னுள் அடக்கியே என்றும் நிற்கிறுன். எனவே, உலகில் உள்ள உயிர்கள் எல்லாவற்றிற்கும் அவனே தாயும் தந்தையும் என்பதைத் தெளிவாக உணர்வாயாக. சிவபெருமான் தன் அருள் ஆகிய, சத்தியுடன் எழுந்தருளி வந்து உயிர்களின் ஆணவமலப் பிணியை நீக்கி, வீடுபேற்றினேயும் அருளிச் செய்கின்ருன்.

''மாதொரு பாகன்'' ஆகிய சிவபெருமான், இவ்வாறு உலகங்களோடும் உயிர்களோடும் கலந்து உள்ளான்; ஆயினும் அனேத்து உலகங்களுக்கும் உயிர்களுக்கும் அப்பாற்பட்டு அவற்றைக் கடந்தும் இருக்கிருன். அந்நிலேயிலும் இவ்வுலகையும் உயிர்களேயும் இயக்கும் பொருட்டு இவற்ருேடு கலவாதார்போல் நீக்கமற நிற்கின்றான்.

தன் நிலேயில் 'சிவம்' ஆக நிற்கும் இறைவன் உயிர்களின் பொருட்டு 'அருள்' ஆகவும் நிற்கிருன். சம்பந்தப் பெருமான், ''அம்மே அப்பா'' என்று அழுதருளியது இங்கு நினேவுகூர்தற்கு உரியது.

## சிவபெருமானின் திருவருளில் தோய்தல்

2. தம்மில் தலைப்பட்டார்பாலே தலைப்பட்டுத்
தம்மில் தலைப்படுதல் தாம் உணரில் – தம்மில்
நிலைப்படுவர் ஓர் இருவர் நீக்கிநிலை ஆக்கித்
தலைப்படுவர் தாம் அத்தலை.

தெளிவுரை:

முற்பிறப்புக்களில் செய்த தவத்தின் பயனாக அருளையே திருமேனியாகக்கொண்டு, சிவபெருமான் குருவடிவில் நம் முன்பு எழுந்தருள்வான், அந்நிலையில் நாம் அக்குருமூர்த்தியோடு பொருந்தி நின்று, பக்குவம் வாய்க்கப்பெற்ற நிலையில், அவர் அருளாலே தெளிந்து உணர்தல் வேண்டும். அவ்வாறு உணர்வோமாயின், அம்மையப்பர் ஆகிய சிவபெருமான் நம்மிடத்தில் நிலைபெற்று இடம் கொள்வான்.

அவ்வாறு அவன் நம்மிடம் இடம்கொள்ளும்போது, தனு கரண புவன போகம் ஆகிய பாசத் தொகுதியை நம்மிடமிருந்து அவன் நீக்குவான், நீக்கித் திருவருளில் நம்மை நிலை நிறுத்தி, நமக்குப் பேரின்பப் பெருநிலையை உணர்த்துவான். ஆக சிவபெருமானின் திருவருளில் பக்குவமுள்ள ஆன்மாவைக் கூடுமாறு செய்யும் முறை இஃதே ஆகும்.

'பக்குவம்' என்பது, உணர்த்தியதை உணர்த்தியவாறு உணர்த்தியபோதே உணர்வதுவே ஆகும்.

'தலைப்படுதல்' என்பது, சிவபெருமான் ஆன்மாவில் பொருந்தி பிரிவற நின்று பேரின்பம் நல்குதல் ஆகும்.

'தாம் உணர்தல்' என்பது குருநாதர் உணர்த்தியதைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து ஒன்றுபட்டு உணர்தல் ஆகும்.

## இந்த நூல் வந்த வரலாற்றினைக் கூறுதல்

3. என்அறிவு சென்ற அளவில் யான் இன்று அறிந்தபடி
என் அறிவிலார் அறிக என்று ஒருவன் – சொன்னபடி
சொல்லக்கேள் என்றுஒருவன் சொன்னான்; எனக்கு அதனைச்
சொல்லக்கேள் யான், உனக்கு அச்சொல்.

தெளிவுரை:

'என் அறிவு' என்பது, நான் இதனை அறிந்தேன் என்று சுட்டுணர்வினுல் அறிதல் ஆகும். அத்தகைய சுட்டுணர்வு கெட்டு, குருநாதர் அறிவித்தபோது, வியாபக உணர்வில் தலைப்பட்டு, அவர் எனக்கு அறிவித்தபடியே இங்குக் கூறுகிறேன். 'என் அறிவு' என்னும் சுட்டுணர்வு நீக்கப்பெற்ற பக்குவமுடைய ஆன்மாக்கள், இவ்வாறு என்னுல் கூறப்படுவதைக் கேட்பார்கள் ஆக.

அருட்குரு ஆகிய பெரியவர் ஒருவர், எனக்குச் சொன்னதை, அவர் சொன்ன வண்ணம், உனக்குச் சொல்கிறேன், மாணவனுகிய நீ இதனைக் கேள்.

அவர் எனக்குச் சொன்னதை, எனது பக்குவத்தின் அளவு, நான் அறிந்தேன்; நீயும் நான் உனக்குச் சொல்வதை உனது பக்குவத்தின் அளவு அறிந்துகொள்வாய்.

முதலில் உள்ள 'ஒருவன்' இந்நூலாசிரியரின் ஆசிரியரைக் குறிக்கும்; பின் உள்ள 'ஒருவன்' இந்நூலாசிரியரைக் குறிக்கும்.

''சொன்னபடி சொல்லக்கேள்'' என்னும் தொடர், நினைவில் கொள்ளத் தக்கது.

## சிவபெருமானே குருவாய் வருதல்

**4.** **அகளமயமாய் நின்ற அம்பலத்துஎம் கூத்தன்**
**சகளமயம்போல், உலகில் தங்கி, நிகளமாம்**
**ஆணவமூல மலம் அகல ஆண்டனன் காண்**
**மாணவகஎன் உடனுய் வந்து.**

தெளிவுரை:

குறைவிலா நிறைவு உடைய பேரறிவுடைப் பொருள் ஆக நிற்கும் எங்கள் அம்பலக்கூத்தன், தன்னுடைய திருவருளைக்கொண்டு, ஓர் உருவம் உடையவன்போல், இந்த உலகத்தில் எழுந்தருளியுள்ளான்.

அவன் என்னுடன் உடனுய் நின்று, என்னை அநாதியே மறைத்துக்கொண்டு இருக்கும் ஆணவம் ஆகிய மூலமலம் என்னைவிட்டு அகலுமாறு செய்தருள்கின்ருன். அவன் என்றும் என்னை ஆளும் ஆண்டவன்; நான் என்றும் அவன் அடிமை.

எனது அருமை மாணவனே, இறைவன் நம்மை ஆட்கொள்ளும் இவ்வியல்பைத் தெளிவாகப் புரிந்துகொள்.

அகளம் – முழுநிறைவு – வியாபகத் தன்மை – சொரூப இலக்கணம்.

சகளம் – உருவம் – தடத்த இலக்கணம்.

நிகளம் – உயிரைப் பிணித்துள்ள கட்டு – ஆணவமலம். உயிரின் அறிவிச்சை செயல்களை அநாதியே மறைத்து, உயிர்க்கு அறியாமையை செய்யும் மலம், ஆணவம் ஒன்றே ஆகும். எனவே அதனை ''ஆணவ மூல மலம்'' என்றார்.

## குருவுருவத் திருமேனியின் இன்றியமையாமை

**5.** *ஆகமங்கள் எங்கே? அறுசமயம்தான் எங்கே?*
*யோகங்கள் எங்கே? உணர்வு எங்கே? – பாகத்து*
*அருள்வடிவும் தானும்ஆய் ஆண்டிலனேல், அந்தப்*
*பெருவடிவை யார்அறிவார்? பேசு.*

**தெளிவுரை:**

மாதொரு பாகன் ஆகிய சிவபெருமான், தன்னில் பிரிவிலா அருள் ஆகிய அம்மையும் தானும் ஆக, அருட்டிருமேனி கொண்டு, சகலர் வகை ஆன்மாக்கள் ஆகிய நம்மை ஆட்கொள்ளாமற் போவானுகில், எவராலும் எட்டமுடியாத அப்பெரும் பொருளை, யார்தான் அறிய முடியும்?

உயிர்க்கு உய்திப் பொருளை உணர்த்தும் சிவாகமங்களை நாம் எப்படிப் பெற்றிருக்க முடியும்? ஆகமங்களால் உணர்த்தப் பெறும் ஆறு சமயங்களின் கோட்பாடுகளை எவ்வாறு அறிய முடியும்? அந்தச் சமய நூல்களிலே உள்ள நெறி முறைகளை உலகில் உள்ளவர்கள் எப்படிப் பெற முடியும்?

சுட்டியறியும் உயிரறிவு வேறு – எல்லாவற்றையும் ஒருங்கே உணரும் ஞானம் வேறு என்னும் மெய்யுணர்வைப் பக்குவமுடைய ஆன்மாக்கள் எங்ஙனம் உணர்ந்து ஒழுக முடியும்? எனவே, சிவபெருமான் அருட்டிருமேனி தாங்கி வருவதன் இன்றியமைய மை இதனுல் இனிதே பெறப்பட்டது.

## குருவுப்பதேசத்தின் இன்றியமையாமை

6. சாத்திரத்தை ஓதினர்க்குச் சற்குருவின் தன்வசன
மாத்திரத்தே வாய்க்குநலம் வந்து உறுமே – ஆர்த்தகடல்
தண்ணீர் குடித்தவர்க்குத் தாகம் தணித்திடுமோ
தெள்நீர்மையாய், இதனைச் செப்பு.

**தெளிவுரை:**

சாத்திரங்கள் ஆவன, சிவாகமச் செய்திகளை உணர்த்தும் சைவ சித்தாந்த நூல்கள் ஆகும். இவை கடல் போல்வன. இவற்றில் உள்ள ஆழந்து அகன்ற நுண் பொருள்களை, மாணவர்களின் பக்குவம் அறிந்து, அவர்கள் ஏற்றுக்கொள்ளும் திறத்தில், சுவைபடச் சோர்வின்றி எளிமையாக உபதேசிப்பவரே, சற்குரு ஆவார்.

அக்குருவின் உபதேசம் இன்றித் தானே முயன்று, எத்தனை தடவை ஓதினாலும், அந்நூலில் உள்ள நுண் பொருள் விளங்காது; மயக்கம் தீராது. எனவே நேர்முகக் கல்வி வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டுவது இன்றியமையாதது ஆகும்.

இஃது எதுபோல எனின், கூறுதும்:– கடல் தண்ணீரை எவ்வளவு குடித்தாலும் தாகம் தணியாது. கடல் தண்ணீரில் உள்ள உவர்ப்புத் தன்மை, தாகத்தைத் தீர்க்காது. அதுபோல நூலில் உள்ள கரடு முரடான பகுதிகள், தானே தன் முனைப்புடன் பயின்றால் புரியாது. எனவே, தெளிவான அறிவைப் பெற விரும்பும் மாணவர்கள், குருவின் உபதேசத்தை நேர்முகமாக இருந்து கேட்டுப் பெறவேண்டும்.

## உபதேசிக்கும் குருவின் திருமேனி மாயையால் ஆனது அன்று

7. இன்றுபசுவின் மலம் அன்றே, இவ்வுலகில்
நின்றமலம் அனைத்தும் நீக்குவதுஇங்கு – என்றால்
உருஉடையான் உரு அன்றே, அழியப் பாயும்
உருஅருள வல்லான் உரை.

தெளிவுரை:

இந்த உலகத்திலே, புற அழுக்குகளேப் பசுவின் சாணம் போக்குகிறது; அந்தப் பசுவின் சாணமே திருநீருய் நின்று, உயிர்க்குள்ள அக அழுக்கு ஆகிய ஆணவமலத்தின் அனைத்துக் கொடுமைகளேயும் போக்குகிறது. (சம்பந்தப் பெருமானின் திருநீற்றுப்பதிகம் காண்க).

அதுபோன்று, ஆணவமலத் தொடக்கு காரணமாகக் கருமேனி கொண்டு பிறந்துள்ள உயிர்களுக்கு, பிறவிப்பணியை அகற்றும் பொருட்டுத், திருமேனி தாங்கி எழுந்தருளியுள்ளான் சிவபெருமான். குருவடிவில் நின்று, அவன் அருள்கின்ற மெய்ஞ்ஞானப் பொருளே உள்ளவாறு உணர்தல் வேண்டும்.

அவனது திருமேனி, நம்முடைய கருமேனியினேப் போன்றதன்று. அது மாயையால் ஆனது அன்று; அஃது அருட்டிருமேனியாகும்.

''உருஉடையான்'' என்பது, அருட்டிருமேனியைக் குறிக்கும்.

''உருஅழிய'' என்பது, நமது கருமேனி ஆகிய பிறவிப்பிணி நீங்குதற்கு என்னும் பொருளேத் தரும்.

''உருஅருள'' என்பது, மெய்ஞ்ஞானப்பொருளே உபதேசிக்க என்பதாகும்.

## ஆசிரியத் திருமேனியின் சிறப்பு

**8. கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவரே**
**அண்டத்தின் அப்புறத்தது என்ருதே – அண்டத்தின்**
**அப்புறமும் இப்புறமும் ஆர்அறிவும் சென்று அறியும்**
**எப்புறமும் கண்டவர்கள் இன்று.**

தெளிவுரை:

காணப்படும் திருமேனியை உடைய ஆசிரியனது உபதேசத்தின் துணேக்கொண்டு, தமது தன் முனேப்பு அடங்கும்படி இருவினே ஒப்பு வாய்க்கப்பெற்றவரே, ஞானமே வடிவாகிய சிவனே உள்ளவாறு உணர்வார்கள். அவன் அண்டங்களுக்கு அண்டங்களாய் உள்ளும் புறமும் நிறைந்து நிற்பானுயினும், குருவடிவில் நிற்கும்போது, அவற்றைப் பற்றியெல்லாம் எண்ணுமல், உபதேசத்தை மட்டுமே கேட்பார்கள்.

அவ்வாறு திருமேனியின் சிறப்பை உணர்ந்து, மெய்ஞ்ஞானப் பொருளை உபதேசித்தபடி நிற்பவர்கள். அவனால் உணர்த்தப்படும் வியாபகத் தன்மையை உணர்வார்கள். அந்நிலையில் அவன் அருளிச் செய்ய அகத்தும் புறத்தும் அப்பாற்பட்ட எல்லாஇடத்தும் அவன் அருளின் வியாபகத் தன்மையைக் காண்பார்கள்.

ஆன்மபோதம் நீங்கினால் ஒழிய சிவானுபவம் கைகூடாது. எனவே, குருபத்தி இன்றியமையாததாகும். குருவின் திருமேனியில் உள்ளம் ஒருமுகப்படவேண்டும். அஃதே ஆன்மபோதம் நீங்குதற்கு வழியாகும்.

## குருவருளால் பெற்ற பேரின்பப் பெற்றிமை

**9. அன்றுமுதல் ஆரேனும் ஆளாய் உடனாகிச்**
**சென்றவர்க்கும் இன்னதுஎனச் சென்றதுஇலை – இன்றுஇதனை**
**எவ்வாறு இருந்ததுஎன்று எவ்வண்ணம் சொல்லுகேன்**
**அவ்வாறு இருந்தது அது.**

**தெளிவுரை:**

சிவபெருமானே குருவடிவில் எழுந்தருளி வந்து உபதேசிக்க, அவ்வுபதேசத்தின் வாயிலாக யான் பெற்ற பேரின்ப அனுபவத்தை எப்படிப்பட்டது என்பதை என்னால் சொல்ல முடியவில்லை.

அநாதியே, அஃதாவது படைப்புக் காலம் தொடங்கிச் சிவபெருமானின் துணைக்கு உட்பட்டு, அவனுக்கு ஆளாய் இருந்து படைத்தல், காத்தல் ஆகிய தொழில்களைச் செய்யும் அயனாலும் மாலினாலுமே, சிவபெருமானின் தன்மையை அறிய முடியவில்லை. இந்நிலையில் அவன் அருளும் பேரின்பப் பெற்றிமை இன்ன தன்மையது என்று என்னால் எப்படிக் கூறமுடியும்?

அத்தன்மையை உணர்த்தியவாறு உணரமுடியுமே அன்றி அதனை இவ்வாறு இருந்தது என்று கூறமுடியாது.

**''சொல்லுவது அறியேன் வாழி, முறையோ**
**தரியேன் நாயேன், தான் எனைச் செய்தது தெரியேன்''**

என்னும் மணிவார்த்தை இங்கு நினைவுகூர்தற்குரியது.

## திருவருளின் துணையின்றிச் சிவனை அறிய முடியாது

10. ஒன்றும் குறியே குறியாதலால், அதனுக்கு
ஒன்றும் குறிஒன்று இலாமையினுல், – ஒன்ருேடு
உவமிக்கல் ஆவதுவும் தான்இல்லை; ஒவ்வாத்
தவம்மிக்கா ரேஇதற்குச் சான்று.

தெளிவுரை:

ஒன்றும் குறி – பொருந்தும் அடையாளம். அஃதாவது சிவசத்தி ஆகிய திருவருள்.

குறி ஆதல் – சிவபரம்பொருளை உணர்தற்கு அடையாளம் ஆவது. அஃதாவது, கதிர்களை அடையாளமாகக் கொண்டு கதிரவனை அறிவது போன்றது.

அருட்சத்தி ஆகிய அருளாற்றலின் துணைக்கொண்டே சிவபெருமானை அறியமுடியும், அவனை அறிவதற்கு வேறு எந்த உபாயமும் இல்லை.

உலகில் உள்ள எந்த ஒரு பொருளை உவமையாகக் கூறி, அவனை அறியலாம் என்ருல், அது முடியவே முடியாது. ஏனெனில் அவனெடு உவமிக்கத்தக்க பொருள் ஒன்றும் உலகில் இல்லை.

இவ்வாறு எந்தப் பொருளைக் கொண்டும், எவராலும் அறிதற்கு அரிய அந்த சிவபரம்பொருளைத் தவத்தில் சிறந்த ஞானிகளே அறிவர்; ஏனெனின், அவர்கள் அவனை எப்போதும் மறவாது, இடைவிடாது நினைந்து, அவனருளில் ஒன்றி நிற்பதனுலேயே ஆகும். 'நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்' என்னும் அப்பர் வாக்கு இங்கு நினைத்தற்குரியது.

## தவம் மிக்கார்க்கு ஓர் உவமை

11. ஆற்ருல் அலைகடற்கே பாய்ந்த நீர் அந்நீர்மை
மாற்றிஅவ், வாற்ருன் மறித்தாற்போல் – தோற்றிப்
புலன்கள்எனப் போதம் புறம்புஒழியும்; நம்தம்
மலங்கள்அற மாற்றுவிக்கும் வந்து.

தெளிவுரை:

அலை கடலில் பாய்ந்த ஆற்றின் தண்ணீர் (நல்ல நீர்) தன் தன்மை கெட்டுக், கடல் நீருடன் ஒன்றுகிறது; அதனால் உவர்த் தன்மை பெறுகிறது. கடலில் கலந்த அந்த ஆற்று நீர், மீண்டும் அந்த ஆற்றின் வழியே எதிர்த்துச் செல்லும்போது, உவர்த்தன்மை உடையதாகவே இருக்கிறது.

அதுபோல, ஆன்மபோதம் கெட்டுச் சிவபெருமானோடு ஒன்றிய சிவஞானிகளின் உணர்வு சிவபோதம் உடையதாகவே இருக்கிறது. அவர்கள் உலக முகப்பட்டு உலகில் தோன்றும்போது, பசு கரணம் கூடாமல் பதிகரணமேயாய் விளங்குவர். உலகத்தில் உள்ளவர்களின் கண்களுக்குப், பொறிகளின் வழிபடரும் புலனுணர்வு உடையவர்கள் போலத் தோன்றினும், அவர்கள் சிவபோதம் உடையவராகவே இருப்பர்.

நமக்குள்ள மலப்பிணியை அறவே நீக்கும் பொருட்டு, இறைவன் அவர்களை உலகமுகப்படச் செய்தருளியுள்ளான்.

## சீவன் முத்தர்களது அற்புதங்கள்
## சிவன் செயலே ஆகும்

**12.** **பாலைநெய்தல் பாடியதும் பாம்புஒழியப் பாடியதும்**
**காலனை அன்று ஏவிக் கராம்கொண்ட – பாலனை**
**மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நம்தம்**
**கரணம்போல் அல்லாமை காண்.**

தெளிவுரை:

திருஞானசம்பந்தர், பாலை நிலம் நெய்தல் நிலமாகும்படி திருப்பதிகம் பாடியருளினார். அப்பூதியடிகளின் மூத்தமகன் பாம்பு கடித்து இறந்த நிலையில், ''ஒன்றுகொலாம்'' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடியருளித் திருநாவுக்கரசர் அவனை உயிர்பெற்று எழச் செய்தருளினார். அவிநாசியில் முதலை உண்ட பாலனை, அதன் வாயிலிருந்து வெளியேறும்படி ''எற்றான் மறக்கேன்'' என்னும் திருப்பதிகம் பாடியருளிச் சுந்தரர் பெருமான், காலனை ஏவியருளினார். (கராம்–முதலை) அப்பாலன் மீண்டும் உயிர் பெற்றான்.

மூவர் முதலிகள் இவ்வாறு செய்தருளிய செயல்களுக்குக் காரணம், அவர்களுக்குரிய கருவி கரணங்கள், நமக்குள்ள கருவி கரணங்களைப் போல் பசுகரணங்களாக இல்லாமல், சிவகரணங்களாக இருந்தமையாலேயே ஆகும்.

சம்பந்தப் பெருமான் திருநனிபள்ளியில் ''காரைகள் கூகை முல்லை'' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடியருளிச் செய்தருளியதையே முதலில் குறிப்பிடுகிறார்.

'பசுகரணம்' என்பது, பாசம் ஆகிய ஆணவமலம் பற்றுக்கொண்டு, தன் முனைப்புடன் செயற்படுத்தும் கருவி கரணங்களைக் குறிக்கும். 'பதிகரணம்' என்பது, சிவபெருமானையே பற்றி நின்று, வேறு நினைப்பு இன்றி செயல்படும் கருவி கரணங்களைக் குறிக்கும். எனவே, இது 'சிவகரணம்' எனப்பட்டது.

## தன்செயல் கெட்டுச் சிவன் செயலே விளங்கப்பெறும் நிலை

**13. தூங்கினரைத் தூய சயனத்தே விட்டதற்பின்**
**தாங்களே சட்ட உறங்குவர்கள் – ஆங்குஅதுபோல்**
**ஐயன் அருட்கடைக்கண் ஆண்டதன்பின் அப்பொருளாய்**
**பைய விளையும் எனப் பார்.**

**தெளிவுரை:**

களைப்புற்ற கருவி கரணங்களின் செயல் ஒடுங்கும் நிலையில் அயர்ந்து உறங்குபவர்களை, மெல்ல எடுத்து மென்மையான படுக்கையில் கிடத்தினால், அவர்கள் நன்றாக உறங்குவார்கள்; எத்தகைய மனக்கலக்கமும் இன்றித் தாமே நன்கு உறங்குவார்கள்.

அதுபோல, சரியை, கிரியை, யோகங்கள் ஆகிய பணிகளைச் செய்து முற்றியதன் பயனாக, திருவருட்பதிவு வாய்க்கப்பெற்ற ஞானிகள் அருட்குரவனாகிய சிவபெருமானை 'எங்கே சென்றடையப் பெறுவோம்' என்னும் வேட்கை மிக்கவராய் நிற்கும் நிலையில், சிவபரம்பொருளின் திருவருள் ஞானமும் செயலும் அவர்கள்மீது, படிப்படியாக மெல்ல விளையும்.

இவ்வுண்மையை, முன் பாட்டில் சொன்ன சமய குரவர்களின் அருட் செயலைக் கொண்டு, மாணவனாகிய நீ தெரிந்து கொள்வாயாக.

ஐயன் – அருட்குரவன்

பைய விளைதல் - உலகவாதனை ஆகிய ஆரவாரம் இன்றி, ஞானிகளிடத்துச் சிவன் செயல்அமைதியாக விளங்கித் தோன்றுதல்.

## சிவம் விளங்கித் தோன்றும் ஆன்மாவின் இயல்பு

**14.** உள்ள முதல்அனைத்தும் ஒன்ருய் ஒருவவரின்
உள்ளம் உருகவந்து உன்உடன்ஆம் – தெள்ளி
உணரும்அவர் தாங்கள் உளராக, என்றும்
புணரவர நில்லா பொருள்.

தெளிவுரை:

''உள்ள முதல்'' என்பது, தனு கரண புவன போகங்களைப் பெற்று வாழ்வதற்கு அடிப்படையாகவுள்ள நிலம் முதல் நாதம் ஈருகிய முப்பத்தாறு தத்துவங்களைக் குறிக்கும். ''ஒன்ருய் ஒருவ வருதல்'' என்பது, ஒருங்கே நீங்கப் பெறுதல் ஆகும். ''உருக வருதல்'' என்பதும் பாடம். ''முதல்'' என்பது தத்துவத்தையும் குறிக்கும்.

இவ்வாறு தத்துவக்கொத்து முழுவதும் ஒருங்கே நீங்கலுற்று, உன்னிடத்துத் திருவருள் ஞானம் பதியும் ஆயின், உன் உள்ளம் தீயிற்பட்ட மெழுகுபோல உருகும். உருகவே, யான் எனது என்னும் செருக்கு, சிறிதும் உன்னிடத்து இராது. அந்நிலையில், சிவபெருமான் எளிவந்த கருணையோடு, உன்னைத் தான் ஆக்கி (சிவமாக்கி) உன்னேடு உடனுய் நிற்பன்.

தன்முனைப்போடு உள்ளவர்கள், எக்காலத்தும் சிவபெருமானை அடையமுடியாது. அவர்கள் மேற்கொள்ளும் எந்த முயற்சியும் பயன் தராது. சிவபரம்பொருள் அவர்கள் முன் நில்லாது.

''தெள்ளி உணரும் அவர்'' என்பது, தம்முடைய ஏகதேச அறிவினுல், இறைவனை ஆராய்ந்து அறிய முற்படுவோரைக் குறிக்கும். ஏகதேச அறிவு – குறைவான அறிவு.

## சரியை கிரியை யோகங்களின் பெரும் பயன்

**15.** நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்
நல்லசிவ ஞானத்தால் நான் அழிய – வல்லதனுல்
ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படும்காண்
ஆரேனும் காணு அரன்.

*தெளிவுரை:*

'தன்மம்' என்னும் சொல் 'அறம்' என்னும் பொருளைத் தரும். 'சிவதன்மம்' என்பது, சரியை, கிரியை ஆகிய இருவகைச் சிவநெறிகளைக் குறிக்கும். 'நல்லசிவதன்மம்' என்பது, உயிர்க்கு உய்தி பயக்கும் சரியா கிரியா நெறிகள் ஆகும். ''நல்ல'' என்ற சொல் மேற்கண்ட வெண்பாவில் மூன்று இடங்களில், காணப்படுகிறது. உயிர்க்கு உய்தி பயக்கும் நன்னெறிகள், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன ஆகும்.

இந்நால்வகை நெறிகளில் தனக்கு வல்லதொரு நெறியினை மேற்கொண்டு, அதில் இடைவிடாமல் உறைப்புடன் ஒழுக ஒழுக, தன் முனைப்பு நீங்கும். அதன்பயனுகச் சிவபெருமானிடத்து நாளாக நாளாக அன்பு மீதூரும். அத்தகு பேரன்பில் தலைப்பட்டு நிற்கும் ஆன்மாக்கள் எவராயிருப்பினும், அந்த ஆன்மாவினிடத்து இறைவன் வெளிப்பட்டுத் தோன்றுவான். அவ்வாறு அன்பு செலுத்தாதவர் எவராக இருப்பினும் அவரிடத்து இறைவன் தோன்றுவதில்லை. எனவே அவர்கள் அவனைக் காணமுடியாது. நால்வகை நெறிகளிலும் அன்பு ஒன்றே வேண்டப்படுவது.

## சிவதன்மம் மெல்வினை வல்வினை என இருவகைப்படும்

**16.** மெல்வினையே என்ன வியன்உலகில் ஆற்றரிய
வல்வினையே என்ன வரும்இரண்டும் – சொல்லில்
சிவதன்மம் ஆம்; அவற்றில் சென்றதிலே செல்வாய்
பவகன்மம் நீங்கும்படி.

*தெளிவுரை:*

''மெல்வினை'' என்பது, உலகத்தவரால் கடைப்பிடித்து ஒழுகுவதற்கு உரியது. 'வல்வினை' என்பது, எவராலும் செய்தற்கு அரியது. இவ்விரண்டும் சொல்லும் இடத்துச் சிவதன்மமே ஆகும்.

அஃதாவது, சரியைத் தொண்டிலும் வல்வினை, மெல்வினைகள் உண்டு; கிரியைத் தொண்டிலும் வல்வினை, மெல்வினைகள் உண்டு.

இவற்றுள் நமது மனம் எதில் விருப்பம் கொள்கிறதோ, அதில் நின்று ஒழுகுதல் வேண்டும். அவ்வாறு ஒழுகினால், அதன் பயனாகப் பிறப்புக்குக் காரணமாகிய வினைத் தொடர்பு நீங்கும். எனவே, சிவபெருமானிடத்து அன்பு மீதூர்ந்து, சிவதன்ம நெறிகளில் ஏதேனும் ஒன்றில் உறைத்து நிற்கவேண்டும் என்பது கருத்து.

பவம் – பிறப்பு

பவகன்மம் – பிறப்புக்குக் காரணம் ஆகிய இருவினைகள்.

''என்ன, என்ன'' என்பது, எந்தத் தொண்டாய் இருந்தால் என்ன என்பதைக் குறிக்கும்.

## மெல்வினையின் இயல்பு

**17. ஆதியை அர்ச்சித்தற்கு அங்கமும் அங்குஅங்கே**
**தீதில் திறம்பலவும் செய்வனவும் – வேதியனே**
**நல்வினையாம் என்றே நமக்கும்எளிது ஆனவற்றை**
**மெல்வினையே என்றது, நாம் வேறு**

**தெளிவுரை:**

சிவபெருமானை அருச்சித்து வழிபாடு செய்யும் பொருட்டு உறுப்புக்களும் அந்தந்த இடங்களில் தீமையை ஒழிக்கும் பல்வேறு கூறுபாடுகளும், நல்வினையே ஆகும். 'ஆதி' என்றது, சிவபெருமானைக் குறிக்கும்.

'அங்கம்' என்பது, வழிபாட்டுக்கு உரிய பூவும் நீரும் முதலானவற்றைக் குறிக்கும்.

'தீது இல் திறம்' என்பது, தீயனவற்றை ஒழிக்கும் பல்வேறு கூறுபாடுகள். செய்வன – செய்தற்குரிய கிரியைகள். 'வேதியனே' என்பது, வேதநூற்பொருளை அறியும் பக்குவம் வாய்ந்த நூலாசிரியரைக் குறிக்கும்.

நம்மைப் போன்றவர்கள் எளிதில் மேற்கொண்டு செய்தற்குரிய நல்வினைகளே, மெல்வினை ஆகும். ''நாம் வேறு'' என்பது, வல்வினை ஆகிய செயற்கரிய கிரியைகளை நம்மால் செய்ய

இயலாமைபற்றி, நாம் செயற்கரிய செய்வாரினும் வேருனவர்கள் என்பதைக் குறிக்கிறது. எனவே, நாம் மெல்வினையாளர்களே யாவோம்.

மனத்தால் நினைப்பனவும், வாக்கினுல் சொல்வனவும், காயங்களால் செய்வனவும் ஆகிய அனைத்தினும், தூய உணர்வுடன் இயன்ற அளவு வழிபாடு செய்வதே, ''மெல்வினை'' எனப்படும்.

## வல்வினையின் இயல்பு

18. வரங்கள்தரும் செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினுல் அன்றுகறி ஆக்க – இரங்காதே
கொல்வினையே செய்யும் கொடுவினையே ஆனவற்றை
வல்வினையே என்றதுநாம் மற்று.

**தெளிவுரை:**

சிறுத்தொண்ட நாயனுர் மனங்கலங்காது, தாம் பெற்ற அஞ்சுவயது பிள்ளை சீராளனைத் தம்முடைய கையினுல் கொன்று, வயிரவர் வேடத்தில் வந்த சிவனடியார்க்குக் கறியாகச் சமைத்துப் படைத்த செயல், வல்வினை எனப்படுகிறது. வல்வினை எது என்பது இங்கு வகைப்படுத்தி உரைக்கப்படுகிறது.

வரங்கள் தரும் வைரவர் – மேலான நற்பேற்றினை வழங்குபவர்.

செய்ய – சிவந்த மேனியை உடையவர்.

''அன்று'' என்பது, அக்காலத்தில் சிவனடியார்பால் கொண்ட பேரன்பினுல் செய்த, இச்செயற்கரிய செயல் இன்று உலக நடைக்குப் பொருந்த வாழும் மனித குலத்தவரால் நினைப்பதற்கும் இயலாதது என்பதைக் குறிக்கும்; இத்தகு வல்வினை செய்பவர் இக்காலத்தில் எவரும் இலர் எனக் கூறலாம்.

மற்று – அசைச்சொல்.

''இரங்காதே கொல்வினையே செய்யும் கொடுவினை'' என்பது மன கலக்கம் இன்றி (மனம் வருந்தாமல்) கொடுமையாகச் செய்யும் அருஞ்செயல் என்பதாகும்.

'தங்கள் கரங்களினுல்' என்பது, சிறுத்தொண்டரும் அவரது மனைவியார் வெண்காட்டு நங்கையாரும் செய்ததைக் குறிக்கும்.

## சண்டீச நாயனாரின் நல்வினை

19. பாதகம் என்றும் பழிஎன்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாள்இரண்டும் – சேதிப்பக்
கண்டுஈசர் தாம்ஆம் பரிசு அளித்தார்; கண்டாயே
சண்டீசர் தன்செயலால் தான்.

**தெளிவுரை:**

சண்டீசப்பெருமான், சிவபூசையில் ஈடுபட்டு இருந்தபோது, அவரது தந்தை ஆகிய எச்சதத்தர், சிவபூசைக்கு உரிய பால்குடத்தைத் தனது காலால் சிதைத்தார். அதனைக் கண்ட சண்டீசர், தன்னைப் பெற்று வளர்த்த தந்தை என்றும் பாராமல், தனக்கு மறை ஓதுவித்த குரு என்றும் நோக்காமல், உலகம் பழிக்கும் அச்செயலைச் செய்தார்.

இந்தச் சிவதன்மம் ஆகிய வல்வினைத் திறத்தைக் கண்டு, இறைவன் சண்டீச நாயனாருக்குச் சிவமாம்தன்மைப் பெரும் பதத்தினைத் தந்து அருளினான்.

''பாதகம்'' என்பது, கொலை, களவு, கள், காமம், பொய் என்னும் பஞ்சமா பாதகங்களுள் ஒன்றான கொலைக் குற்றத்தை இந்த இடத்தில் குறிக்கும்.

'பழி' என்பது, இத்தீவினைகளைச் செய்தவரைக் குறித்து உலகத்தவரால் கூறப்படும் இகழ்ச்சியுரை.

சேதித்தல் – வெட்டி வீழ்த்தல் – சிதைத்தல்.

பாற்குடத்தை உதைத்துச் சிதைத்தது ஒருகால்தானே; ஆயினும் உதைத்த அக்காலுக்கு உறுதுணையாய் நிலத்தில் ஊன்றி நின்றது மற்றொரு கால் ஆதலின், இரண்டு கால்களையும் ஒருங்கே வெட்டி, அவரை வீழ்த்தினார். எனவே ''தாள் இரண்டும் சேதிப்ப'' என்றார்.

## அரிவாட்டாய நாயனாரின் வல்வினை

20. செய்யில் உகுத்த திருப்படி மற்று அதனை
ஐய இதுஅமுது செய்களன்று – பையஇருந்து
ஊட்டி அறுத் தவர்க்கே ஊட்டி, அறுத்தவரை
நாட்டிஉரை செய்வது என்னோ நாம்.

தெளிவுரை:

''செய்யில் உகுத்த திருப்படி மற்று'' என்பது, வயலில் வீழ்ந்து சிதறிய, திருக்கோயிலின் நாள் வழிபாட்டுக்கு உரிய படிக்கட்டளைப் பொருள் ஆகிய திருவமுதுக்குரிய செந்நெல் அரிசி, செங்கீரை, மாவடு முதலியன ஆகும்.

இத் திருப்படிப் பொருள்களை, ''தாயனார்'' என்னும் பெயரை உடைய அரிவாட்டாய நாயனார், வறுமை நிலையிலும் கூலிக்கு வேலை செய்து, அதனால் பெற்ற ஊதியத்தைக் கொண்டு, நாள்தோறும் சிவபெருமானுக்குத் தருவதை நியமமாகக் கொண்டு வாழ்ந்தார்.

ஒருநாள், அவ்வாறு, திருக்கோயிலுக்கு அவற்றை எடுத்துச் செல்லும்போது, பசியால் களைப்புற்று கால் இடறி விழுந்துவிட்டார். அந்நிலையில் படிக்கட்டளைப் பொருள்கள், வயல் வெடிப்பில் சிதறி விட்டன. தனது கவனக்குறைவால் இது நிகழ்ந்தது எனக் கருதித் தாயனார் மெல்ல அமர்ந்து இருந்து, தமது குரல்வளையை அரிவாள் கொண்டு அறுத்துக்கொண்டே இறைவனை நோக்கி, இவ்வமுதுபடியை உண்க என ஊட்டினார்.

இத்தகு செயற்கரிய செயலின் பெருமையை நமது சொற்களால் புகழ்ந்து உரைக்க இயலுமோ? அச்செயலின் திறம், நமது சொலின் எல்லைக்கு அடங்காது என்றபடி.

ஊட்டி – குரல்வளை ஆகிய மிடற்றுத்தண்டு.

ஊட்டி – உண்பித்து.

## திருவருள் வழி அடங்கிச் செய்தல்

**21.** **செய்யும் செயலே செயலாகச் சென்று, தமைப்**
**பையக் கொடுத்தார் பரம்கெட்டார் – ஐயா**
**உழவும் தனிசும் ஒருமுகமே ஆனால்**
**இழவுஉண்டோ சொல்லாய் இது:**

**தெளிவுரை:**

பயிர்த்தொழில் செய்யும் உழவன் ஒருவன், தான் தொழில் செய்வதற்கு இடமாக இருக்கும் வயலும், அவ்வயலின் பயிர்ச் செலவுக்கு எனப் பெறும் கடனும், (பிறர்) ஒருவரிடமே அமையும் ஆயின், அந்த உழவனுக்கு எந்தவிதமான இழப்பும் ஏற்படாது.

அதுமட்டுமன்றி செய்த தொழிலுக்கு ஏற்ற ஊதியத்தை அவன் பெறுதல் உறுதியே ஆகும்.

நாம் செயல் செய்யும் இந்த உலகம், இறைவனுக்குச் சொந்தமானது. நமது செயலுக்கு உதவும் கருவி கரணங்கள் அவனது உடைமைகள். எனவே சிவனை நினைந்தே வினைகளைச் செய்தல்வேண்டும்.

பையக்கொடுத்தல் – நமது தகுதிக்கு ஏற்ப அருளிச்செய்தல்.

தனிசு – கடன், பரம் – பாரம் – சுமை.

ஒருமுகமே ஆதல் – ஒருவரிடமே இருக்குமாயின்.

இழவு – இழப்பு (loss)

ஐயா – நம்மைச் செல்லமாக அழைத்தது.

## இருவகை யோகத்தின் திறம்

**22.** **ஆதார யோகம் நிராதார யோகம்என**
**மீதானத்து எய்தும் விதிஇரண்டே – ஆதாரத்து**
**ஆக்கும் பொருளாலே ஆக்கும் பொருளாம் ஒன்று**
**ஆக்காப் பொருளே, ஒன்று ஆம்.**

**தெளிவுரை:**

ஆக்கும் பொருள் – ஆதார யோகம்

ஆக்காப் பொருள் – நிராதார யோகம்

மீதானம் – சிவபெருமானது திருவடி.

முத்திநிலை எய்துவதற்கு ஆன நெறிமுறை இருவகைப்படும். அவற்றுள் ஒன்று ஆதார யோகம். மற்றொன்று நிராதாரயோகம். ''ஆதாரயோகம்'' என்பது, குருவின் உபதேசப்படி, வழிபடுதெய்வ வடிவைக் கொண்டு (உபாசன மூர்த்தம்). அத்தெய்வ வடிவினில் மனம் ஒன்றித் தியானித்தல் ஆகும். இதனை ''அந்தரியாக யோகம்'' என்றும் ''அகப்பூசை'' என்றும் கூறுவர். 'நிராதாரயோகம்' என்பது, கற்பனை கடந்த சோதி ஆகிய சிவபரம்பொருளைப் பரம்பொருளாக, உருவமின்றித் தியானிப்பது ஆகும்.

இவ்விரண்டு வழிபாடுகளில், ஆதாரயோக நிலையில் நின்று செய்யும் வழிபாடே நம்மனோர்க்கு உகந்தது ஆகும். நிராதாரயோக வழிபாடு, முற்றும் துறந்த பெருந்தவ முனிவர்களாலேயே இயலும்.

ஆதாரயோக வழிபாடும், தூலம், சூக்குமம், பரம் என மூவகைப்படும். அதனை அடுத்துவரும் வெண்பாக்களில் காணலாம்.

## ஆதார யோகத்தின் தூலநிலை

**23.** ஆக்கி ஒருபொருளை ஆதாரத்து அப்பொருளை
நோக்கி அணுவில் அணுநெகிழப் – பார்க்கில்
இவன் ஆகை தான்ஒழிந்திட்டு ஏகமாம்; ஏகத்து
அவன் ஆகை ஆதாரம் ஆம்.

**தெளிவுரை:**

குருநாதர் பணித்தருளிய வண்ணம், ஏதேனும் திருவுருவம் ஒன்றினைக் கற்பித்துக்கொண்டு, அத்திருவுருவத்தை உள்ளத்தில் வைத்து நெடுநாள் தியானிக்கவேண்டும். நாளாக நாளாக அவ்வுருவம் உயிரில் பதியும். அந்நிலையில் மனத்தைப் புறப்பொருளில் செல்ல விடாமல் அவ்வுருவத்திலேயே ஒன்றுபடும்படி அகவழிபாடு (தியானம்) செய்யவேண்டும். அப்போது தியானத்தின் முதிர்ச்சியில், 'தியானிக்கிறோம்' என்னும் உணர்வும் இருக்காது. அந்நிலையில் ஆன்மா சிவமேயாய் கூடி ஒன்றி நிற்கும். அவ்வாறு ஒன்றி நிற்கும் நிலையே, ஆதாரயோகம் ஆகும்.

நோக்குதல் – புறப்பொருள்களில் மனத்தைச் செலுத்தாமல், அகத்தே கற்பித்துக்கொண்ட திருவுருவத்தினை இடைவிடாது தியானித்தல்.

அணு – ஆன்மா.
அணு நெகிழப் பார்த்தல் – தற்போதம் கெட்டு தியானித்தல்.
இவன் – ஆன்மா; அவன் – சிவன்;
ஆகை – ஆவது – ஆதல்
ஏகம் – ஆன்மா ஒன்றி நிற்கும் பரம்பொருள்.

ஏகத்து அவன் ஆகை – ஒன்றிய நிலையில் ஆன்மா இருப்பினும் இருக்கும் உணர்வை இழந்து அவனாதல்.

## ஆதாரயோகத்தின் சூக்குமநிலை

**24.** கொண்டது ஒருபொருளைக் கோடிபடக் கூறுசெயின்
கொண்டவனும் அப்பரிசே கூறுபடும் – கொண்ட
இருபொருளும் அன்றியே இன்னதுஇது என்ன(து)
ஒருபொருளே யாய் இருக்கும் உற்று.

முன்னே வெண்பாவில் கூறியபடி, அகத்தே தியானிப்பதற்கு எனக் கற்பித்துக்கொண்ட, திருவுருவை நுணுகி நோக்க நோக்க, அவ்வடிவம் பரம அணுவினும் மிக நுண்ணியதாகத் தோன்றும். அந்நுண்ணிய பொருளினைச் சார்ந்து, தியானிக்கும் ஆன்மாவும் நுண்ணிலையினை எய்துவான்.

அவ்வாறு தியானிக்கப்படும் பொருளும் தியானிப்பவனும், இனம் காண இயலாத ஒரு நுண்ணிலையினை எய்தியதும், அப்பொருள் என்ன தன்மையது என்பதை அறிய முடியாத ஓர் உணர்வை ஆன்மா பெறுவான். அந்நிலையில், அப்பொருளோடு ஒன்றிய நிலையில் உள்ள ஆன்மா தன்னிலையை உணரமாட்டாத ஒரு பெருநிலையினைப் பெறும். அதுவே, ஆன்மா தன்னை மறந்து, தலைவன் தாள்பட்ட நிலை ஆகும். தியானத்தின் முடிந்த முடிவு இஃதே ஆகும்.

''கொண்டவனும் அப்பரிசே கூடும்'' என்பது சார்ந்ததன் வண்ணமாம் தன்மை பற்றி, ஆன்மா சிவமாம் தன்மை பெறும் என்பதாகும்.

''கோடிபடக் கூறு செய்தல்'' என்பது, அளவிட்டு அறிய முடியாத அளவுக்கு நுண்ணிய நிலையினை அடைதல் ஆகும்.

## திருவைந்தெழுத்து வழிபாடு

**25.** அஞ்சுஎழுத்து மேஅம்மை அப்பர்தமைக் காட்டுதலால்
அஞ்செழுத்தை ஆருகப் பெற்றுஅறிந்து – அஞ்செழுத்தை
ஓதப்புக்கு உள்ள மதியும் கெடில் – உமைகோன்
கேதம்அற வந்துஅளிக்கும் கேள்.

**தெளிவுரை:**

அஞ்செழுத்து என்பது, 'சிவாய நம' என்பதாகும். இதில் 'சி' சிவனையும், 'வ' – அருளையும், 'ய' உயிரையும், 'ந' – மறைப்பாற்றலையும், 'ம' – ஆணவமலத்தையும் குறிக்கும். இவற்றுள், 'சிவ' என்னும் இரு எழுத்துக்களும் முதன்மையானவை. அதற்குக் காரணம், அவை அம்மையப்பர் ஆகிய சிவபெருமானையும் அவனது சத்தி ஆகிய அருளாற்றலையும் குறிப்பது என்பதனுல் ஆகும்.

இந்த அஞ்செழுத்தை குருமூலமாகப் பெற்று, இதன் உண்மைப் பொருளை அறிந்து, அசைவற்று ஓர் இடத்தில் இருந்து, தியானிக்கத் தொடங்கினுல், நாளடைவில், ஆன்மபோதம் கெடும். அதன் பயனுக, அனைத்துத் துன்பங்களும் நீங்கும். இறைவன், ஓதும் அந்த ஆன்மாவினேடு உடனுய் நின்று அருள் புரிவான்.

ஆருகப் பெறுதல் - குருமுகமாகப் பெற்றுப் பொருளை அறிதல்.

உள்ளம் – ஆன்மா; மதி – ஏகதேச அறிவினை உடைய உயிரறிவு
உமைகோன் – அம்மையப்பர் ஆகிய சிவபெருமான்
கேதம் அற – பிறவிப்பிணி ஒழிய

## நிராதார யோகத்தின் இயல்பு

**26.** ஆக்கப்படாத பொருளாய் அனைத்தினிலும்
தாக்கித்தான் ஒன்ருேடும் தாக்காதே – நீக்கி உடன்
நிற்கும் பொருளுடனே நிற்கும் பொருள்உடனுய்
நிற்கை நிராதாரம் ஆம்.

**தெளிவுரை:**

இன்னஉரு, இன்னநிறம், இன்னதன்மை உடைய பொருள் என்று எவராலும் கற்பிக்க இயலாத நிலையில் உள்ளது சிவபரம் பொருள். அத்தகைய அரும்பொருள், உலகில் உள்ள ஒவ்வொரு பொருளிலும், அந்தந்தப் பொருளுக்கு அந்தந்தப் பொருளாய், அதுவதுவாய் நிற்கிறது. ஆயினும், அந்தப் பொருளின் தன்மையில் தான் தோயாமல், தன் தன்மையுடனேயே உள்ளது.

அத்தகு சிவபரம்பொருள் உயிர்களுக்குள்ள அறியாமையைப் போக்கும் பொருட்டு, உயிர்களுடன் ஒன்ருயும் வேருயும் உடனுயும் நிற்கும் திருவருட்சத்தியை விட்டு என்றும் பிரிவின்றி உடனுய் நிற்கிறது. அத்திருவருட் சத்தி ஆகிய திருவருளையே கண்ணுகக் கொண்டு, கற்பனை கடந்த சோதி ஆகிய சிவபரம் பொருளைக் கூடிநிற்பதே நிராதார யோகம் ஆகும்.

''உடன் நிற்கும் பொருள்'' என்பது சிவத்தினின்றும் பிரிவின்றி நிற்கும் திருவருட் சத்தியைக் குறிக்கும்.

''உடனுய் நிற்கை'' என்பது, அருளைத் துணைக்கொண்டு சிவனுடன் கூடி நிற்பதைக் குறிக்கும்.

## தன்னை மறந்து கூடும் முறைமை

**27. காண்கின்றது ஓர்பொருளைக் காண்கின்ற யோகிகளே**
**காண்கின்றார்; காட்சியறக் கண்ணுதலைக் – காண்கின்றார்**
**காண்பானும் காணப் படும்பொருளும் அன்றியே**
**காண்கையினால் கண்டனரே காண்.**

**தெளிவுரை:**

காண்பான், காட்சி, காணப்படும் பொருள் ஆகிய இம்மூன்றும் முறையே ஞாதிரு, ஞானம், ஞேயம் எனப்படும். இதனைத் திரிபுடி ஞானம் என்பர்.

காண்பான் – காணும் தொழிலை உடைய ஆன்மா.

காட்சி – காண்கிறோம் என்னும் தற்போதம் – அறிவு

காணப்படும் பொருள் – சிவபரம்பொருள்

கண்ணுதல் – சிவபெருமான்.

சிவபெருமானைக் காண்கின்ற சிவஞானிகள், தாம் காண்கிறோம் என்னும் தற்போதம் கெட்டுத் தம்மால் காணப்படும் நிலையில், தாம் வேறு சிவம் வேறு எனப் பிரித்துணரும் வேற்றுமை இன்றித் தம்மை மறந்து, உள்ளவாறு கண்டு அனுபவிப்பர்.

நம்முடைய தகுதி அறிந்து, சிவம் காட்டினாலன்றி, நம்முடைய அறிவைக்கொண்டு, சிவத்தைக் காண முடியாது என்பது இவ்வெண்பாவினால் பெறப்பட்டது.

''காண்பானும் காணப்படும் பொருளும் அன்றியே காண்கை'' என்பது, சிவபெருமான் வழங்கும் பேரின்ப நுகர்வை அனுபவிக்கும்போது, அனுபவிக்கிறோம் என்ற உணர்வோ, அவன் வழங்குகிறான் என்ற உணர்வோ இல்லாமல் சிவத்தோடு ஒன்றி நிற்றலைக் குறிக்கும்.

## நிராதார யோகத்திற்கு உரிய மௌன நிலை

**28. பேசாமை பெற்று அதனில் பேசாமை கண்டனரைப்**
**பேசாமை செய்யும் பெரும்பெருமான் – பேசாதே**
**எண்ஒன்றும் வண்ணம் இருக்கின்ற யோகிகள்பால்**
**உள்நின்றும் போகான் உளன்.**

தெளிவுரை:

இந்த வெண்பாவில் மூன்று இடங்களில், ''பேசாமை'' என்ற சொல் இடம் பெறுகிறது. முதலில் வரும் 'பேசாமை' என்பது, அமைதியாக இருந்து உலகில் உள்ள உயிர்களை நடத்தும் திருவருளைக் குறிக்கும். இரண்டாவது வரும் 'பேசாமை' என்பது, அந்தத் திருவருளின் உதவியாலேயே கண்ட சொற்பதம் கடந்து நிற்கும் சிவபரம்பொருளைக் குறிக்கும். மூன்றாவது வரும் 'பேசாமை' என்பது, அப்பரம்பொருளின் தன்மை இன்னது என்று சொற்களால் வெளிப்படுத்திக் கூறமுடியாத சிவானுபவம் ஆகிய மோன நிலையைக் குறிக்கும்.

திருவருளின் உதவியால் பெற்ற சிவபெருமான், புறத்தில் பேச்சு ஏதும் இல்லாமல், மனம் அடங்கிச் சிவயோக நிலையில் இருக்கும் சிவஞானிகளின் நெஞ்சத் தாமரையில், நீங்காது நிலைபெற்று இருக்கிறான் என்பது இவ்வெண்பாவுக்கு கருத்துப் பொருளாகும்.

''பேசாதே எண் ஒன்றும் வண்ணம் இருத்தல்'' என்பது, புறத்தே எவருடனும் உரையாடாமல் சித்தத்தைச் சிவன்பாலே வைத்து மோன நிலையில் இருத்தலைக் குறிக்கும். உளன் – உள்ளத்தில் இருப்பவன். பெரும் பெருமான் – தனக்கு உவமை இல்லாத சிவபெருமான்.

## இறை உண்மையை விளக்குதல்

**29. ஒட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்**
**தேட்டற்று நின்ற இடம்சிவமாம் – நாட்டற்று**
**நாடும் பொருள்அனைத்தும் நாஞ விதமாகத்**
**தேடும் இடம் அன்று சிவம்.**

தெளிவுரை:

சிவபெருமான், எத்தகையவன் என்பதை இவ்வெண்பா விளக்குகிறது.

நமது அறிவினால் உலகப் பொருள்கள் அனைத்தையும் சுட்டி அறிகிறோம். அவ்வாறு சுட்டி அறியப்படும் பொருள்கள் அனைத்தும், நிலையாக இருப்பதில்லை. அவை ஒரு காலத்தில் விளங்கித் தோன்றி நாளடைவில் மறைந்து ஒழிகின்றது.

சிவபெருமான் மாருத இயல்பு உடையவன், அவன் உலகப் பொருள்களைப் போல், ஒரு சமயம் விளங்கியும் பிறிதொரு சமயம் விளங்காமலும் இருப்பவனல்லன். எனவே, உலகப் பொருள்களைக் காணும் நமது அறிவைக்கொண்டு அவனைக் காண்பது என்பதுஇயலாததொன்று. நமது அறிவால் அவனைக் கண்டோம் ஆயின், அவனும் உலகப் பொருள்களைப் போல, அழியும் பொருளாகிவிடுவான். எனவே, நமது அறிவினுல் அறியப்படாத, என்றும் நிலைபேறுடைய பொருள் ஆகிய சிவபெருமானை, அவனருளைக் கொண்டே காணமுடியும் என்பது கருத்து. ஓட்டற்று – அங்குமிங்கும் ஓடாமல், தேட்டற்று – அலைந்து தேடாமல்; நாட்டற்று – நமது அறிவால் கண்டுவிடலாம் என்று நாடாமல், ''நானுவிதமாகத் தேடுவது'' என்பது, பலவாருக ஆராய்ந்து தேடுவதைக் குறிக்கும்.

## இறைவனைக் காண விழையும் ஆன்ம இயல்பு

**30. உணராதே யாதும் உறங்காதே உன்னிப்**
**புணராதே நீபொதுவே நிற்கில் – உணர்வரிய**
**காலங்கள் செல்லாத காலத்துடன் இருத்தி**
**காலங்கள் மூன்றினையும் கண்டு.**

**தெளிவுரை:**

சிவபெருமானைக் காணவிரும்பும் ஆன்மா ஆகிய உனக்கு மூன்று அறிவுரைகளைச் சொல்கிறேன்.

1. தனு கரண புவன போகங்கள் வேறு, நீ வேறு என்பதைத் தெளிந்துள்ள நீ வாசனை காரணமாக மீண்டும் அவற்ரேடு கூடாதே. (புணராதே).

2. அவற்றினின்றும் நீங்கிய பின்பும் அவற்றில் மயங்கி அழுந்தாதே (உறங்காதே).

3. உனது அறிவைக் கொண்டு, சிவபெருமானை அறிந்து கூடிவிடலாம் என்று எண்ணுதே (உணராதே); இங்கு 'உனது அறிவு' என்பது, பாசங்களினின்றும் நீங்கிய பசுஞானத்தைக் குறிக்கும்.

இந்த மூன்று குற்றங்களும் நீங்கப் பெறுவாய் ஆயின், உணர்வுக்கு எட்டாதவனும் காலங்களைக் கடந்து நின்று காலத்தின் உருவாக உள்ளவனும் ஆகிய சிவபெருமானுடன் நீயும்

முக்காலங்களையும் உனக்கு வேறாகக் கண்டு, அவனைப் போன்று அழிவற்ற நிலையைப் பெற்று இருப்பாய்.

'பொதுவே நிற்றல்' என்பது, உன்னை நடத்தும் திருவருளோடு சென்று, அதன் வழியிலேயே அதுவேயாய் ஆன்மா நிற்பதைக் குறிக்கும்.

காலங்கள் மூன்று – இறந்த காலம், நிகழ்காலம் மற்றும் எதிர்காலம்.

## பற்றினுள் பற்றை விட்டு நிற்றல்

**31.** **பற்றினுள் பற்றைத் துடைப்பதொரு பற்றுஅறிந்து**
**பற்றிப் பரிந்துஇருந்து பார்க்கின்ற – பற்றதனைப்**
**பற்றுவிடில் அந்நிலையே தானே பரம்ஆகும்**
**மற்றும் இது சொன்னேன் மதி.**

**தெளிவுரை:**

''பற்றினுள் பற்று'' என்பது, வினைப்பயனை விளைவிக்கும் உலகப் பொருள்களில் உள்ள விருப்பம் ஆகும். ''துடைப்பதொரு பற்று'' என்பது அந்த விருப்பத்தை அறவே நீக்குதற்கு உதவும் திருவருள் ஆகும். ''அறிந்து பற்றிப் பரிந்து இருந்து பார்க்கின்ற பற்று'' என்பது திருவருளைப் பற்றி நிற்கிறோம் என்பதை அறிந்து அந்த அறிவில் உணர்கின்ற தற்போதம் ஆகும்.

அஃதாவது, இந்த உலகப் பற்றில் உள்ள நமது விருப்பத்தை விடுவதற்கு, நமக்குப் பெரிதும் உதவுவது திருவருளே ஆகும். திருவருளின் துணைக்கொண்டு நிற்கும் அந்நிலை உயர்ந்த நிலைதான். அந்நிலையிலும் திருவருள் உணர்வை அன்றி, 'எனக்கு இறையருள் கிட்டிவிட்டது' என்னும் தன் உணர்வு வரக்கூடாது.

அத்தகைய தன்உணர்வு கைவிடப்பட்ட நிலையே, சிவம் மேற்பட்டு விளங்கும் நிலையாகும். இந்த உயர்ந்த உண்மையைச் சிறப்புடையதாகக் கருத்தில் கொள்ளவேண்டும்.

''பரம் தானே ஆகும்'' என்பது, திருவருளைப் பற்றி நிற்கும் நிலையிலும், உயிரின் தன்னுணர்வு கீழ்ப்பட்டு நிற்குமாயின், சிவம் தானே மேற்பட்டு விளங்கும். அதுவே பரநிலை ஆகும்.

## எதிலும் பற்று அற்று இருப்பது

32. அறிவுஅறிவாய் நிற்கில் அறிவுபல வாம்என்று
அறிவின் அறிவுஅவிழ்த்துக் கொண்டுஅவ் – அறிவினராய்
வாழ்ந்திருப்பர் நீத்தோர்கள் மானுடரின், மாணவக
தாழ்ந்தமணி நாவேபோல் தான்.

**தெளிவுரை:**

தன் அறிவைக்கொண்டு ஒவ்வொன்றையும் அறியும்போது தான் பற்றி நிற்கும் பொருள்கள் எல்லாவற்றிலும் அழுந்தி நின்று, அந்தந்தப் பொருளின் தன்மையைப் பெற்று, உயிரின் அறிவு பலவிதமாகச் சிதறும். எனவே, மாணவனே, குருவின் அருளால் உணர்ந்து, தற்போதப் பிணிப்பிலிருந்து விடுபடவேண்டும். அவ்வாறு விடுபட்டு, அந்த அருளில் ஒற்றித்து நிற்கவேண்டும்.

அவ்வாறு நிற்கையில், சார்ந்ததன் வண்ணமாம் தன்மை பற்றி, நீ மானுடப் பிறப்பில் உள்ள ''யான், எனது'' என்னும் உணர்வு நீத்தவன் ஆவாய். அவ்வாறு தற்போதம் நீத்தவர்கள், நிலத்திலே தாழ வைக்கப்பட்ட மணியினிது நாக்கினைப் போன்று அசைவற்று இருப்பார்கள்.

இவ்வெண்பா உலகப் பொருள்களில் அறவே பற்று அற்று இருப்பது எப்படி என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

## அம்பலவனை வழிபடும் முறை

33. ஓசைஎலாம் அற்றால் ஒலிக்கும் திருச்சிலம்பின்
ஓசைவழியே சென்று ஒத்து ஒடுங்கின் – ஓசையினில்
அந்தத் தானத்தான் அரிவையுடன் அம்பலத்தே
வந்து ஒத்தான் நத்தான் மகிழ்ந்து.

**தெளிவுரை:**

அம்பலவாணனின் திருவடியில் உள்ள சிலம்பு 'பரவிந்து' ஆகும். அச்சிலம்பிலிருந்து தோன்றும் ஓசை, 'பரநாதம்' ஆகும். உலகில் உள்ள ஆரவார ஓசைகள் ஒடுங்கினால், அந்த 'பரநாத' ஓசை நம் செவிக்குக் கேட்கும். அந்த ஓசையின் வழியே திருவருளை நாடிச் சென்றால், தற்போதம் அறவே நீங்கும். அந்நிலையே அந்தப் பரநாத ஓசை முடிந்த இடமாகும். அந்த இடமே, இறைவன் அருட்சத்தியுடன், அம்பலம் ஆகிய ஞானப் பெருவெளியில்

வந்துதோன்றி, தற்போதம் அறவே நீங்கி நிற்கும் ஆன்மாவை, பெருவிருப்புடனே மகிழ்ந்து, பிரிவு அற, ஒத்துக்கூடும் இடம் ஆகும். நத்தான் மகிழ்ந்து – பெருவிருப்புடன் மகிழ்ந்து

அரிவை – திருவருட் சத்தி

பரநாதம் – ஞானசத்தி

பரவிந்து – கிரியாசத்தி

## தியானத்தின் பயன்

**34.** சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகின் என்றமையால்,
சார்பு உணர்தல் தானே தியானமும்ஆம் – சார்பு
கெடஒழுகின் நல்ல சமாதியும் ஆம்; கேதப்
படவருவது இல்லை, வினைப் பற்று.

**தெளிவுரை:**

எல்லாப் பொருள்களுக்கும் சார்பாய் இருக்கும் சிவபெருமானின் திருவருளை உணர்ந்து, 'யான்' என்னும் தற்சார்பையும், 'எனது' என்னும் உலகச் சார்பையும் விட்டுத், திருவருள்வழி நடப்பதே தியனம் ஆகும்; சமாதியும் ஆகும்.

திருவருளை உணர்ந்து ஒழுகுவது, தியானம்.

யான், எனது என்னும் பற்று ஒழிந்து ஒழுகுதல், சமாதி, இவ்வாறு இருவகைகளில் நின்று ஒழுகுபவர்களுக்கு, ஊழ்காரணமாக வரும் துன்பம் தொடர்வதில்லை.

''தியானம்'' என்பது, திருவருளுடன் ஒத்து நின்று, சித்தம் ஒருக்கிச் சிவனையே நினைந்து போற்றுவதைக் குறிக்கும்.

''சமாதி'' என்பது, அவ்வாறு தியானிக்கும்போது, ''தியானிக்கிறேன்'' என்ற தன்உணர்வு ஆகிய சுட்டறிவு நீங்கப்பெற்றுச் சிவத்தோடு ஒன்றி அசைவற்று நிற்பது ஆகும். அந்நிலையே சிவனைக் கூடி மகிழும் சமாதி நிலையாகும்.

## அருள்வழி நிற்றற்குப் பயன்

**35.** அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே
நின்றபடி யேநிற்க முன்நிற்கும் – சென்று
கருதுவதன் முன்னம் கருத்து அழியப் பாயும்
ஒருமகள்தன் கேள்வன் உனக்கு.

**தெளிவுரை:**

உன் கருத்துக்கு மாறுபட்டு, உன்னை மயக்கத்தில் ஆழ்த்திவரும், வஞ்சப் புலன் ஐந்தின் வழியே, நீயும், உலகப் பொருள்களில் உழன்று சலிப்பு அடையாதே. இறைவன் உன்னேடு எப்படி நிற்கிருனே அப்படியே நீயும் அவனது திருவருளின் வழியே சென்று, உன்னை மறந்து அவனேடு கூடி நிற்பாயாக. அவ்வாறு நிற்பாய் ஆயின், பேரருளாளன் ஆகிய இறைவன், உனக்கு முன் வந்து தோன்றுவான்.

''நின்றபடியே நிற்றல்'' என்பது, உயிர்களின் பெத்த நிலையில் உயிர்களோடு உடனுய் இருந்தும், இறைவன் தன்னைப் புலப்படுத்திக் கொள்ளாமல் நின்றது போன்று, ஆன்மாக்கள் முத்திநிலையில் தம்மைப் புலப்படுத்தாமல், சுட்டுணர்வு கெட்டுத் திருவருளின் வழி அடங்கி நிற்றலைக் குறிக்கும்.

ஒருமகள் தன் கேள்வன் - அம்மையப்பர் ஆகிய சிவபெருமான்.

## சிவபெருமானது சிறப்பியல்பு

**36.** உண்டுஎன்னில் உண்டாகும் இல்லாமை இல்லைஎனில்
உண்டாகும் ஆனமையின் ஓர்இரண்டாம் உண்டு இல்லை
என்னும் இசைதவிர்ந்த இன்பத்தை எய்தும்வகை
உன்னில்அவன் உன்னுடனே ஆம்.

**தெளிவுரை:**

''உண்டு எனின், இல்லாமை உண்டாகும்; இல்லை எனின் இல்லாமை உண்டாகும். ஆனமையின், ஓர் இரண்டாம்'' என்று கொண்டு கூட்டிப் பொருள் காண்க.

நமது சுட்டறிவினுல், கருவி கரணங்களின் துணைக்கொண்டு அறிந்து, 'கடவுள்' உண்டு என்று கூறினுல், அவ்வாறு அறியும் பொருள் அனைத்தும் அழியக்கூடியன ஆகலின், கடவுள் இல்பொருள் ஆகி, அசத்தாய் முடியும்.

நமது அறிவினுல் அறியமுடியாது போயின், நமது அறிவுக்கு எட்டாத அப்பொருள், அப்போதும் இல்லை எனப்படும்.

ஆக, உயிரறிவினுல் அறியப்படாத இறைவன், அவனது திருவருளின்வழி நிற்கும் ஆன்மாக்களுக்குப் பேரின்ப அனுபவப்

பொருளாகத் தோன்றும் இயல்பு உடையவன் ஆவான். இடைவிடாது அன்பினுல் அவனே நினைந்து போற்றினுல், அவன் உன்னுடன் பிரிவின்றி இரண்டறக்கூடி நின்றுபேரின்பத்தை வழங்குவான்.

இறைவன் அனுபவப் பொருள்; அறியும் பொருளன்று.

## தத்துவங்களைப் பற்றிய தெளிவு

**37.** தூல உடம்புஆய முப்பத்தோர் தத்துவமும்
மூல உடம்பாம் முதல்நான்கும் – மேலேச்
சிவமாம் பரிசினையும் தேர்ந்துஉணர்ந்தார் சேர்ந்தார்
பவமாம் பரிசுஅறுப்பார் பார்.

**தெளிவுரை:**

ஆன்மாக்களின் ஆணவமலப் பற்று காரணமாக ஏற்படும் வினைப்பயனை நுகர்தற் பொருட்டு இறைவன், ஆன்மாக்களுக்கு வெவ்வேறு வகையான தனுகரண புவன போகங்களை வழங்குகிறுன்.

அவ்வாறு வழங்கும்போது, அந்தந்த புவனங்களில் வசிக்கும் நிலைக்கு ஏற்ப, சுத்தமாயையிலிருந்தும் அசுத்த மாயையிலிருந்தும், தனுகரணம் முதலானவற்றைக் கூட்டுகிறுன்.

சுத்தமாயையில் வசிக்கும் விஞ்ஞானகலர் ஆன்மாக்களுக்கு, சுத்தமாயா புவனத்தில் உள்ள தனு கரணங்களை வழங்குகிறுன்; வித்தியா புவனத்தில் வசிக்கும் பிரளயாகலர் ஆன்மாக்களுக்கு அசுத்த மாயா தனு கரணங்களைப் பூட்டுகிறுன்; பிரகிருதி மாயா புவனத்தில் வசிக்கும் சகலர் வகை ஆன்மாக்களுக்கு, தூல சூக்கும உடம்புகளைப் பிரகிருதி மாயாவிலிருந்தும் காரண, கஞ்சுக சரீரங்களை அசுத்த மாயையிலிருந்தும் கூட்டி அந்த ஆன்மாக்களைப் புசிக்குமாறு செய்கிறுன்.

காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை ஆகிய ஏழும் வித்தியா தத்துவம். பிரகிருதமாயையில் சித்தம் முதல் மண் ஈருன இருபத்து நான்கு தத்துவங்கள் உள்ளன. இந்த முப்பதொரு தத்துவமும் பிரளயாகலர் மற்றும் சகலர் வகை ஆன்மாக்களுக்கும் அந்தந்த புவனங்களுக்கு ஏற்ப தனு கரணங்களாக வருகின்றன. இவை சுத்த மாயையினை நோக்கத் தூலமாக இருப்பதால், இந்த

முப்பத்தொரு தத்துவங்களிலிருந்து பெறப்படும் உடம்பு, தூல உடம்பு எனப்படுகிறது.

விஞ்ஞானகலர் ஆன்மாக்களுக்குள்ள உடம்பு, விந்துத் தத்துவம் முதல் சுத்தவித்தை வரையுள்ள, சுத்தமாயையில் உள்ள நான்கு தத்துவங்களிலிருந்து பெறப்படுவதால், அது மூல உடம்பு எனப்படுகிறது. மூலமாயை ஆகிய சுத்தமாயையிலிருந்து பெறப்படும் உடம்பு ஆகலின் மூல உடம்பு எனப்படுகிறது.

முப்பத்தொரு தத்துவங்களிலிருந்து பெறப்படும் உடம்பு தூல உடம்பு என்றமையால், சுத்தமாயை நான்கிலிருந்து பெறப்படும் உடம்பு, 'சூக்கும உடம்பு' எனப்படாமல், 'மூல உடம்பு' எனப்பட்டதைக் கருத்தில் கொள்வது நல்லது.

மேலைச் சிவத்தத்துவம் என்பது, முப்பத்தாறு தத்துவங்களில் உள்ள நாதத் தத்துவம் ஆகும். நாதத் தத்துவம் விஞ்ஞானகலர் ஆன்மாக்களுக்கும் உடலாக வருவதில்லை. எனவே, அது 'மேலைச் சிவமாம் பரிசு' எனப்பட்டது. நாதத் தத்துவமே எல்லாத் தத்துவங்களுக்கும் மேலாக இருந்து சிவபெருமானின் ஞான ஆட்சிக்கு இடமாக இருக்கிறது. எனவே, அது மேலான தத்துவம் ஆகும்.

இவ்வாறு தத்துவங்களின் முறைமைகளையும் பயன்பாடுகளையும் தெளிவாக உணர்ந்து, அவற்றினின்றும் நீங்கிச் சிவபெருமானை மட்டுமே சார்ந்து நிற்கும் தன்மை உடைய ஞானிகளின் பிறப்பை ஒழித்துஅவர்களுக்கு வீடுபேற்றினை இறைவன் வழங்குவான். இதன் உண்மையை அறிவாயாக.

'பவமாம் பரிசு' என்பது பிறப்புக்குக் காரணமாகிய ஆணவமலத் தன்மையைக் குறிக்கும். 'அறுப்பார்' என்பது, அறவே நீக்குவார் என்பதாகும்.

'தேர்ந்துணர்ந்தார்' என்பது, முப்பத்தாறு தத்துவங்களும் என்னென்ன வகைகளில், உயிர்க்கு உதவும்படி இறைவன் அருளிச் செய்துள்ளான் என்பதைத் தெளிவாகத் தெரிந்து, அனுபவ அடிப்படையில் அறிபவர்களைக் குறிக்கும்.

''சேர்ந்தார்'' என்பது, இத்தெளிவினை உடையவர் பிறவிப்பிணி நீங்கப் பெறும் ஞானிகளோடு சேர்ந்து ஆணவமலத் தன்மை நீங்கப் பெறுவர் ஆகும்.

## அன்பு நெறியின் இயல்பு

38. எத்தனையோ தத்துவங்கள் எவ்வெவர்கோட் பாடுஉடைய
அத்தனையும் சென்றுஅங்கு அளவாதே – சித்தம்எனும்
தூதுவனைப் போக்கிப்போய்த் தூக்குஅற்ற சோதிதனில்
பாதிதனைக் கும்பிடலாம் பார்.

**தெளிவுரை:**

உலகத்தில் எத்தனையோ சமய வாதிகள் உள்ளனர். எத்தனையோ சமயத் தத்துவங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு சமயவாதியும் ஒவ்வொரு கொள்கைகளைக் கொண்டிருக்கிறார். அத்தனைக் கொள்கைகளையும் ஆராய்ந்து அறியமுடியாது. அதனால் தெளிவு ஏற்படாது.

எனவே, சிந்தனைத் தெளிவுடன் திருவருளைத் துணைக்கொண்டு அன்பு நெறியில் வாழ்ந்தால், சிவபெருமானின் திருவடிப் பேற்றினைப் பெறலாம். அன்புநெறி ஒன்றே உய்வைத்தரும். எனவே அதனைத் தெளிந்து காண்பாயாக.

'சித்தம் எனும் தூதுவன்' என்பது, நமது சிந்தனையைப் பல செய்திகளில் செலுத்துவதைக் குறிக்கும்.

''தூக்கு அற்ற சோதி'' என்பது, விசாரிப்பதற்குத் தேவையற்ற திருவருளைக் குறிக்கும். அஃதாவது, திருவருளின் ஆற்றலில் எந்தவித ஐயப்பாடும் தேவை இல்லை என்பது.

''பாதி' என்பது, சிவபெருமானின் ஒருபாதி ஆகிய திருவருளைக் குறிக்கும்.

## பற்றற்ற தன்மை

39. சாம்பொழுதும் ஏதும் சலம் இல்லை; செத்தாற்போல்
ஆம்பொழுதி லேஅடைய ஆசைஅறில் – சோம்புதற்குச்
சொல்லும் துணைஆகும், சொல்லாத தூய்நெறிக்கண்
செல்லும் துணை ஆகும் சென்று.

**தெளிவுரை:**

இறப்பதற்குமுன்பு உடம்புடன் கூடி இருக்கும் காலத்திலேயே இறந்தவர்களைப்போல, பொருள்களில் உள்ள பற்று நீங்கப்பெற்று இருக்கவேண்டும். அவ்வாறு இருந்தால் இறப்பு நேரும்போது எந்தவித மலக்கலக்கமும் ஏற்படாது.

இத்தகைய பற்றற்ற உணர்வு நிலேயே, ஆன்மா தன் கடமையைச் செய்து, இறைவன் அருள்வழியில் அடங்கியிருப்பதாகக் கூறப்படும். அதுமட்டுமன்றி, சொற்களால் விளக்கிக் கூறமுடியாத தூயநெறி ஆகிய வீடுபேற்று நெறியில் சென்று பொருந்துவதற்கு இவ்வுணர்வு நிலே சிறக்க துணேயும் ஆகும்.

'சோம்புதல்' என்பது, ஆன்மா தன் பணி நீத்து, இறைவன் அருள்வழியில் அடங்கி நிற்றலேக் குறிக்கும்.

'தூய்நெறி' என்பது, அவா அற்ற வீட்டுநெறி ஆகும். இந்த இடத்தில்

**''தூய்மை என்பது அவாஇன்மை; மற்றது**
**வாஅய்மை வேண்ட வரும்''** **(364)**

என்னும் குறள்மொழி சிந்திக்கத்தக்கது.

## வேண்டாமையின் மேன்மை

**40. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்**
**வேண்டின் அஃது ஒன்றுமே வேண்டுவது – வேண்டினது**
**வேண்டாமை வேண்டவரும் என்றமையால், வேண்டிடுக**
**வேண்டாமை வேண்டும்அவன் பால்.**

**தெளிவுரை:**

இறைவனிடம் ஏதாவது ஒன்றை விரும்பிக் கேட்கும்போது, மீண்டும் இவ்வுலகத்தில் பிறவாமல் இருக்கவேண்டும் என்பதையே கேட்கவேண்டும் என்று திருவள்ளுவர் கூறியுள்ளார். எனவே, 'பிறவாமை' ஆகிய அஃது ஒன்றையே இறைவனே வேண்டிப் பெறவேண்டியது ஆகும்.

அந்தப் பேறும், உலகப் பொருள்களில் வைத்த அவாவினே அறுத்தலாலேயே ஏற்படும் என்றும் அவர் கூறுகிறுர்; எனவே, இறைவனிடம் நாம் அனேவரும், பிறவாமைக்கு காரணம் ஆகிய அவா அறுத்தல் ஒன்றுமட்டுமே வேண்டிப் பெற வேண்டுவதாகும்.

இந்த வெண்பாவில் இரண்டு திருக்குறட் கருத்துகள் உள்ளன. அவை வருமாறு:

**''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது**
**வேண்டாமை வேண்ட வரும்''** **(362)**

''அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவாஅப் பிறப்புஈனும் வித்து'' (361)

## சமாதி நிலை கூடுதற்கு வழி

**41.** அரண உணர்வுதனில் அவ்வுணர்வை மாற்றில்
கரணமு காலும்கை கூடும் – புரணம் அது
கூடாமை யும்கூடும்; கூடுதலும் கூட்டினுக்கு
வாடாமை யும்கூடும் வந்து.

**தெளிவுரை:**

'அரண உணர்வு' என்பது, ஐம்பொறிகளில் ஆன்மா அழுந்தாமல் அந்த ஆன்மாவை அரண் செய்யும் திருவடி ஞானத்தைக் குறிக்கும்.

ஆன்மா, ஐம்பொறிகளில் செல்லும் போக்கை மாற்றினால் ஆன்மா, போதம் ஒழியும். அந்நிலையில் அந்தக்கரணங்களும் தச வாயுக்களும் ஆன்மாவின் வசம் அடங்கிவிடும். அதனால் திருவடி ஞானம் பெற்ற ஆன்மா, மீண்டும் ஏகதேச அறிவினால் தாக்கப்பட மாட்டாது. அந்நிலையில் ஆன்மாவுக்கு வியாபக நிலை வந்து சேரும். சேரவும், அத்தகைய ஆன்மாவின் உடலுக்கு எந்தவிதத் தீமையும் ஏற்படாது. உடல் வாட்டம் ஏற்படாது.

''புரணம் அது கூடாமை'' என்பது மீண்டும் ஏகதேச அறிவு (சுட்டறிவு) வந்து தாக்காமையைக் குறிக்கும்.

கூடு – உடம்பு, வாடாமை – வாடியழியாமை.

ஆக, சமாதி நிலை கூடுதற்கு வழி, ஐம்பொறிகளில் செல்லும் ஆன்ம அறிவை மாற்றுதல் செய்வதே ஆகும்; திருவடி ஞானம் பெறுதற்கும் அதுவே வழியாகும்.

## சிவபெருமானின் பேரருள்

**42.** இன்று இங்கு அசேதனமாம் இவ்வினைகள் ஓர் இரண்டும்
சென்று தொடரும் அவன் சென்றிடத்தே – என்றும்தான்
தீது உறுவன் ஆனால் சிவபதிதான் கைவிடுமோ
மாதொரு கூறு அல்லனோ மற்று.

**தெளிவுரை:**

நல்வினை, தீவினை ஆகிய இரண்டு வினைகளும் சடமே ஆகும். எனவே, அவ்விரு வினைகளும் தாமே சென்று ஆன்மாக்களுக்கு பயனாக வருவதில்லை. ஆகவே, வினைப்பயன் இறைவனால் ஊட்டப்படுகின்றன என்கிறோம்.

சீவன் முத்தர்களுக்கு, இந்தப் பிறப்பிலேயே இந்தப் பூவுலகிலேயே, அவர்கள் செய்த வினைகளின் பயன்கள் வந்து கூடும். அஃதாவது இறைவனால் ஊட்டப்படும், ஆயினும், அவர்கள் தற்போதம் கெட்டு, இந்த தேகத்தில் இருப்பதால் அவ்வினைப் பயனால் அவர்களைத் துன்புறுமாறு இறைவன் செய்வானா? செய்யமாட்டான். அம்மையப்பனாகிய சிவபெருமான் சீவன் முத்தர்களைக் கைவிடுவானா? நிச்சயம் கைவிடமாட்டான்.

சேதனம் – அறிவுடையது. அசேதனம் – அறிவற்றது. சடம்; ''அவன் சென்ற இடத்தே தொடரும்'' என்பது, சீவன் முத்தர் அவதரிக்கும் நிலையில் வினைப்பயனும் தொடருவதைக் குறிக்கும். ''மாதொரு கூறு'' என்பது, அம்மையப்பன் ஆகிய சிவபெருமானைக் குறிக்கும்.

## நம்மைக் காப்பது இறைவன் கடன்

**43.** அநாதி சிவன் உடைமை யால், எவையும் ஆங்கே
அநாதிஎனப் பெற்ற அணுவை –அநாதியே
ஆர்த்த துயர்அகல அம்பிகையோடு எவ்விடத்தும்
காத்தல் அவன் கடனே காண்

**தெளிவுரை:**

தொடக்கமில் காலந்தொட்டு, நாம் சிவபெருமானின் உடைமைகளாக இருக்கிறோம்; எனவே உயிர்கள் ஆகிய நாம் என்றும் அவனுக்கு அடிமைகளே ஆவோம்.

அநாதியே ஆணவமலத் தொடக்குக் காரணமாக உயிர் 'அணு' என்னும் பெயரைப் பெற்றுள்ளது. அந்த அநாதி நிலையிலே, நமது அறியாமைத் துன்பத்தை போக்கும் பொருட்டு, அம்மையப்பனாய் இருந்து நமக்குப் பேருதவி செய்தருளிய, சிவபெருமானே, இந்தச் சகல நிலையிலும் நம்மைத் துன்பங்களிலிருந்து காக்கும் கடமையை உடையவன் ஆவன். அதுமட்டுமன்று முத்திநிலையிலும் நம்மைக் காத்தருளும் கடமையையும் உடையவன் அவனே ஆவன்.

சிவனும் அநாதி உள்ளான்; உயிரும் அநாதியே உள்ளது, உயிர்க்குள்ள துன்பமும் அநாதியே உள்ளது. எனவே, அன்றுமுதல் என்றும் நம்மைக் காத்து அருள்வது, ''அநாதி முத்த சித்துரு'' ஆகிய சிவபெருமானுக்குக் கடமை எனப்பட்டது.

## வழிபடும் முறை

44. தம்மில் சிவலிங்கம் கண்டு, அதனைத் தாம்வணங்கித்
தம்அன்பால் மஞ்சனநீர் தாம்ஆட்டித் – தம்மைஒரு
பூஆகப் பூஅழியாதே கொடுத்துப் பூசித்தால்
ஓவாமை அன்றே உளன்.

**தெளிவுரை:**

'சிவலிங்கம்' என்பது, அட்ட மூர்த்தத்தைக் குறிக்கும். அட்ட மூர்த்தம் ஆவது நிலம், நீர், நெருப்பு, காற்று, வான், சந்திரன், சூரியன்,உயிர் ஆகிய எட்டுப் பொருள்களிலும் கலந்து நிற்கும் சிவபெருமானின் வடிவத்தைக் குறிக்கும்.

'தம்மில் சிவலிங்கம் காண்பது' என்பது, ஆன்மா தற்போதம் கெட்ட நிலையில், அட்டமூர்த்த வடிவினைப் பெறுகிறது என்பது ஆகும். அந்நிலையில் எல்லாப் பொருள்களையும் சிவமாகவே கருதி வணங்கும். அப்போது, சிவபெருமானிடத்து அன்பு மீதூர்ந்து நிற்கும். அவ்வன்பே அவனுக்கு திருமுழுக்காட்டு (அபிடேகம்) ஆகும். அதன்பிறகு தன்னையே ஓர் ஒப்பற்ற பூமாலையாக ஆக்கி அவனுக்குச் சாத்தும். அவ்வாறு தன்னையே முழுக்க முழுக்க சிவபெருமானிடத்து நிவேதிக்க நிவேதிக்க, அத்தகு ஆன்மாவினிடத்துச் சிவபெருமான் விளங்கித் தோன்றுவான். நிவேதித்தல் – ஒப்புவித்தல். ''பூ அழியாதே கொடுத்தல் பூசித்தல்'' என்பது, தான் என்னும் எண்ணம் நீங்காத நிலையிலும் தன்னை ஒப்புவித்து வழிபடுதல் ஆகும். ''பூ'' என்பது, தன்னையே அட்ட மலர்களாகப் பாவித்தல்.

## வீடுபேற்றின் இயல்பு

45. தன்னைப் பெறுவதன்மேல் பேறுஇலை; தான்என்றும்
தன்னைத்தான் பெற்றவன்தான் ஆர்என்னில் – தன்னாலே
எல்லாம்தன் னுள்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே
எல்லாமாய் நிற்கும் இவன்.

**தெளிவுரை:**

பெறுதற்கு உரிய பேறுகளிலே பெரும்பேறு என்பது, தான் அழிந்து போகாமலேயே, அருளின் துணைக்கொண்டு தன்னை உறுதியாக பெறுகின்ற பேறு ஒன்றே ஆகும். அஃதாவது, அருளினாலேயே நாம் வாழ்கிறோம் என்னும் உணர்வைப் பெற்று இருப்பதே ஆகும்.

அருளின் அருமையை உணர்வதற்கு முன்பு, நாம் பாசத்தொடர்பால் 'நான்' என்னும் உணர்வைப் பெற்று இருந்தோம். அருளின் பெருமையை உணர்ந்து நிற்கும் இந்நிலையில், நம்மை இந்நிலைக்கு உயர்த்தியவன் நம்மைப் பெற்றவன் (தந்தை) ஆகிய சிவபெருமான் என்பதை உணர்கிறோம்.

முன் உணர்வாகிய பாசத்தை ஒழித்ததுபோலவே, 'எல்லாவற்றையும் உணர்ந்தோம்' என்னும் உணர்வையும் ஒழித்து, நமக்கு என ஓர் உணர்வு இன்றிச் சிவ உணர்வுடனேயே வாழவேண்டும். அந்நிலையில், எல்லாமாய் நிற்கும் சிவபெருமான், நம் உணர்வில் ஒட்டி நிற்பன். அதுவே வீடுபேற்றின் பெருநிலை ஆகும்.

''கொண்டதைக் கொள்ளாதே'' என்பது, நமது அறிவுக்கு எட்டியதையே சதம் என்று கொள்ளாமல், சிவஉணர்வுடன் இருத்தலைக் குறிக்கும்.

## சிவயோகத்தின் இயல்பு

**46.** துன்பமாம் எல்லாம் பரவசனாய்த் தான்துவளில்;
இன்பமாம் தன்வசனாய்த் தான் இருக்கில் – என்பதனால்,
நின்வசனாயே இருக்கின் நின்உடனும் நேரிழையாள்
தன்வசனாயே இருப்பன் தான்.

**தெளிவுரை:**

பல மாயை கன்மங்கள் வசப்பட்டு, உயிர் அலையும் ஆயின் உயிரின் அனுபவம் அனைத்தும் துன்பமே ஆகும்; இன்பம் சிறிதுப் இல்லை.

பொறிபுலன்களைப் பாசப் பொருள்களில் செல்லவொட்டாது தடுத்து, அருள்வழியே செல்ல விடுவாயாகில், உனக்கு வரும் அனுபவம் அனைத்தும் இன்பமயமாகவே இருக்கும். அப்போது, துன்பம் சிறிதும் இல்லை.

அனைத்து வேதங்களும் ஆகமங்களும் இவ்வுண்மையையே கூறுகின்றன. எனவே, நீ பொறிபுலன்களின் வழியே பாசப் பொருள்களில் உன் அறிவைச் செலுத்தாமல், அருள்வழியே பேரின்ப நாட்டத்தில் உன் சிந்தனையைச் செலுத்து. அப்படிச் செலுத்தினல் அருளோடு என்றும் பிரிவின்றி நிற்கும் இறைவன் உன்னுடன் வந்து பொருந்தி நிற்பன். இதுவே சிவனோடு கூடியிருக்கும் சிவயோகம் ஆகும்.

இந்த இடத்தில்,

**''சென்ற இடத்தால் செலவிடா தீதுஒரீஇ**
**நன்றின்பால் உய்ப்பது அறிவு''**

என்னும் திருவள்ளுவர் வாய்மொழி சிந்திப்பதற்குரியது.

## தற்போதம் இழப்பதன் பயன்

**47.** **செத்தாரே கெட்டார்; கரணங்கள் சேர்ந்தஅதனேடு**
**ஒத்தாரே யோகபரர் ஆனவர்கள் – எத்தாலும்**
**ஆராதஅக்கரணத்து ஆர்ப்புண்டுஇங்கு அல்லாதார்**
**பேராமல் செல்வர், அதன்பின்.**

**தெளிவுரை:**

''செத்தார்'' என்றசொல், தற்போதம் இழந்தவரைக் குறிக்கும். தன்முனைப்பு நீங்குதலைக் குறிக்கும். ''கெட்டார்'' என்பது, சித்த விகாரக் கலக்கம் ஆகிய கருவிகரணங்களின் கேட்டை விடுதலைக் குறிக்கும்.

'செத்தார் கெட்டார்' என்பது, தன்முனைப்பு அற்றவர், சித்த விகாரங்களால் ஏற்படும் கலக்கத்தை நீக்கியவர் என்பதைக் குறிக்கும்.

அதே கருவிகரணங்களைக் கொண்டு, தற்போதம் இழந்த நிலையில், சிவத்தோடு ஒன்றி அவனருள் வழியில் அடங்கி ஒழுகுபவர்கள் சிவயோக நிலையினைக் கைவரப் பெற்றவர் ஆவர். எந்த வகையில் வைத்துப் பார்த்தாலும், அவா நீங்காமல் பொறிகளின் வாய்ப்பட்டு, அவற்றின் ஏவலிலிருந்து மீளாதவர்கள்

சிவயோக நிலையினைப் பெறமாட்டாதவர்களே ஆவர். எனவே, திருந்திய கருவிகரணங்களுடன் பொருந்தி, திருவருளில் அழுந்தி, திருவருளோடு ஒன்றி ஒத்துணர்தலே மெய்ப்பொருளை உணர்தற்கு வழியாகும்.

''திருந்திய கருவி'' ஆவது, புலன்வழிச் செல்லாது, அருள்வழிச் செல்லும் கருவிகரணங்களைக் குறிக்கும்.

## சிவயோகிகளின் பெருமை

**48.** **கண்ணும் கருத்தும் கடந்ததொரு பேறு, ஏயும்**
**கண்ணும் கருத்தும் களிகூர – நண்ணி**
**வடம்அடக்கி நிற்கும் வடவித்தே போல**
**உடன் அடக்கிநிற்பர், காண் உற்று.**

**தெளிவுரை:**

கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாத ஒரு ஒப்பற்ற பரம்பொருள் சிவபெருமான். அப்பேறபட்ட இறைவனை, ஓர் உடம்பில் கட்டுப்பட்டு இருக்கும் ஆன்மா எப்படித் தன் உள் அடக்கி வைக்க முடியும்? இத்தடைக்கு விடைகூறும் வகையில் இவ்வெண்பா அமைந்துள்ளது.

'வடம்' என்பது ஆலமரத்தைக் குறிக்கும். ஆலமரத்தின் வித்து, மிகமிகச் சிறியது. அந்த வித்து, விரிந்து பரவும் தன்மையினை உடைய ஆலமரத்தைத் தன்னுள் எப்படி அடக்கி வைத்திருக்கிறதோ அப்படியே சிவயோகிகளின் உள்ளத்தில் பரம்பொருள் ஆகிய முழு நிறைவு உடைய சிவபெருமானை அவர்கள் அடக்கி வைக்க முடியும்.

சிவயோகிகள், சுட்டியறியும் தற்போதத்தை விட்டுப் பரமே பார்த்திருக்கும் பர உணர்வு பெற்றவர்கள் ஆகலின், அவர்களால் அஃது இயலும். அஃதே அவர்கள் பெருமைக்குக் காரணம்.

''கண்ணும் கருத்தும் களிகூர நண்ணுதல்'' ஆவது, பரமே பார்த்திருக்கும் பரஞானிகளின் புறத்தும் அகத்தும் சிவமே தோன்றுவதால், அவர்கள் மகிழ்ந்து இருத்தலைக் குறிக்கிறது.

## மலவாதனை நங்கும் முறைமை

49. வானகமும் மண்ணகமு மாய்நிறைந்த வான்பொருளை
ஊன்அகத்தே உன்னும் அதுஎன்? என்றனையேல் – ஏனகத்து
வாதனையை மாற்றும் வகைஅதுவே; மண்முதலாம்
ஆதனமே அன்ருே அதற்கு

தெளிவுரை:

வானம் முதல் மண் ஈருக உள்ள எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்து, அந்தந்தப் பொருளுக்கு அந்தந்தப் பொருளாய் நிற்கும் பரம்பொருள் ஆகிய சிவபெருமானை, ஊனுல் ஆகிய இந்த உடம்புக்குள்ளே அடக்க நினைப்பது எப்படி? என்று கேட்பாயானுல், அதற்கு விடை வருமாறு;

என்னிடத்தில் உள்ள மலவாசனையை அறவே மாற்றும் சிவபெருமானின் இயல்பினை உணர்ந்து, என் உள்ளத்தே அவனையே நினைந்து நினைந்து உருகுவது ஒன்றே அதற்கு வழியாகும். அதற்குக் காரணம், அனைத்துத் தத்துவங்களும் உயிர்களும் ஆகிய எல்லாமே, சிவபெருமானுக்கு இடமாக இருப்பதுவே ஆகும். ஆதனம் – ஆசனம் – இடம்.

வாதனை – வாசனை – மலவாசனை – வாசனுமலம்.

ஏனகத்து – என்அகத்து – என்னிடத்தில்

''மண் முதலாம் ஆதனம்'' என்பது, மண்தத்துவம் முதலாக, உள்ள அனைத்துச் சேதனப் பொருள்களிலும் சிவபெருமான், அதுவதுவாய் இருப்பதால், அவை அவனுக்கு இடம் என்பதைக் குறிக்கும்.

## சரியைத் தொண்டின் சிறப்பு

50. ***கல்லில் கமரில் கதிர்வாளில் சாணைதனில்***
***வல்லுப் பலகையினில் வாதனையைச் – சொல்லும்***
***அகமார்க்கத் தால், அவர்கள் மாற்றினர்காண்; ஐயா***
***சகமார்க்கத் தால், அன்றே, காண்.***

**தெளிவுரை:**

இந்த வெண்பாவில், சரியைத் தொண்டு செய்து முத்திபெற்ற ஐந்து நாயன்மார்களின் தொண்டின் சிறப்பைக் கூறுகிருர்.

''அகமார்க்கம்'' என்பது அன்பு நெறியைக் குறிக்கும். சரியை கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நெறிகளுக்கும் உள்ளீடாக இருப்பது ''அன்புநெறி'' ஒன்றே ஆகும். எனவே, அகமார்க்கம் என்பது, இந்நான்கு நெறிகளிலும், வேறுயதோர் மார்க்கம் அன்று, சிவபெருமானிடத்துப் பேரன்பு கொண்டு இருப்பது ஒன்றே, அனைத்து நெறிகளிலும் உள்ளது.

இவ்வெண்பாவில் வரும் நாயன்மார்கள் தொண்டு வருமாறு.

1. திருக்குறிப்புத் தொண்டர் – சிவனடியார்களுக்கு ஆடைகளைக் கல்லில் துவைத்துக் கொடுத்து வந்தார்.

2. அரிவாட்டாய நாயனுர் – சிவபெருமானுக்கு உரிய நிவேதனப் பொருள், நிலவெடிப்பில் சிந்தியதால், தம் கழுத்தையே அரிந்தார். (கமர் – நிலவெடிப்பு).

3. ஏயர்கோன் கலிக்காமர் – சிவபெருமானைத் தூது அனுப்பிய சுந்தரரால் தனது சூலைநோய் தீரவேண்டா என்று தன் உடைவாளினுல் தற்கொலை செய்து கொண்டவர்.

4. மூர்த்தி நாயனுர் – சிவபெருமானுக்குச் சாத்துவதற்குச் சந்தனக் கட்டை கிடைக்காததால், தன் முழங்கையையே சாணையில் அரைத்தவர்.

5. மூர்க்க நாயனுர் – தாம் சூதாடும் பணத்தைச் சிவத்தொண்டுக்குச் செலவிட்டார்.

இவர்கள் யோகநெறியில் நிற்காமலே மலவாசனை நீங்கப் பெற்றனர்.

## மூவகை வழிபாடுகள்

**51.** **உள்ளும் புறம்பும் நினைப்புஒழியில் உன்னிடையே**
**வள்ளல் எழுந்தருளும் மாதிஞெடும் – தெள்ளி**
**அறிந்துஒழிவாய் அன்றியே, அன்புடையை ஆயின்,**
**செறிந்துஒழிவாய்; ஏதேனும் செய்**

**தெளிவுரை:**

சிவபெருமானை உனக்கு உள்ளேயே காணவேண்டும் என்றும் உனக்கு வெளியே காணவேண்டும் என்றும் நீ எண்ணினுய் ஆயின் அந்நிலையில் அவனை நீ காணமுடியாது. சிவன் இல்லாத இடம் இல்லை. முழுநிறைவுடைய வியாபகப்பொருள் ஆகிய சிவபெருமானைக் காண்பதற்கு, உனது ஆன்மபோதத்தைக் கைவிடவேண்டும். அவ்வாருயின், அம்மையுடன் வள்ளல் ஆகிய அவன் எழுந்தருளி வந்து உனக்குக் காட்சிதந்தருள்வான்.

எனவே, (1) சிவனை அனுபவிக்கிறோம் என்னும் தன்னுணர்வு நீங்கிய நிலையில் சிவத்தைப் பெறலாம். இது ஒருமுறை. (2) இஃது இயலாது போயின், இறைவனைப் பற்றிய தோத்திர சாத்திர நூல்களைத் தக்கார் வாய்க்கேட்டல், சிந்தித்தல், தெளிதல் ஆகிய தவங்களைச் செய்து வருவாயாயின், அந்நிலையில் உள்ளத்தை உருக்குவதாகிய பேரன்பினைப் பெறுவாய். அப்போது உனது தற்போதம் அழியும். இந்த வழியிலும் அவனைக் காணலாம். (3) இவ்விரண்டும் இயலாதாயின் உன்னால் இயன்ற சிவப்பணியைச் செய். நாளடைவில் அப்பணி உனக்கு சிவனைக் காணும்படிச் செய்யும்.

**குறிப்பு:** இவ்வாறு இந்த மூன்று வகைகளில் இரண்டாவது உள்ள நிலையே நமக்கு ஏற்றது.

## ஆன்மபோதம் அற்ற அன்பின் திறன்

**52.** கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை என்றமையால்,
கண்ணப்பன் ஒப்பதோர் அன்புஅதனைக் – கண்ணப்பர்
தாம்அறிதல் காளத்தி யார் அறிதல் அல்லது, மற்று
ஆர்அறியும் அன்பு அன்று அது.

**தெளிவுரை:**

திருவாசகத்தில், திருக்கோத்தும்பியில்,

''கண்ணப்பன் ஒப்பது ஓர் அன்பு இன்மை கண்டபின்'' என்று மணிவாசகப் பெருந்தகை அருளிச் செய்திருப்பதனால், கண்ணப்ப நாயனாரின், அன்போடு உவமித்துக் கூறத்தக்க பேரன்பின் தன்மையினைக் கண்ணப்ப நாயனாரும், அப்பேரன்பினை ஏற்றருளிப் பேரின்பத்தைக் கண்ணப்பநாயனார்க்கு வழங்கியருளிய திருக்காளத்தி மலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானும் மட்டும் அறிவார்கள். அஃதன்றி, அத்தகைய பேரன்பின் பெற்றியை வேறு எவரும் அறியமுடியாது. எவரும் அறியக்கூடிய எல்லையுள் அடங்கிய அன்பு அன்று அது, இவ்வுண்மையைத் தெளிவாக நீ புரிந்துகொள்வாயாக.

ஆன்மாவின் இச்சை அறிவு செயல் ஆகிய மூன்றும் தற்போதம் இழந்து, இறைவனைச் சார்ந்து நிற்றல் வேண்டும். கண்ணப்பநாயனாரின் இந்நிலையைச் சேக்கிழார்,

''அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்புஎன்றும்
அவனுடைய அறிவெல்லாம் நமைஅறியும் அறிவென்றும்
அவனுடைய செயல் எல்லாம் நமக்கு இனியவாம் என்றும்
அவனுடைய நிலை இவ்வாறு அறி – நீ என்று அருள் செய்வார்'' (157)

என்று கூறியருளியவாற்ருல் அறியலாம்.

## சேந்தஞரின் சீரிய அன்பு

**53.** அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை
அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க – அவிழ்ந்தசடை
வேந்தஞர்க்கு இன்அமுதம் ஆயிற்றே, மெய்அன்பில்
சேந்தஞர் செய்த செயல்.

**தெளிவுரை:**

''அவிழ்ந்த துணி'' என்பது, பலநாள் பயன்படுத்திய கந்தைத் துணியில் நூல்கள் பிரிந்திருக்கும்; ஊடு இழை விரிந்து, அந்தத் துணி அலசலாகவும் இருக்கும். அந்நிலையில் அதன் கட்டுக்கோப்பு குலைந்திருக்கும். அத்தகைய கந்தைத் துணியையே இங்கு 'அவிழ்ந்த துணி' என்கிருர்.

''அவிழ்ந்த மனம்'' என்பது, தற்போதம் இழந்து தன்நிலை குலைந்த உள்ளத்தைக் குறிக்கும்.

''அவிழ்ந்த சடைவேந்தஞர்'' என்பது, திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் ஆகிய சிவபெருமானைக் குறிக்கும்.

''அவிழ்ந்த அவிழ்'' என்பது அந்தக் கந்தைத் துணியில் இருந்த குழைந்த கனி அமுதைக் குறிக்கும்.

தற்போதம் அழிந்த நிலையில் சேந்தஞர், கந்தைத் துணியில் இருந்த குழைந்த கனிஅமுதைக் கனிந்த உள்ளத்தோடு, அம்பலவாணனுக்கு, நிவேதித்தபோது, அஃது அவனுக்கு இனிய திருஅமிர்து ஆயிற்று. சேந்தஞர் செய்த இந்தச்செயலே, தற்போதம் இழந்து, சிவபெருமானிடம் பேரன்பு கொண்டிருப்பதற்குச் சிறந்த சான்று ஆகும்.

## அம்மை மங்கையர்கரசியின் அன்புத் திறம்

**54.** சுரந்த திருமுலைக்கே துய்யசிவ ஞானம்
சுரந்துஉண்டார் பிள்ளைஎனச் சொல்லச் – சுரந்த
தனம்உடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனம்உடையாள் அன்புஇருந்த வாறு

**தெளிவுரை:**

சீகாழிக் குளக்கரையில் நின்று 'அம்மேயப்பா' என்று அழைத்தருளி அழுதருளிய சம்பந்தப் பிள்ளையாருக்கு, எண்ணரிய சிவஞானத்து இன்னமுதம் குழைத்தருளி, உமையம்மையின் திருமுலையில் சுரந்த பாலமுதைப் பிள்ளையார் உண்டார் என்ற செய்தியைக் கேட்டு அறிந்த அளவிலேயே, பிள்ளையார்பால் கொண்ட மகன்மைக் கேண்மையால், பால் சுரக்கின்ற தனத்தை உடையவர் ஆயினர் பாண்டிமாதேவி ஆகிய மங்கையர்க்கரசியார். அந்த அம்மையின் அன்பு இருந்த தன்மை, அளவிட்டுச் சொல்லுதற்கு அரியது.

'சுரந்த திருமுலை' என்பது, உமையம்மையின் திருமுலையைக் குறிக்கும். 'தூய' என்னும் சொல் 'துய்ய' எனத் திரிந்தது. 'துய்ய சிவஞானம்' என்பது, அளவைகளுக்கு அப்பாற்பட்ட சிவஞானத்தைக் குறிக்கும். சுரந்த தனம், மங்கையர்க்கரசியாரின் தனத்தைக் குறிக்கும்.

''தாழ்ந்த அன்புடையாள்'' என்பது, சிவபெருமானுக்கும் சிவனடியாருக்கும் என்றும் நாம் அடிமைகள் என்னும் பணிவொடு கூடிய பேரன்பினை உடைய மங்கையர்ககரசியாரைக் குறிக்கும்.

## இறைவனிடத்துள்ள அன்பின் திறம்

**55.** அன்பேஎன் அன்பேஎன்று அன்பால் அழுதுஅரற்றில்
அன்பேஅன் பாக அறிவுஅழியும் – அன்புஅன்றித்
தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்யும் அவை
சாற்றும் பழம்அன்றே தான்.

**தெளிவுரை:**

''அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்; அன்பே சிவம் ஆவது'' என்னும் திருமந்திரப் பொருளுக்குஏற்ப சிவபெருமானிடத்து அன்பு மீதூர்ந்து நிற்றல் ஒன்றே வீடுபேற்றை அளிக்கும்.

சிவபெருமானை நோக்கி, ''அன்பே உருவாகிய சிவபெருமானே, பேரன்பு செலுத்துதற்கு உரிய என் அன்பே'' என்று அவன்பால் அன்பு மீதூர்ந்து, இதுவரை இவ்வாறு அன்பு செலுத்தாமல் இருந்த தவற்றினை நினைந்து நினைந்து அழுது அதையே சொல்லிச் சொல்லி, தற்போதம் இழந்த நிலையில், அன்பிலேயே அன்பு அன்றி வேறு எதிலும் எண்ணம் இன்றி இருக்கும் நிலையில், நம்முடைய 'ஏகதேச அறிவு' ஆகிய சுட்டறிவு நம்மைவிட்டு நீங்கும்; அப்போது திருவடிப்பேறு கிட்டும். இவ்வாறு அன்பு செலுத்தாமல். கங்கை,காவிரி முதலிய நதிகளில் நீராடினாலும், கரணங்களை ஒடுக்கித் தியானம் செய்தாலும், மலர்தூவி வழிபட்டாலும் அவற்றால் பெறத்தக்க பயன் ஏதும் இல்லை.

(பழம்-பயன்) அன்பு ஒன்றினாலேயே அன்புருவாகிய சிவபெருமானை அடையமுடியும். அஃது ஒன்றே சிறந்த வழி.

## தற்போதம் ஒழிவதே சிறந்தது

**56. எல்லார் அறிவுகளின் தாற்பரியம், என் அறிவு**
**செல்லும் இடத்துஅளவும் சென்று அறிந்தேன் – வல்லபடி**
**வாதனையை மாற்றும் வகைஇதுவே மற்றுஅவற்றுள்**
**ஏதம் அறக் கண்டவிதம்.**

**தெளிவுரை:**

எல்லா மதங்களிலும் எல்லாச் சமயங்களிலும் எல்லாச் சாத்திரங்களிலும் உள்ள கருப்பொருள் ஆகிய நோக்கம் யாது என்பதை, எனது அறிவுக்கு எட்டிய அளவு, ஆராய்ந்து அறிந்தேன். அவை எல்லாவற்றிலும் உள்ள நோக்கம் இஃது என்பதை, என் குரு எனக்கு உபதேசித்தபடி தெரிந்துகொண்டேன். அஃது வருமாறு:

நம்முடைய குரு உபதேசித்தபடி நமது தற்போதம் ஆகிய மலவாசனையைப் போக்கி, பேரறிவும் பேராற்றலும் உடைய பரம்பொருளோடு ஒன்றி இருப்பது ஒன்றே, குற்றமறக் கண்ட கொள்கை என்பது.

எனவே, பழக்கத்தால் ஏற்பட்ட மலவாசனையை மாற்றி, தற்போதம் தோன்றாதவாறு, சிவபோதத்துள் ஒன்றி அடங்கி நிற்பது ஒன்றே திருவடிப்பேற்றினைப் பெறுவதற்குச் சிறந்தவழி என்பது பெறப்பட்டது.

''வாதனையை மாற்றும் விதம்'' என்பது, பொறி புலன்களினுல் பழகிய பழக்கத்தை மாற்றிச் சிவபெருமானிடத்து அன்பு மீதூர்ந்து நிற்கும் முறையைக் குறிக்கும்.

## ஞானத்தின் முடிவு

57. வித்தும்அதன் அங்குராமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம்
வித்தும் அதன் அங்குரமும் மெய்உணரில்–வித்துஅதனில்
காணுமை யால்அதனைக் கைவிடுவர்,கண்டவர்கள்
பேணுமையால் அற்ருர் பேறு.

தெளிவுரை:

வித்து – சிவம்; முளை – ஞானம். 'அங்குரம்' என்பது முளையைக் குறிக்கும்.

மெய்ஞ்ஞானம் என்பது, வித்தும் முளையும் போல இருக்கும். அஃது எப்படி எனில், வித்தினிடத்து முளைத்து எழுந்த முளை வெளிப்பட்டு இருக்கும்போது, வித்து மறைந்து இருப்பதைப் போன்றது. அஃதாவது, அருளுக்குக் காரணமாய் இருக்கும் சிவம் வெளிப்படாததால், அதனைக் காணமுடிவதில்லை.

அருளில் அழுந்தியிருப்பவர்கள்கூட, சிவத்தைப் பெறுவதே முடிந்த முத்திநிலை என்பதை அறியாமற்போனுல், அருளைப் பெற்றும் அவர்கள் சிவத்தைக் காணுமல், சிவப்பேறு ஆகிய முத்தியை இழந்தவர்களே ஆவர்.

முளையினைக் காண்பவர்கள் அதற்குக் காரணமாய் இருக்கும் வித்து இருப்பதை அறிவது போல, அருளைப் பெற்றவர்கள் ஞானத்தின் முடிந்த முடிவு சிவத்தைப் பெறுதலே என்பதை உணரவேண்டும், வித்தின்றேல் முளை இல்லை; சிவம் இன்றேல் அருள் இல்லை.

## சிவானுபவம் சொல்ல முடியாதது

58. ஒன்றுஅன்று; இரண்டு அன்று; உளது அன்று; இலது அன்று;
நன்றுஅன்று; தீதுஅன்று; நான்அன்று – நின்ற
நிலைஅன்று; நீஅன்று; நின்அறிவும் அன்று;
தலைஅன்று; அடிஅன்று தான்.

தெளிவுரை:

முத்திநிலையில் ஆன்மா சிவத்தோடு ஒன்றிய நிலையில், உணர்வினுல் ஒன்றும் அன்று. அந்நிலையில் சிவத்தினின்று பிரிதல் இன்மையால் இரண்டும் அன்று. சிவம் என்னும் தனியொரு முதல், ஆன்மாவுக்கு வேருகத் தோன்ருமையால், உள்ளதும் அன்று; அந்நிலையில் ஆன்மா பேரின்ப நுகர்ச்சி இருப்பதால், இல்லதும் அன்று. உலகியல் நிலையில் நல்லது தீயது என்று பகுத்து அறியும் உயிரறிவுக்கு அப்பாற்பட்ட நிலையில் சிவம் உள்ளதால், சிவம் நல்லதும் அன்று; தீயதும் அன்று.

முத்தி நிலையில், சுட்டுணர்விற்கு அப்பாற்பட்ட நிலையில் சிவம் உள்ளமையால், பெத்த நிலையில் ஆன்மாவாகிய நான் அன்று நின்ற நிலையும் இன்று அன்று. முத்திநிலையில் காட்சிப்பொருள் (ஞேயம்) ஆகிய உன்னைக் காணுமையால், நீ இல்லை. காட்சி (ஞானம்) ஆகிய உன் அறிவும் அந்நிலையில் இல்லை. உலகின் தோற்ற ஒடுக்கங்கட்கு அப்பாற்பட்ட நிலையில் நீ நிற்பதால், உனது முடிவையும் காணமுடியாது. உனது தோற்றத்தையும் காணமுடியாது. எனவே சிவாநுபவம் என்பது எந்த வார்த்தைகளாலும் சொல்லமுடியாத ஓர் அனுபவம் ஆகும்.

## ஆணவமலத்தை அறுப்பது எப்படி?

**59.** **செய்யாச் செயலைஅவன் செய்யாமை கண்டுஅதனைச்**
**செய்யாச் செயலில் செலுத்திஞல் – எய்யாதே**
**மாணவக! அப்பொழுதே வாஞ்சைக் கொடி வளர்க்கும்**
**ஆணவமும் அற்ருல் அறி.**

தெளிவுரை:

''செய்யாச்செயல்'' என்பது, இறைவன் ஒருவனுல் அன்றி, வேறு எவராலும் செய்யமுடியாத ஐந்தொழிலைக் குறிக்கும். ''அவன் செய்யாமை கண்டு'' என்பது, நம்மைப்போல் கருவிகரணங்களின் துணைக்கொண்டு செய்யாமல், (சங்கற்பமாத்திரையே) நினைவு அளவால், ஐந்தொழில்களையும் அவன் ஆக்காதே ஆக்கி, நோக்காதே நோக்கி, நொடியாதே நொடித்தல் ஆகிய திருவருளின் செயற்பாட்டினை உணர்ந்து' என்பதைக் குறிக்கும்.

ஆன்மாவும், கருவிகரணங்களின் வழியில் எதையும் செய்யாமல், சிவபெருமானது நினைவிலேயே, சிந்தையைச் செலுத்தி எதையும் செய்யும் ஆயின், மாணவனே, அந்நிலையில், அனைத்துக் கேட்டிற்கும் காரணமாகிய ஆணவமலம், ஆன்ம அறிவை மறைக்க இயலாதபடி ஆகி, ஆன்மாவுக்குப் பாசநீக்கம் ஏற்படும் என்பதை அறிவாயாக.

இரண்டாவது அடியில் உள்ள ''செய்யாச்செயல்'' என்னும் தொடர், ஆன்மா தனக்கு என எந்தப் பணியையும் செய்யாது, திருவருள் வழி அடங்கி நிற்றலைக் குறிக்கும். ''இத்தால் அறி'' என்றும் பாடம் உண்டு.

## அருள்வழியில் அடங்கி நிற்போருக்கு நியமம் இல்லை

**60. ஏதேனும் காலமுமாம்; ஏதேனும் தேசமுமாம்;**
**ஏதேனும் திக்கு ஆசனமுமாம் – ஏதேனும்**
**செய்தால் ஒருவலுமாம்; செய்யாச் செயல்அதனைச்**
**செய்யாமை செய்யும் பொழுது.**

**தெளிவுரை:**

தன் பணி நீத்துத் திருவருள் வழி அடங்கி ஒழுகுவர்கள், சாத்திரங்களில் (சிவாகமங்களில்) கூறப்படும் எந்தவித நியமங்களையும் (ஒழுங்கு முறைகளையும்) கடைபிடிக்கத் தேவை இல்லை.

இன்ன காலத்தில்தான் வழிபாடு செய்யவேண்டும் என்பது அவர்களுக்கு இல்லை; இன்ன இடத்தில் வைத்து, இன்ன திசையில் இருந்துதான் பூசனை செய்யவேண்டும் என்பது இல்லை. அவர்கள் எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் எந்த திசையிலும் அமர்ந்து பூசை நடத்தலாம். அவர்க்கு நல்வினை தீவினை என்று எதுவும் இல்லை. எந்த வினைப் பயனும் அவர்களை அணுகாது. ஒருவல் – கருவி கரணங்களின் நீங்கி நிற்றல்.

சில நூல்களில் பின் உள்ள இரண்டு அடிகளில் கீழ்க்காணுமாறு பாடபேதம் உள்ளது.

**''செய்வான் ஒருவனும் ஆம் செய்யாச் செயலதனைச்**
**செய்யாமை செய்யும் பொழுது''**

இதற்குப் பொருள் வருமாறு.

மேற்சொன்னபடி திருவருள் வழி அடங்கி நிற்கும் ஒருவன், எதைச் செய்தாலும், கருவி கரணங்களின் துணைக்கொண்டு செய்யாததால், அவன் செய்யும் செயல்களுக்குப் பயன் இல்லை என்பதாகும்.

## சிவாநுபவத்தைப் பெறுதற்கு எளிய வழி

61. செய்தற்கு அரிய செயல்பலவும் செய்துசிலர்
எய்தற்கு அரியதனை எய்தினர்கள் – ஐயோ, நாம்
செய்யாமை செய்து செயல்அறுக்கல் ஆயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு.

**தெளிவுரை:**

உலகில் எல்லோராலும் செய்வதற்கு இயலாத அரும் பெரும் செயல்கள் ஆகிய வலிய தொண்டுகளைச் செய்து, முன்னைத் தவம் உடைய பெருமக்கள் சிலர், பெறுதற்கு அரிய சிவபரம்பொருளை அடைந்து இன்புறுகின்றார்கள்.

அத்தகு அரிய தொண்டுகளைச் செய்யும் ஆற்றலைப் பெறாத நாம், தன் உணர்வு காரணமாக, பயனுள்ள செயல் எதனையும் செய்யாமல், பயனற்ற செயல்களைச் செய்து, வினைகள் நம்மைத் தொடாந்து வருத்தி வருவதை அறுக்க மாட்டாமல் அலமருகின்றோம். எனவே, தன்செயல் நீத்து இறைபணி நிற்றல் ஆகிய அருஞ்செயலை இன்னும் செய்யாமல் இருப்பது, அந்தோ, மிகவும் இரங்கத் தக்கதாகும்.

ஆக, சிவாநுபவத்தைப் பெறுதற்கு எளிய வழி தன்முனைப்பு அற்று இறைபணி நிற்றல் ஒன்றே ஆம்.

''செய்யாமை செய்து செயல் அறுத்தல்'' என்பது, செய்தற்கு அரியனவும் உரியனவும் ஆகியவற்றுள் எதனையும் செய்யாமல் திருவருளின் வழி நின்று தன்பணி நீத்தலைக் குறிக்கும். ''செய்யாமை செய்யாது இருத்தல்'' என்பது, தன்முனைப்பு அறுப்பது ஆகிய செயலைச் செய்யாமல் இருப்பதைக் குறிக்கும்.

## செய்ய வேண்டுவன வலியுறுத்தல்

62. இப்பொருள்கள் யாதேனும் ஏதுஎனினும் ஒன்றுசெய்தல்,
எப்பொருளும் செய்யாது ஒழிந்து இருத்தல் – மெய்ப்பொருளைக்
கண்டுஇருத்தல் செய்யாதே, கண்ட மனிதர்எலாம்
எண்டு இருப்பது என்னே உரை.

தெளிவுரை:

பெறுவதற்கு அரிய மனிதப் பிறவியைப் பெற்றுள்ள மக்கள் அனைவரும், சிவபெருமானை அடைதற்பொருட்டு (1) சிவப் பணிகளுள் ஏதேனும் ஒன்றினைச் செய்யவேண்டும். (2) அல்லது இவற்றுள் எதனையும் செய்யாமல், தன்செயல் அற்று இருத்தல் வேண்டும். (3) அல்லது சிவபெருமானையன்றி வேறு எதைப் பற்றியும் நினையாமல், அவனை இதயத்தில் எப்போதும் எண்ணியபடி இருக்கவேண்டும்.

இம்மூன்றில் ஏதேனும் ஒருசெயலைச் செய்யாமல், நிலையில்லாத இவ்வுலக போகங்களைத் துய்ப்பதிலேயே காலத்தைப் போக்குவது மனித வாழ்வின் குறிக்கோள் ஆகுமா? நன்றாக யோசித்துப் பதில் சொல்வாயாக.

சிவப்பணிகள் ஆவன, குருலிங்க சங்கம வழிபாடுகளைக் குறிக்கும், இந்த இடத்தில்,

''செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க
செய்யாமை யானும் கெடும்'' (466)

என்னும் வள்ளுவர் வாய்மொழி நினைவுகூர்தற்கு உரியது.

## தற்போதச் செயலைத் தவிர்க்கவேண்டுவதன் இன்றியமையாமை

63. வீட்டிலே சென்று வினைஒழிந்து நின்றிடில்என்?
நாட்டிலே நல்வினைகள் செய்திடில்என்? கூட்டிவாள்
சாத்தியே நின்றிலையேல், தக்கனர் வேள்விசெய்த
மாத்திரமே யாம்கண்டாய் வந்து.

**தெளிவுரை:**

வீடுபேற்றிற்கு காரணம் ஆகிய துறவறத்திலே போய், இருவினைகளையும் ஒழித்து நின்ருலும், நாட்டில் பயிலும் இல்லறத்திலே இருந்து நல்வினைகளைச் செய்தாலும் என்ன பயன்? கூடு ஆகிய சிவபெருமானது திருவடியில், ''வாய்'' ஆகிய ஆன்மபோதத்தை நீக்கி, அடங்கி நிற்காமல் போனுல், எந்தப் பயனும் இல்லை.

தக்கன் நல்வினைப் பயனைத் தரும் வேள்வியைத்தான் செய்தான். ஆனுல், சிவனை மறந்து தன்முனைப்புடன் அதனைச் செய்தான்; எனவே அவன் செய்தன யாவும் தீவினையாக முடிந்தன. இந்த உண்மையை உணர்ந்து தற்போதச் செயலைத் தவிர்க்க வேண்டுவதன் இன்றியமையாமையை அறிவாயாக.

கூடு – ஆன்மாக்கள் முத்தி நிலையில் கூடிமகிழும் இடம் ஆகிய சிவம்

வாள் – கூர்மையான தன்முனைப்பு – ஆன்மபோதம்.

''சாத்தி நிற்றல்'' என்பது, சிவபெருமானின் திருவடியையே சதம் எனக் கருதி, ஆன்ம போதத்தைத் தவிர்த்து, திருவருளில் அடங்கி நிற்றலைக் குறிக்கும்.

## ''எல்லாம் சிவன் செயல்'' என்பதற்கு விளக்கம்

**64.** **சிவன்முதலே அன்றி முதல்இல்லை என்றும்,**
**சிவன் உடையது என்அறிவது என்றும் – சிவன்அவனது**
**என்செயல் அது ஆகின்றது என்றும், இவையிற்றைத்**
**தன்செயலாக் கொள்ளாமை தான்.**

**தெளிவுரை:**

அநாதியே ஆணவமலத்தைப் பற்றி நமது இச்சை, அறிவு செயல்கள் எந்த இயக்கமும் இன்றி, முடங்கிக் கிடந்ததைக் கண்டு இரக்கப்பட்டு இறைவன் நம்மை பிறப்புட் படுத்தியதாலேயே நமது இச்சை, அறிவு, செயல்கள் தொழிற்படல் ஆயின. எனவே சிவபெருமானின் 'அருளாற்றல்' ஆகிய இச்சா சத்தியின் உதவியாலேயே, நமது விருப்பம் தொழிற்படுகிறது. சிவபெருமானின் அறிவாற்றல், ஆகிய ஞானசத்தியின் உதவியாலேயே, நமது அறிவு தொழிற்படுகிறது; சிவபெருமானின் ''செயலாற்றல்'' ஆகிய கிரியா சத்தியின் உதவியாலேயே, நமது செயல் தொழிற்படுகிறது.

இவ்வாறு இறைவன் உதவியாலேயே இயங்கும் நமது, இச்சை அறிவு செயல்கள், அவனது உதவியாலேயே நடைபெறுகின்றன என்பதை நினைத்துப் பார்க்காமல், நமது திறமையாலேயே எல்லாவற்றையும் நடத்துகிறோம் என்று எண்ணுவது. தன்முனைப்புக் காரணமாகக் கொள்வது ஆகும். எனவே, தன்முனைப்பு நீங்கி, எல்லாம் அவன் செயல் – சிவன் செயல் என்று எண்ணி வாழ்வதே மனிதப் பிறப்பின் பயன் ஆகும்.

## சைவ சமயத்தின் சிறப்பு

**65.** இன்றுஇச் சமயத்தின் அல்லது, மற்று ஏழையுடன்
ஒன்றுசொலி மன்றத்து நின்றவர் ஆர்? – இன்று இங்கே
அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவர்ஆர்?
எங்கும்இலை கண்டாய் இது.

**தெளிவுரை:**

பல்வேறு சமயங்களின் இடையே, இன்று நின்று நிலவி வரும் சைவ சமயம் போன்று சிறந்த சமயம் ஒன்று உண்டா? இல்லை. இதற்கு என்ன சான்று?

தில்லையில் பலரும் கூடிய அவையிலே, இலங்கை புத்தர்களுடன் நிகழ்த்திய வாதில், ஊமைப் பெண்ணைப் பேசும்படி செய்தருளி புத்தரை வாதில் வென்றருளிய மணிவாசகப் பெருந்தகையைப் போன்று எவரும் உளரா?

திருமயிலைச் சிவநேசரின் மகள், பூம்பாவை அரவு தீண்டி இறந்ததும், அவளது எலும்பினை ஒரு குடத்தில் சேமித்து வைத்திருந்தபோது, ஞானசம்பந்தப் பெருமான், அக்குடத்தில் உள்ள எலும்பு, பூம்பாவையாக உயிர்பெற்று எழும்படி பாடியருளிச் செய்தார். இது போன்ற நிகழ்ச்சி வேறு எந்தச் சமயத்திலாவது நடந்ததுண்டா? எந்தச் சமயத்திலும் இல்லை என்பதைத் தெளிவாக அறிந்து, சைவ சமயத்தின் சிறப்பை உணர்ந்து ஒழுகுவாயாக.

ஏழை – பெண்; இங்கு ஊமைப் பெண்ணைக் குறிக்கும்.
அங்கம் – எலும்பு.
சொலி – சொல்லி.
இலை – இல்லை.

## சீவன் முத்தரின் இயல்பு

**66.** விரிந்தும் குவிந்தும் விழுங்குவர்கள் மீண்டும்
தெரிந்தும் தெரியாதே நிற்பர் – தெரிந்தும்
தெரியாது நிற்கின்ற செயிழைபால் என்றும்
பிரியாது நின்றவனைப் பெற்று.

**தெளிவுரை:**

''தெரிந்தும் தெரியாது நிற்கின்ற சேயிழை'' என்பது, எக்காலத்தும் உலகுயிர்களோடு உடனாகி நின்று, அறிந்தும் அறிவித்தும் இயங்கும்போது, ஒன்றிலும் தோய்வின்றி நிற்கும் சிவசத்தியைக் குறிக்கும்.

''சேயிழைபால் என்றும் பிரியாது நின்றவனைப் பெற்று விழுங்குவர்கள்'' என்பது, அத்தகு சிவசத்தியை விட்டு எக்காலத்தும் நீங்காத சிவபெருமானை உறுதியாகப் பெற்று அவன் வழங்கும் பேரின்பத்தையே மாந்தி மாந்தி பருகும் சிவஞானிகள் ஆகிய சீவன் முத்தர்களைக் குறிக்கும்.

அத்தகு சீவன்முத்தர்கள், சுட்டறிவு நீங்கப் பெற்று தம் உணர்வை உலகப் பொருள்களில் புறத்தே செலுத்தாமல், அகத்தே சிவத்தோடு பொருந்தி நின்று, பேரின்பத்தைத் துய்த்த வண்ணம் இருப்பர்.

இங்ஙனம் இன்புறு நிலையில் நிற்கையில், பிராரத்த வாசனை காரணமாக, மீண்டும் அவர்கள் முன்பு பிரபஞ்சம் தோன்றினாலும் அப்பிரபஞ்சத்தைப் பார்க்காமல், சிவபரம்பொருளையே நினைந்து இருப்பர். இஃதே அவர்கள் இயல்பு.

விரிதல் – வியாபகப் பொருள் ஆகிய சிவத்தைச் சார்ந்து சுட்டறிவு நீங்கி நிற்றல்.

குவிதல் – புறத்தே உலகப் பொருள்களில் உணர்வைச் செல்லவொட்டாமல் அகத்தே சிவனைப் பொருந்தி நிற்றல்.

## சிவஞானிகளின் சிறப்பு

**67.** ஆதனமும் ஆதனியு மாய்நிறைந்து நின்றவனைச்
சேதனனைக் கொண்டே தெளிவுற்றுச் – சேதனனைச்
சேதனனி லேசெலுத்திச் சிற்பரத்த ராய்இருப்பர்,
ஏதம் அறக் கண்டவர்கள் இன்று.

தெளிவுரை:

ஆதனம் – உலகுயிர்.

ஆதனி – இறைவன்.

உலகுயிர்களோடு, பிரிவறக் கலந்து எங்கும் நீக்கமற நின்று இறைவனே, ஞானசிரியன் உபதேசித்து அருளியவாறு தெளிவாக உணர்ந்து, ஆன்மா தன்னைச் சிவனுக்கு உடைமைப் பொருளாகச் சிவனிடத்தே ஒப்புவித்து நிற்க, சீவன் முத்தர்கள் ஞானத்தின் மேலாகிய நிலையில் சிவம் ஆகியே நிற்பர். உடம்போடு கூடிய இம்மையிலும், மறைப்பற்றலால் மறைக்கப்படாமல், அருளாற்றலைக் கொண்டு நிற்பர்.

இன்று – இம்மை.

முதலில் வரும் சேதனன், ஞானசிரியன் ஆகிய குருவைக் குறிக்கும்.

இரண்டாவது வரும் சேதனன், பக்குவமுற்ற ஆன்மாவைக் குறிக்கும்.

மூன்றாவது வரும் சேதனன் (சேதனனிலே).

ஞானமே உருவாகிய இறைவனைக் குறிக்கும். 'ஏதும் அறுதல்' என்பது ஆணவமல மறைப்பு அறவே நீங்கியதால், மறைப்பாற்றல் அற்ற நிலையைக் குறிக்கும்.

## சீவன் முத்தர்களை இகழ்தல் பெரும் பாவம்

**68.** **தாம்அடங்க இந்தத் தலம்அடங்கும் தாபதர்கள்**
**தாம்உணரில் இந்தத் தலம்உணரும் – தாம்முனியின்**
**பூமடந்தை தங்காள்;புகழ்மடந்தை போய்அகலும்;**
**நாமடந்தை நில்லாள் நயந்து.**

தெளிவுரை:

தாபதர்கள் – தவச் செல்வர்கள் ஆகிய சீவன் முத்தர்கள்.

சீவன் முத்தர்கள், உலக மக்களின் உய்வைக் கருதி, வாழ்பவர்கள், அவர்கள் சிவபரம்பொருளில் ஒன்றி இருப்பர். எனவே, இந்த பூமியில் வந்து தோன்றுவதற்குள்ள தேவை அவர்களுக்கு இல்லை. சிவத்துள் அடங்கியுள்ள இந்த பூதலம் அவர்களிடமும் அடங்கியே உள்ளது.

சீவன் முத்தர்கள் உலக வாதனைகளால் தாக்கப் பெறுதவர். எனவே, அவர்கள் உலகத்தை அறியமாட்டார்கள். சிவ உணர்வுடன் வாழும் சீவன் முத்தர்களின் ஞான ஒளியே இவ்வுலகத்தவர்களுக்கு ஞானத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறது.

பொதுவாக சீவன் முத்தர்கள் வெகுளிக்கு இடம் தருவதில்லை. இந்த உலகத்தில் இறைவனுல் அனுப்பப்பட்டு அவர்கள் தங்கி இருக்கும் காலத்தில், அறிவில்லாமல் எவரேனும் அவர்களை அவமரியாதை செய்வார்களாயின், அவர்கள் அவ்வறிவிலிகளைச் சற்றே சபிப்பார்கள்.

அந்த சாபத்திற்கு உட்பட்டவர்களிடத்தில் உள்ள பொருட் செல்வம் அழியும்; புகழ் ஒழிந்து இகழப்படுவர்; செல்வாக்கை இழந்துவிடுவார்கள். (நயந்து – விரைந்து).

எனவே, சிவமே திரு எய்திய சீவன் முத்தர்களைப் பெரிதும் மதித்து ஒழுகவேண்டுவது நமக்கு இன்றியமையாத கடமை ஆகும்.

## சீவன் முத்தர்களின் செயல்கள் சிவன் செயலே

**69.** **துரியம் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்**
**பிரியாதே நிற்கின்ற பெம்மான் – துரியத்தைச்**
**சாக்கிரத்தே செய்துஅருளித் தான்செய்யும் தன்மைகளும்**
**ஆக்கியிடும் அன்பர்க்கு அவன்.**

**தெளிவுரை:**

துரியம் கடந்த நிலை – நின்மல துரியத்தைக் கடந்த நிலை; அஃதாவது உயிர்களின் சுட்டறிவுக்கு எட்டாத நிலை, சுடர்த் தோகை – திருவருள்.

திருவருளோடு என்றும் பிரிப்பின்றி நின்று அருளும் சிவபெருமான், சீவன் முத்தர்களை எப்படி நடாத்துகிறுன் என்பதை இவ்வெண்பா விளக்குகிறது.

சிவநினைவுடனேயே இருக்கும் சிவஞானிகள் ஆகிய சீவன் முத்தர்களுக்கு சிவபோகம் ஆகிய பேரின்பத்தை, இவ்வுலகில் அவர்கள் வாழும்போது, அவர்களுக்குள்ள நனவு நிலையிலேயே வழங்கி அருளித் தான் செய்தற்குரிய திருவருட் செயல்களை இறைவன் அவர்களோடு உடனாய் நின்று, அவர்களைக் கொண்டு செய்வித்து, ''அவர்களே செய்தார்கள்'' என்னும் வினைமுதற் றன்மையை அவர்களுக்கு உரித்தாக்குகிறான்.

எனவே, சீவன் முத்தர்கள் ஆகிய சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் முதலானவர்கள் இங்கு அருளிச் செய்தன எல்லாம், இறைவனது அருளிப்பாடுகளே அல்லாமல், வேறு அன்று என்பதை நாம் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும்.

## சம்பந்தப் பெருமானின் அருளிச் செயல்கள்

**70.** ஓடம், சிவிகை, உலவாக்கிழி, அடைக்கப்
பாடல், பனை, தாளம், பாலைநெய்தல் – ஏடுஎதிர், வெப்பு
என்புக்கு உயிர்கொடுத்தல் ஈங்குஇவைதாம் ஓங்குபுகழ்த்
தென்புகலி வேந்தன் செயல்

**தெளிவுரை:**

தென்புகலி வேந்தன் செயல் – அழகு பொருந்திய ''புகலி'' என்னும் சீகாழிப் பதியில் தோன்றியருளிய திருஞானசம்பந்தப் பெருமானின் அருளிச் செயல்கள் இவ்வெண்பாவில் பேசப்படுகின்றன. அவை வருமாறு:

1. முள்ளிவாய்க் கரையிலிருந்து ஆற்றுப் பெருக்கில் ஓடத்தில் அமர்ந்து, திருப்பதிகம் பாடியே திருக்கொள்ளம்புதூர் சேர்ந்தருளினார். கோல்கொண்டு ஓடத்தைச் செலுத்தவில்லை.
2. திரு அரத்துறையில் முத்துச் சிவிகை பெற்றருளினார்.
3. திருவாவடுதுறையில் உலவாக்கிழி பெற்றது.
4. திருமறைக்காட்டில் மறைக்கதவம் அடைக்கப் பாடியது.
5. திருவோத்தூரில் ஆண்பனையைப் பெண்பனை ஆக்கியது.
6. திருக்கோலக்காவில் பொற்றாளம் பெற்றது.
7. திருநனிபள்ளியில் பாலை நெய்தல் ஆகப் பாடியது.
8. மதுரையில் வைகையாற்றில், திருப்பதிக ஏடு எதிர் ஏறப்பாடியது.

9. கூன்பாண்டியனுக்கு வெப்பு நோய் தீர்த்தருளியது.
10. மயிலாப்பூரில் எலும்பை பெண் ஆக்கியது.

இவ்வரலாற்றின் விரிவான விளக்கத்தை, இம்மையத்தின் இரண்டாவது வெளியீடு ஆகிய ''பன்னிரு திருமுறை வரலாறு'' என்னும் நூலில் காண்க.

## அப்பரடிகளின் அருளிச் செயல்கள்

**71.** **கொல்கரியின் நீற்றறையின் நஞ்சில் கொலைதவிர்த்தல்,**
**கல்லே மிதப்பாய்க் கடல் நீந்தல் – நல்ல**
**மருவோர் மறைக்காட்டில் வாசல் திறப்பித்தல்**
**திருவாமூர் ஆளி செயல்.**

**தெளிவுரை:**

''திருவாமூர் ஆளி'' என்பது, திருவாமூரின் அரசர் ஆகிய திருநாவுக்கரசுப் பெருந்தகையைக் குறிக்கும். அவர்கள் செய்தருளிய அருளிச் செயல்கள் வருமாறு:

(1) சமணர்களால் ஏவப்பட்டுக் கொல்வதற்காக வந்த யானையினின்றும், (2) அடைத்துத் தாள் இடப்பட்ட நீற்று அறையினின்றும், (3) பால் சோற்றோடு கலந்து கொடுத்த கொடிய நஞ்சினின்றும், தம்மைக் கொல்வதற்காக ஏற்படுத்திய சூழ்ச்சிகளை வென்றார்கள், (4) சமணர்கள் கல்லோடு பிணித்துக் கடலில் தள்ளிய நிலையில், அந்தக் கல்லையே தெப்பமாகக் கொண்டு, கரை ஏறினார்கள். (5) மணம் பொருந்திய திருமறைக்காட்டில் நெடுங்காலமாக அடைக்கப்பட்டிருந்த திருக்கதவம் திறக்கும்படி திருப்பதிகம் பாடியருளினார்கள்.

இவையெல்லாம் பெருந்தகை அருளிச் செய்த அருளிப்பாடுகள்.

ஆளி – ஆள்பவர் – அரசர்

திருநாவுக்கரசுப் பெருந்தகை அவதரித்தருளிய ஊர் திருவாமூர் ஆகும். இந்த அருளிச் செயல்களின் விரிவான செய்திகளைப் ''பன்னிரு திருமுறை வரலாறு'' என்னும் நூலில் காண்க.

## சுந்தரப் பெருமானின் அருளிச் செயல்கள்

**72.** மோகம் அறுத்திடின், நாம் முத்தி கொடுப்பதுஎன
ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத் – தோகையர்பால்
தூதாகப் போகவிடும் வன்தொண்டன் தொண்டுகளை
ஏதாகச் சொல்வேன் யான்?

**தெளிவுரை:**

மோகம் என்பது காமம். ''காமத்தை வேர் அறக் களைந்த மெய்யுணர்வு உடையவர்களுக்கே நாம் வீடுபேற்றினை வழங்குவோம்'' என்று சிவபெருமானே அருளிச் செய்திருப்பதாகச் சிவாகமங்களில் கூறப்பட்டுள்ளது. அவ்வாறு கூறிய சிவபெருமானையே, சங்கிலி நாச்சியாரிடத்தும் பரவை நாச்சியாரிடத்தும் தமது விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டு சுந்தரர் பெருமான், தூதராக அனுப்பினார். இவ்வாறு சுந்தரர் பெருமான் செய்தது தோழமை உறவு காரணமாகவே ஆகும்.

இவ்வாறு வன்தொண்டர் ஆகிய சுந்தரர் செய்தருளிய திருத்தொண்டுகளை, உலகியல் நோக்கில் காணுவோம் ஆயின், சரியன்று எனவே தோன்றும். ஆனால், இறையியல் நோக்கில் காணும்போது சரி என்றே படுகிறது. சுந்தரர்பெருமானை அன்றி வேறு எவராலும் இச்செயல் கூடாமையின், இதன் பெருமையை எவ்வாறு எடுத்துரைக்க முடியும்? இது அளவிட்டுரைக்க முடியாத அளவு பெருமை வாய்ந்தது.சீவன் முத்தர்களுக்கு உள்ள விதி, உலகியலுக்குப் பொருந்தாது என்பது கருத்து.

## மணிவாசகரின் அருளிச் செயல்கள்

**73.** பாய்பரி ஒன்று அந்தப் பரமானந்தப் பரனைத்
தூயதிரு வாய்மலரால் சொல்செய்து – மாயக்
கருவாதை யாம்அறியா வாறு செய்தான் கண்டாய்
திருவாத வூர்ஆளும் தேன்.

**தெளிவுரை:**

பரமானந்தப்பரன் – உரையின் வரம்பும் பொருளின் எல்லையும் கடந்து நிற்கும் சிவபெருமான். பாய்பரி ஒன்று – தாவி வரும் குதிரையின்மேல் பொருந்தி எழுந்தருளியது.

(மணிவாசகர் வரலாற்றில் இதன் விரிவைக் காண்க)

பேரின்ப வடிவினன் ஆகிய சிவபெருமானை, தூய்மை பொருந்திய மலர் போலும் தம் திருவாயில் தோன்றிய சொல் மலர்களால், ''திருவாசகம்'' என்னும் அரிய பாமாலைகளைப் பாடிப் போற்றியருளினார் மணிவாசகப் பெருந்தகை.

வஞ்சனையைச் செய்யும் கொடிய துன்பத்தினை நாம் எல்லாம் அறியாதவாறு, நமது பிறவிப்பிணியைத் திருவாசகம் என்னும் நூலினைச் செய்தருளிப் போக்கியருளினார், பெருந்தகை.

அத்தகு பெருமைக்குரிய மணிவாசகப் பெருந்தகையை நினைப்பவர் உள்ளத்தில் தேன்போன்று இனித்தலைச் செய்யும் அருமையை உடையது திருவாசகம்.

அவர் திருவாதவூர் என்னும் திருத்தலத்தில் அவதரித்தவர், ஆளும் – திருவாதவூரின் அருளரசர்.

கண்டான் – இவ்வுண்மையை அறிவாயாக.

## சிவயோகம் ஒன்றே முத்தியை வழங்குவது

**74. அம்மையிலும் இம்மையிலும் அச்சம் தவிர்த்து அடியார்**
**எம்மையுமாய் எங்கும் இயங்குதலான் – மெய்ம்மைச்**
**சிவயோக மேயோகம் அல்லாத யோகம்**
**அவயோகம் என்றே அறி.**

**தெளிவுரை:**

அம்மையில் அச்சம் – இனிவரும் பிறப்புக்களில் உண்டாகும் துன்ப உணர்வு.

இம்மையில் அச்சம் – இந்தப் பிறப்பில் ஏற்படுகின்ற துன்ப உணர்வு.

சிவனுடன் ஒன்றி வாழும் சீவன் முத்தர்கள், மக்களுக்கு இப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் வரும் துன்ப உணர்வுகளைப் போக்குவார்கள். அவர்களைச் சார்ந்து, அவர்கள் அருளிச் செய்துள்ளபடி வாழ்பவர்களையும் நல்ல நிலையில் இருக்கும்படி செய்வர்.

அதற்குக் காரணம், சிவனருளில் ஒன்றுபட்டு ஒழுகும் தன்மையது ஆகிய சிவயோகத்தினை அவர்கள் உடையவர்களாக இருப்பதுவே ஆகும். எனவே சிவயோகம் ஒன்றே யோகம் ஆகும்.

அஃது அல்லாத பிற யோகம் எல்லாம், பிறவிக்கு வித்து ஆகி இடர் விளைவிப்பன ஆகலில், அவையெல்லாம் அவயோகம் என்பதை அறிவாயாக.

சிவயோகம் – சிவத்துடன் கூடுதல்.

அவயோகம் – வினையுட்படுத்தும் வீண் யோகம்.

''எம்மையுமாய் எங்கும் இயங்குதல்'' என்பது தம்மைச் சார்ந்தார்க்கு எவ்விடத்தும் அருளிச் செய்தலைக் குறிக்கும்.

## சிவபெருமானின் நடுவு நிலைமை

**75. மன்னன் அருள் எவ்வண்ணம் மானுடர்பால்? மாணவக,**
**அன்ன வகையது அரன்அருளும் – என்னில்**
**அடியவரே எல்லாரும் ஆங்குஅவர்தாம் ஒப்பில்**
**அடியவரே எல்லாம் அறி.**

**தெளிவுரை:**

ஒரு நாட்டை ஆளும் அரசனது அருட்குணம் குடிமக்கள் எல்லோரிடத்தும் எப்படி ஒரே மாதிரிப் பயன் அளிக்கிறதோ, அப்படியே இறைவனது திருவருளும் உயிர்கள் எல்லாவற்றிற்கும் ஒரே தன்மையில் பயன் தருவதாகும். எனவே, எல்லோரும் இறைவனுக்கு அடியவரே ஆவர்.

ஆயினும், அரசன் தன்பால் பேரன்பு உடையவராய் ஒழுகும் குடிமக்களை எப்படிப் பல பதவிகளில் வைத்துத் தன்னைப்போல் பாவிக்கிறானோ, அப்படியே இறைவனும், தன் திருவருள்வழி நின்று, தற்செயல் அடங்கி ஒழுகும் ஆன்மாக்களைச் சிறப்புடைய அடியார்கள் ஆக்கி, அவர்களுக்குப் பல்வேறு முத்திப் பதங்களை வழங்கியருள்கின்றான்.

எனவே, இறைவன் என்றும் நடுவு நிலைமையினை உடையவனே ஆவன். தன் மாட்டுப் பேரன்பு உடையவர்களைத் தன்போல் ஆக்கி அவர்கட்குப் பேரின்பம் வழங்குவது, அந்த ஆன்மாக்களின் தகுதி நோக்கியே ஆகும்.

## உற்ற சிற்றின்பமே பேரின்பமாம்

**76. உடம்புஉடைய யோகிகள்தாம் உற்றசிற் றின்பம்**
**அடங்கத்தம் பேரின்பத்து ஆக்கில் – தொடங்கி**
**முளைப்பதும் ஒன்றுஇல்லை; முடிவதும் ஒன்று இல்லை;**
**இளைப்பதும் ஒன்று இல்லை இவர்.**

தெளிவுரை:

உடம்போடு கூடிவாழும் சீவன் முத்தர்கள், 'தம்மைப் பொருந்தின அனுபவப் பொருள்கள் அனைத்தையும் தமக்கு உரியன எனக் கருதுவதில்லை. பேரின்பப் பொருளாகிய சிவபெருமானிடத்தில் அவர்கள், தம்மை ஒப்படைத்துவிட்டவர்கள். எனவே, விருப்பு வெறுப்புக் காரணமாக வரும் ஆகாமியவினை அவர்களுக்கு இல்லை; அதனால், அவர்களுக்கு மறுபிறப்பு இல்லை. ஆணவமலச் சார்பு அவர்களுக்கு இல்லாமையால், அதனால் ஏற்படும் மறைப்பும் அவர்களுக்கு ஏற்படுவதில்லை. பிறவிச் சூழலில் சிக்கித் தத்துவச் சேட்டைகள் காரணமாக, அவர்கள் தளர்ச்சி அடைவதும் இல்லை.

உலக முகப்பட்டு, மாயா காரியங்களால் ஆகிய உடம்போடு கூடி வாழும் நிலையிலும், சீவன் முத்தர்கள் சிவ உணர்வோடு தன் உணர்வு அற்று இருப்பதால், இவ்வுலக இன்பங்கள் அனைத்தும் அவர்களுக்குப் பேரின்பமாகவே உள்ளன.

இதில் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய செய்தி, நம்முடையது என்று கூறுவதற்கு இவ்வுலகில் எதுவுமே இல்லை என்பது ஆகும். எல்லாம் சிவனது உடைமைகளே ஆகும்.

## பேரின்ப நுகர்வு

**77.** பேரின்ப மான பிரமக் கிழத்தியுடன்
ஓர் இன்பத்து உள்ளானை உள்ளபடி – பேரின்பம்
கண்டவரே கண்டார்; கடல்உயிர்த்த இன்அமுதம்
உண்டவரே உண்டார் சுவை.

தெளிவுரை:

அளவிட்டுக் கூறமுடியாத பேரின்பம் உடையவன் சிவபெருமான். அவனுக்கு உரிமை உடையவள், பராசத்தி; அவளோடு என்றும் பிரிவின்றிக் கூடி நிற்கும் சிவபெருமானைப் பிரிவு அறக் கலந்து, அவனது அருளின்பத்தை உள்ளபடியே நுகரப் பெற்றவர் எவரோ, அவரே பேரின்பத்தின் தன்மையை உள்ளவாறு உணரப் பெற்றவர் ஆவர்.

கடலில் தோன்றிய இனிய அமுதத்தை நுகர்ந்து, அதன் சுவையில் அழுந்தினவர்களே, அந்த அமுதத்தை உள்ளவாறு நுகர்ந்தோர் ஆவர்.

பிரம கிழத்தி – பராசத்தி ஆகிய திருவருள்.

ஓர் இன்பம் – ஒப்பற்ற இன்பம்; இறைவனின் பேரின்பத்திற்கு இணையான இன்பம் வேறேதும் இல்லை.

''உள்ளபடி காண்பது'' என்பது, சிவபெருமான் ஒருவனே பேரின்பத்தை உடையவன் என்பதால், அவனை அன்றி வேறு எவரையும் கருதாது, அவனோடு ஒன்றி நிற்றலைக்குறிக்கும்; பாவனையால் அன்றி, உண்மையிலேயே அவனருளில் தன்னை இழந்து நிற்றலும் ஆகும்.

## சிவனும் அருளும் ஒரு பொருளே

**78.** **நம்கையினால் நாம் அனைத்தும் செய்தால்போல் நாடு அனைத்தும்**
**நங்கையினால் செய்து அளிக்கும் நாயகனும் நங்கையினும்**
**நம்பியாய்த் தான்நடுவே நாட்டப் பெறும்இதுகாண்**
**எம்பெருமா னார்தம் இயல்பு.**

**தெளிவுரை;**

உயிர்கள் ஆகிய நாம், நமது செயல்கள் அனைத்தையும் நம்முடை உடலில் உள்ள நமது கையினாலேயே செய்கிறோம். அதுபோலவே சிவபெருமான் தன்னில் பிரிப்பின்றி உள்ள திருவருட் சத்தியைக்கொண்டே, படைத்தல் காத்தல் முதலியனவாகிய அனைத்தையும் செய்து அருள்கிறான்.

இவ்வாறு உலகில் உள்ள உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்யும் திருவருள் ஆகிய நங்கையினால் விரும்பத்தக்க மணவாளன் ஆகி, சிவபெருமான் அவளது நடுவே இருக்கிறான். எனவேதான், சித்தாந்த சைவத்தில், கடவுளை ''அம்மையப்பன்'' என்கிறோம். அம்மையப்பராய் இருப்பதே நமது சிவபெருமானின் இயல்பு ஆகும்.

நமது உடம்பின் வேறுபடாது இருந்து, நமது கை நமது காரியங்கள் அனைத்தையும் செய்வதுபோல், திருவருளும் இறைவனிடமிருந்து என்றும் வேறாயல்லாமல், பிரிவற நின்று, உயிர்களுக்குத் தேவையான அனைத்தையும் செய்கிறது. எனவே, சிவனும் அருளும் ''ஒருமையின் இருமை''யினதாக (Two in one) உள்ளது.

**தெளிவுரை:**

உடம்போடு கூடிவாழும் சீவன் முத்தர்கள், 'தம்மைப் பொருந்தின அனுபவப் பொருள்கள் அனைத்தையும் தமக்கு உரியன எனக் கருதுவதில்லை. பேரின்பப் பொருளாகிய சிவபெருமானிடத்தில் அவர்கள், தம்மை ஒப்படைத்துவிட்டவர்கள். எனவே, விருப்பு வெறுப்புக் காரணமாக வரும் ஆகாமியவினை அவர்களுக்கு இல்லை; அதனால், அவர்களுக்கு மறுபிறப்பு இல்லை. ஆணவமலச் சார்பு அவர்களுக்கு இல்லாமையால், அதனால் ஏற்படும் மறைப்பும் அவர்களுக்கு ஏற்படுவதில்லை. பிறவிச் சூழலில் சிக்கித் தத்துவச் சேட்டைகள் காரணமாக, அவர்கள் தளர்ச்சி அடைவதும் இல்லை.

உலக முகப்பட்டு, மாயா காரியங்களால் ஆகிய உடம்போடு கூடி வாழும் நிலையிலும், சீவன் முத்தர்கள் சிவ உணர்வோடு தன் உணர்வு அற்று இருப்பதால், இவ்வுலக இன்பங்கள் அனைத்தும் அவர்களுக்குப் பேரின்பமாகவே உள்ளன.

இதில் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய செய்தி, நம்முடையது என்று கூறுவதற்கு இவ்வுலகில் எதுவுமே இல்லை என்பது ஆகும். எல்லாம் சிவனது உடைமைகளே ஆகும்.

## பேரின்ப நுகர்வு

**77.** பேரின்ப மான பிரமக் கிழத்தியுடன்
ஓர் இன்பத்து உள்ளானை உள்ளபடி – பேரின்பம்
கண்டவரே கண்டார்; கடல்உயிர்த்த இன்அமுதம்
உண்டவரே உண்டார் சுவை.

**தெளிவுரை:**

அளவிட்டுக் கூறமுடியாத பேரின்பம் உடையவன் சிவபெருமான். அவனுக்கு உரிமை உடையவள், பராசத்தி; அவளோடு என்றும் பிரிவின்றிக் கூடி நிற்கும் சிவபெருமானைப் பிரிவு அறக் கலந்து, அவனது அருளின்பத்தை உள்ளபடியே நுகரப் பெற்றவர் எவரோ, அவரே பேரின்பத்தின் தன்மையை உள்ளவாறு உணரப் பெற்றவர் ஆவர்.

கடலில் தோன்றிய இனிய அமுதத்தை நுகர்ந்து, அதன் சுவையில் அழுந்தினவர்களே, அந்த அமுதத்தை உள்ளவாறு நுகர்ந்தோர் ஆவர்.

பிரம கிழத்தி – பராசத்தி ஆகிய திருவருள்.

ஓர் இன்பம் – ஒப்பற்ற இன்பம்; இறைவனின் பேரின்பத்திற்கு இணையான இன்பம் வேறேதும் இல்லை.

''உள்ளபடி காண்பது'' என்பது, சிவபெருமான் ஒருவனே பேரின்பத்தை உடையவன் என்பதால், அவனை அன்றி வேறு எவரையும் கருதாது, அவனோடு ஒன்றி நிற்றலைக்குறிக்கும்; பாவனையால் அன்றி, உண்மையிலேயே அவனருளில் தன்னை இழந்து நிற்றலும் ஆகும்.

## சிவனும் அருளும் ஒரு பொருளே

**78.** **நம்கையினால் நாம் அனைத்தும் செய்தால்போல் நாடு அனைத்தும்**
**நங்கையினால் செய்து அளிக்கும் நாயகனும் நங்கையினும்**
**நம்பியாய்த் தான்நடுவே நாட்டப் பெறும்இதுகாண்**
**எம்பெருமா னார்தம் இயல்பு.**

**தெளிவுரை;**

உயிர்கள் ஆகிய நாம், நமது செயல்கள் அனைத்தையும் நம்முடை உடலில் உள்ள நமது கையினாலேயே செய்கிறோம். அதுபோலவே சிவபெருமான் தன்னில் பிரிப்பின்றி உள்ள திருவருட் சத்தியைக்கொண்டே, படைத்தல் காத்தல் முதலியனவாகிய அனைத்தையும் செய்து அருள்கிறான்.

இவ்வாறு உலகில் உள்ள உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்யும் திருவருள் ஆகிய நங்கையினால் விரும்பத்தக்க மணவாளன் ஆகி, சிவபெருமான் அவளது நடுவே இருக்கிறான். எனவேதான், சித்தாந்த சைவத்தில், கடவுளை ''அம்மையப்பன்'' என்கிறோம். அம்மையப்பராய் இருப்பதே நமது சிவபெருமானின் இயல்பு ஆகும்.

நமது உடம்பின் வேறுபடாது இருந்து, நமது கை நமது காரியங்கள் அனைத்தையும் செய்வதுபோல், திருவருளும் இறைவனிடமிருந்து என்றும் வேறுயல்லாமல், பிரிவற நின்று, உயிர்களுக்குத் தேவையான அனைத்தையும் செய்கிறது. எனவே, சிவனும் அருளும் ''ஒருமையின் இருமை''யினதாக (Two in one) உள்ளது.

## சிவனும் அருளும் ஒன்றே என்பதற்கு ஓர் உவமை

**79.** பொன்நிறம் கட்டியினும் பூணினும் நின்றால்போல்
அந்நிறம் அண்ணலும் அம்பிகையும் – செந்நிறத்தள்
எந்நிறத்தளாய் இருப்பள், எங்கள் சிவபதியும்
அந்நிறத்த னாய்இருப்பன் ஆங்கு.

**தெளிவுரை:**

தங்கத்தின் நிறம், தங்கம் கட்டியாக இருக்கும்போது எவ்வாறு இருக்கிறதோ, அவ்வாறே அஃது அணிகலன்களாக ஆக்கும்போது உள்ளது. அதுபோலவே, சிவபெருமான் எத்தகைய இயல்பினை உடையவனோ அத்தகைய இயல்பினை உடையவளாகவே அவனது சத்தி ஆகிய திருவருளும் இருக்கிறது.

செம்பொருள் ஆகிய சிவத்தின் ஆற்றல் ஆகிய சிவசத்தி எந்நிறம் உடையவளாக இருக்கிறாளோ, எங்கள் சிவபெருமானும் அந்நிறம் உடையவனாகவே இருக்கிறான். இங்குச் 'செம்பொருள்' என்னும் சொல், உயிர்களுக்குச் செம்மையைச் செய்யும் பொருள் என்பதைக் குறிக்கும்.

கட்டிப்பொன், சிவத்திற்கு உவமை.

பொன் அணிகலன், திருவருளுக்கு உவமை.

இந்த இடத்தில், ''எத்திறம் நின்றான் ஈசன், அத்திறம் அவளும் நிற்பள்'' என்னும் சிவஞானசித்தியார்க் கருத்து நினைவில் கொள்ளத் தக்கது.

## சிவசத்தி இயல்பு, நாயக நாயகி இயல்பே

**80.** தாரத்தோடு ஒன்றுஆவர்; தாரத்துஓர் கூறுஆவர்;
தாரத்தோடு எங்கும் தலைநிற்பர் – தாரத்தின்
நாதஅந்தத் தேஇருப்பர்; நால்தானத்தே இருப்பர்;
வேதஅந்தத் தே இருப்பர்; வேறு.

**தெளிவுரை:**

சிவபெருமான்,தன் உண்மை நிலையில் 'சிவம்' என நிற்கிறான்; உயிர்களின் வழிநிற்கும் தன்மையில், ''சத்தி' என நிற்கிறான். இதுவே சிவசத்தியின் இயல்பு ஆகும்.

'தாரம்' என்பது மனைவி அல்லது நாயகியைக் குறிக்கும். சிவபெருமான் சத்தியுடன் நாயக – நாயகி இயல்பில் நிற்பதை. ''நாயகன் கண்: நயப்பால் நாயகி புதைப்ப'' (72) என்னும் சிவஞானசித்தியார் வாக்கால் அறியலாம். எவ்வாறெல்லாம் இந்த இயல்பு அமைந்துள்ளது என்பதை இந்த வெண்பா தெளிவுபடுத்துகின்றது. அது வருமாறு:

1. அநாதியே ஆணவமலத் தொடக்கினுல், அறிவு இச்சை செயல்கள் தொழிற்படாமல் கிடந்த உயிர்களுக்கு, உதவும் பொருட்டுத் திருவுளம் கொண்ட இறைவன், தன் ஆற்றலைக் கொண்டு, படைப்பாதித் தொழிலைத் தொடங்கியபோது, சிவசத்தியுடன் ஒன்ருகிக் கூடி நின்று செய்தருளினுன்.

2. உயிர்களுக்கு உள்ள பருவுடம்பில், ஆணும் பெண்ணும் ஆகிய பகுப்பு உண்டாக்குதற் பொருட்டு, தன் சத்தியை ஒரு பாகத்துக் கொண்டருளினுன்.

3. உயிர்களுக்குள்ள மலப்பிணிப்பைப் போக்குதற் பொருட்டு, மாயா காரியங்களைத் தோற்றுவித்து, தத்துவங்களுடன் உயிர்களை நடத்தும் பொருட்டுத் தத்துவங்களின் மேற்பட்டு அவன் நிற்க சத்தியைத் தத்துவங்களோடு உடனுய் இருந்து உயிர்களுக்கு உதவும்படி செய்தருள்கின்ருன்.

4. உயிர்கள் வினைகளால் களைப்புற்று இருக்கும்போது, அவற்றிற்கு இளைப்பாறுதலை வழங்கும் பொருட்டு, சுத்தமாயையினைத் தொழிற்படுத்துகின்ற விந்து சத்தியுடன், நாதமுடிவிலே தங்கியிருக்கின்ருன்.

5. உயிர்கள் உய்யும் பொருட்டுச் செய்யும் ஓமம், பூசை, தியானம், மீதானம் ஆகிய நான்கு நிலைகளிலும், சத்தியோடு நின்று உயிர்களுக்கு உதவுகின்ருர். இதுவே 'நற்ருனம்' எனப்படும்.

அகப்பூசையில் உந்திக்கமலம் ஓமத்தானமாகவும், நெஞ்சத் தாமரை பூசைத்தானம் ஆகவும், நெற்றிக் கமலம் தியானத்தானம் ஆகவும் அமையும். அம்மூன்றிற்கும் மேலான தலை உச்சி, மீதானம் எனப்படும், மீதானத்தில் ஆயிரஇதழ்த் தாமரையில், சிவபெருமான் அம்மையப்பராய் வீற்றிருப்பர்.

''நாற்ருனத்து ஒருவனை, நான் ஆய பரனை'' (7–38–4) என்பது சுந்தரர் வாக்கு.

6. ஈறு இலாப் பேரின்பம் ஆகிய வீடுபேற்றினை வேதம் தோன்றும் நாதத் தத்துவத்தின் முடிவில் இருந்து ஆன்மாக்களுக்கு வழங்குவார். அந்நிலையிலும் தன் சத்தியினின்றும் பிரிப்பின்றி சத்தியும் சிவமும் ஆய தன்மையில் வேருகாமல், இருப்பர்.

இதுவே, சிவசத்தியின் இயல்பு ஆகும்.

## சாத்திரங்களால் இறை இயல்பை வரையறுத்துக் கூற முடியாது

**81.** **ஒன்றுஉரைத்தது ஒன்றுஉரையாச் சாத்திரங்கள்; ஒன்ருக**
**நின்றுஉரைத்து நிச்சயிக்க மாட்டாவால் – இன்று உரைக்க**
**என்ஞல் இயன்றிடுமோ? என்போல்வார் ஏதேனும்**
**சொன்ஞல்தான் ஏறுமோ? சொல்.**

**தெளிவுரை:**

உலகில் உள்ள பல்வேறு சமய நூல்களை எல்லாம் ஒருங்கே வைத்து ஆராய்ந்து, இதுதான் இறைவனது உண்மை இயல்பு என்று துணிந்து உரைக்க இயலாதனவாகவே அவை உள்ளன. அவற்றுள் ஒருநூல் கூறியதை மற்ருெரு நூல் உடன்படுவதில்லை.

இந்நிலையில், இறைவனது உண்மை இயல்பு இதுதான் என்று, என்னைப் போன்ற ஒருவஞல் மட்டும் துணிந்து கூறவிட முடியுமா? என்னைப் போன்ற சிலர், கருத்து ஒருமித்து ஏதேனும் கூறிஞலும், அச்சொல் உலக ஆரவாரத்தில் அழுந்தி நிற்கும் மனிதர்களுக்கு, அவர்கள் செவிப் புலன்களில் சென்று, அவர்கள் சிந்தையில் இடம் பெறுமோ?

இறைவனது உண்மை இயல்பினை நூல்களின் வாயிலாகப் படித்து அறிந்து கொள்ள இயலாது, குருமூலமாகக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து உணரும் பக்குவம் உடையவர்கள், தன்முனைப்பு அற்று, திருவருள் நினைவாகவே இருக்கப் பெறின், அத்தகையவர்களின் பக்குவத்திற்கு ஏற்ப, இறைவனே தன் உண்மை இயல்பை அத்தகைய ஆன்மாக்களுக்கு உணர்த்துவான் என்பதே இவ்வெண்பாவின் கருத்துப் பொருளாகும்.

## உலகம் முழுதற்கும் கடவுள் ஒருவரே

**82.** யாதேனும் காரணத்தால் எவ்வுலகில் எத்திறமும்
மர்தேயும் பர்கன் இலச்சினையே – ஆதலினல்
பேதமே செய்வாய் அபேதமே செய்திடுவாய்
பேதா,பேதம் செய்வாய் பின்.

தெளிவுரை:

உலகில் உள்ள பொருள்களில் ஏதேனும் ஒருபொருளை ஆய்வு செய்து, அந்தந்தப் பொருளின் அமைப்பையும், அதன் இயக்கத்தையும் பற்றி ஆய்வு செய்து நோக்கினல் உலகம் முழுவதும் நடக்கின்ற இயக்கங்கள் அனைத்திற்கும் காரணமாக ஒருபொருள் இருப்பது புலப்படும். அவை அனைத்தும் சிவசத்தியின் அடையாளமாகவே இருப்பதைக் காணலாம்.

எனவே, இறை, உயிர்,தளை என்னும் முப்பொருள்களின் உண்மையையும் இயல்பினையும் தெளிவாக அறிந்த நீ, பேதவாதிகளைக் குறித்தோ, அபேத வாதிகளைப் பற்றியோ, பேதாபேத வாதிகளை எண்ணியோ கவலைப்படாமல், உன் கடமையைச் செய்வாயாக. பின்பு உனக்கு எல்லாம் விளங்கும்.

'பேதவாதி' என்பவர், கடவுளும் உலகத் தொகுதியும் இருவேறு தனிப்பொருள்கள் என்பர்.

'அபேதவாதி' என்பவர், கடவுள் ஒன்றே உள்பொருள், பிற எல்லாம் தோற்றம், உண்மையல்ல என்பர்.

'பேதாபேதவாதி' என்பவர், கடவுளும் உலகத் தொகுதியும் ஒன்ருயும் வேருயும் நிற்கும் என்பவர்.

சைவசித்தாந்தம், கடவுள் உலகத் தொகுதியோடு ஒன்ருயும் வேருயும் உடனுயும் நிற்கிருர் என்கிறது.

## இறை இயல்பை அறியும் வழி

**83.** நின்றபடி நின்றவர்கட்கு அன்றி, நிறம்தெரியான்;
மன்றினுள்நின்று ஆடல் மகிழ்ந்தானும் – சென்றுஉடனே
எண்உறும்ஐம் பூதம்முதல் எட்டுஉருவாய் நின்ருனும்
பெண்உறநின்று ஆடும் பிரான்

**தெளிவுரை:**

தில்லை அம்பலத்திலே நின்று நடம்புரியும் நம்முடைய சிவபெருமான் உலகம் எல்லாம் ஒடுங்கும் ஊழிக் காலத்திலே, தனது ஆற்றல் ஆகிய பராசத்தியைத் தன்னுள் அடக்கி, ஒருவனாய் நிற்கின்றான்; அவனே, படைத்தல், காத்தல் முதலிய ஐந்தொழில்களைச் செய்யும்போது, அட்ட மூர்த்தமாகி நிற்கிறான். 'அட்டமூர்த்தம்' என்பது, மண், நீர், நெருப்பு, வளி, வெளி, ஞாயிறு, திங்கள், ஆன்மா ஆகியனவாகி எட்டுருவாய் நிற்பது ஆகும்.

அந்நிலையில், உயிர்களோடு ஒன்றாய், வேறாய், உடனாய் நிற்கிறான், அப்போது அவனது தன்மை இன்னது என்று உயிர்களுக்குப் புலனாவதில்லை.

அத்தகு இறைவனது இயல்பு எத்தகையது என்பதை உயிர்களின் பெத்த நிலையில் அவன் உயிர்களே ஆய் நின்றது போன்று, உயிர்களும் முத்தி நிலையில், அவனே ஆய் நின்றால் அன்றி, அறியமுடியாது. இதனையே,

**"இன்ன தன்மையன் என்று அறிவொண்ணா எம்மான்"**

என்று அருளிச் செய்தார் சுந்தரர் பெருமான்.

## திருவருளின் பேருதவி

**84.** **சிவமே சிவமாக யான்நினைந்தாற் போலச்**
**சிவம்ஆகியே, இருப்பது அன்றிச் – சிவம்என்று**
**உணர்வாரும் அங்கே உணர்வு அழியச் சென்று**
**புணர்வாரும் உண்டோ புவி.**

**தெளிவுரை:**

சிவபெருமானே பக்குவம் உள்ள ஆன்மாவைத் தன் அருளால் ஆட்கொண்டு, சிவசொரூபமாக விளங்கித் தோன்றச் செய்கிறான். அந்நிலையில் திருவருளின் துணைக்கொண்டு, சிவபெருமானையே நினைந்து போற்றும் வாய்ப்பினை நான் பெற்றேன்.

மாணவனே, நீயும் அதுபோல புறப்பொருள்களில் பற்றுக்கொள்ளாமல், சிவபெருமானையே சார்ந்து, சிவத்தன்மை பெற்று இருக்க வேண்டும். அஃது அன்றித் தன் அறிவினால் சிவ

பெருமானை உள்ளவாறு உணர்பவர்களும் அவ்வாறு உணர்ந்த உணர்வினைத் துணைக்கொண்டு தானே, சிவபரம்பொருளைக் கூட வல்லவர்களும் இவ்வுலகில் யாரேனும் உள்ளனரோ? ஒருவரும் இல்லை என்றவாறு.

'சிவமே சிவமாக நினைத்தல்' என்பது, சிவபெருமானை அன்றி வேறு எவரையும் நினையாமல், சிவபெருமான் ஒருவனையே, பேரின்பத்தை ஆன்மாக்களுக்கு வழங்கவல்லவன் இவன் ஒருவனே என அவனையே சார்ந்து நிற்றலைக் குறிக்கும்.

## சுத்தாத்துவிதக் கொள்கை விளக்கம்

**85.** **அதுஇது என்றும் அவன்நானே என்றும்**
**அதுநீயே ஆகின்றாய் என்றும் – அதுஆனேன்**
**என்றும் தமைஉணர்ந்தோர் எல்லாம் இரண்டாக**
***ஒன்றாகச் சொல்லுவரோ உற்று?***

**தெளிவுரை:**

பிரமப் பொருள் ஆகிய 'அது' என்றும் ஆன்மா ஆகிய, 'இது' என்றும், பிரமம் ஆகிய 'அவன்' ஆன்மா ஆகிய 'நானே' என்றும், பிரமப்பொருள் ஆகிய 'அது' ஆன்மா ஆகிய 'நீயே' ஆகின்றாய் என்றும், பிரமம் ஆகிய 'அது' ஆன்மா ஆகிய 'நான்' ஆனேன் என்றும். இவ்வாறு ஆன்மா ஆகிய தன்மையும் பரம்பொருள் ஆகிய இறைவனையும், உள்ளவாறு உணரப்பெற்ற அருளாளர்கள் அனைவரும், ''இறைவனும் ஆன்மாவும் பொருள் தன்மையால் வேறு ஆகிய இரு பொருள்கள்'' என்று கூறியிருக்கிறதால், மேற்கூறியவாறு ''ஆன்மாவும் சிவமும் ஒருபொருளே'' என்று உளமாரச் சொல்வார்களா? சொல்லமாட்டார்கள்.

சிவமும் ஆன்மாவும் இருவேறு பொருள்கள் என்று கொள்வது இருபொருட் கொள்கை ஆகும். இதுவே சைவசித்தாந்தக் கொள்கை.

'பிரமமே ஆன்மா' என்பது, ஒருபொருட் கொள்கை. இது சைவ சித்தாந்தத்திற்கு நேர் எதிரான கொள்கை.

பிறப்பு நிலையிலும் முத்தி நிலையிலும், ஆன்மா சிவத்திற்கு என்றும் அடிமையே.

## சைவசித்தாந்த அத்துவிதக் கொள்கை

**86.** ஈருகி அங்கே முதல்ஒன்ருய் ஈங்குஇரண்டாய்
மாருத எண்வகையாய் மற்றுஇவற்றின் –வேருய்
உடனுய் இருக்கும் உருஉடைமை என்று
கடனுய் இருக்கின்ருன் காண்.

**தெளிவுரை:**

சங்கார காலத்தில் எல்லாவற்றையும் தன்னுள் ஒடுக்கி அந்நிலையில் சிவபெருமான், தனியொரு பொருளாய் மட்டுமே நிற்கிருன். படைப்புக் காலத்தில், சத்தி சிவம் என இரண்டாகி நிற்கிருன். அப்போது, எல்லாவற்றையும் சத்தியின் இடமாய் நின்று பஞ்சபூதங்கள், ஞாயிறு, திங்கள், ஆன்மா என்னும் எண்பேர் உருவினன் ஆகி, அந்தந்தப் பொருளுக்கு அந்தந்தப் பொருளாய் நிற்பதால் அவையேயாய் 'ஒன்ருகி' நிற்கிருன்.

அந்நிலையிலும், அப்பொருள்களின் தன்மை தனக்கு எய்தல் இன்றி, அவற்றின் 'வேறு ஆகியும்' நிற்கிருன். உயிர்க்கு உயிராய் உள் நின்று, அறிவித்தும் அறிந்தும் உதவுவதால், உயிர்களோடு 'உடனுயும்' நிற்கிருன்.

இவ்வாறு நிற்பது, இறைவனுக்குள்ள உரிமை முறைமையாலேயே ஆகும். இவ்வுண்மையைத் தெளிவாக அறிவாயாக.

உலகமும் உயிர்களும், தன் வியாபகத்தில் நிலைத்திருக்கும் பொருட்டு இறைவன் அவற்ருேடு ஒன்ருய் நிற்கிருன்.

உலகத்தை இயக்கும்பொருட்டும், உயிர்க்கு அறிவித்தல் பொருட்டும், அவற்றின் வேருய் நிற்கிருன்.

உலகம் இயங்கும் பொருட்டும், உயிர் நுகரும் பொருட்டும் அவற்ருேடு உடனுய் நிற்கிருன்.

## இறைவனின் பற்றற்ற தன்மை

**87.** உன்உதரத் தேகிடந்த கீடம் உறுவது எல்லாம்
உன்னுடையது என்னுய்; நீ உற்றனேயோ? – மன்னுயிர்கள்
அவ்வகையே காண்; இங்கு அழிவதுவும் ஆவதுவும்
செவ்வகையே நின்றசிவன் பால்.

தெளிவுரை:

மாணவனே, உன் வயிற்றில் கிடந்து உழலுகின்ற புழு முதலிய சிற்றுயிர்கள் அடைகின்ற இன்பதுன்பங்களை உனக்குள்ள வினைப்பயன் என்று நீ கருதுவதில்லை; அந்தச் சிற்றுயிர்கள் படும் இன்ப துன்பங்களை நீ அனுபவிப்பதும் இல்லை.

அதுபோலவே, சிவ வியாபகத்தின் கீழ் உள்ள உயிர்கள் நுகர்கின்ற இன்ப துன்பங்களைச் சிவபெருமானும் அனுபவிப்பதில்லை.

சிவபெருமான் உயிர்களோடு, ஒன்றாயும், வேறாயும், உடனாயும் இருந்து, உயிர்க்குயிராய் இருந்து, உயிர்களைப் பிரிப்பின்றி கூடி நிற்கின்றான் ஆயினும், அவற்றின் தன்மை தன்னைப் பற்றாதவாறு அவன் நிற்பதால், உயிர்களின் இன்ப துன்ப பாதனைகள் எவையும் சிவபெருமானைப் பற்றுதல் இல்லை என்பதைத் தெளிவாக உணர்வாயாக.

உதரம் – வயிறு;

கீடம் – புழு

'செவ்வகையே நிற்றல்' என்பது, நிலைவேறுபாடு அடையாமல் செம்பொருள் ஆக நிற்பதைக் குறிக்கும்.

## சிவபெருமானின் பொது இயல்பு

88. அவனே அவனிமுதல், ஆயி னானும்
அவனே அறிவாய்நின் றானும் – அவனேகாண்
ஆணாகிப் பெண்ணாய் அலியாகி நின்றானும்
காணாமை நின்றானும் கண்டு.

தெளிவுரை:

மண் முதல் நாதம் ஈறாகிய முப்பத்தாறு தத்துவங்களும் தொழிற்படும்படி, உலகின் நிமித்த காரணன் ஆக உள்ளவன் ஆகிய அவனே,

அறியாமை வயப்பட்டு இருக்கும் உயிர்களின் அறிவினை விளக்கி உயிர்க்கு உயிராய் நின்று திகழ்பவனும் ஆகிய அவனே,

உயிர்களின் வினைக்கு ஈடாக, அவன் அவள் அது என்று பகுக்கப்பட்ட அவ்வுயிர்களேயாய் நின்று உயிர்கட்குப் பேருதவி செய்பவனும் ஆகிய அவனே,

இவ்வளவு அறிய பெரிய செயல்கள் எல்லாவற்றையும், உயிர்கள் கண்டு அறியாதபடி, எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் கண்டு நிற்பவனும் ஆகிய அவனே, நமக்கெல்லாம் தலைவன் ஆகிய அவனே சிவபெருமானே ஆவன். இறைவனது பொது இயல்பு இத்தகையது என்பதை அறிவாயாக.

அவனி – உலகம் – நிலம் – மண்

முதல் – முதல்வன் – நிமித்தகாரணன்.

## இறைவன் உயிரறிவால் காணமுடியாது

**89. இன்றுதான், நீஎன்னைக் கண்டுஇருந்தும் கண்டாயோ?**
**அன்றுதான், நான்உன்னைக் கண்டேனே? – என்றால்**
**அருமாயை ஈன்றவள்தன் பங்கனை, யார் காண்பார்,**
**பெருமாயை சூழல் பிழைத்து?**

தெளிவுரை:

இவற்றையெல்லாம் அறிந்துகொள்ளும் இந்நிலையில் என்னைக் கண்டு கொண்டு இருந்தாலும், என்னுடைய சொரூபத்தை உன் ஊனக்கண்களால் நீ கண்டாயா?

அல்லாமலும், இவற்றையெல்லாம் உனக்கு அறிவிக்கின்ற நான், உனது ஆன்ம சொரூபத்தைக் கண்டேனா? இத்துணை நெருக்கத்தில் இருக்கின்ற நாம் இருவரும், ஒருவர் ஒருவரது ஆன்ம சொரூபத்தைக் கண்டோமில்லை.

அவ்வாறயின், எவராலும் காண முடியாத மாயையிலிருந்து, இவ்வுலகங்களையெல்லாம் தோற்றுவித்து நமக்கு வழங்கியருளிய அம்மையை ஒரு பாகத்தில் கொண்டருளும், சிவபெருமானை யாரே காண முடியும்? அதுவும், மாயையின் சுழற்சியால் பல்வேறு பிறப்புகளுக்கு உட்படும் நாம், அந்த மாயையினின்றும் விடுபட முடியாத நம்மைப் போன்றவர்கள், மாயையால் விளங்கும் நமது அறிவைக் கொண்டு சிவபெருமானை எப்படிக் காணமுடியும்? ஒருக்காலும் காண இயலாது.

## இறைவன் உயிர்களை ஆட்கொள்ளும் முறைமை

**90.** கடல்அலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றும்,
கடல்,அளக்க வாராதாற் போலப் – படியில்
அருத்திசெய்த அன்பரைவந்து ஆண்டதுவும் எல்லாம்
கருத்துக்குச் சேயனாய்க் காண்.

தெளிவுரை:

கடலில் நாம் நீராடும்போது, அதன் அலைகள் நாம் நீராடும் பொருட்டு ஓர் எல்லைக்கு உட்பட்டு அணுகி வருகின்றன. ஆயினும், அந்தக் கடலின் அகலத்தையோ நீளத்தையோ ஆழத்தையோ நாம் ஆராயத் தலைப்பட்டால் அஃது அளவுட்பட்டு வாராமல், அப்பாற்பட்டு நிற்பதைக் காண்கிறோம்.

அதுபோல, இறைவன் இந்நிலவுலகிலேயே, பேரன்புடைய அடியார்களை, மானுடத் திருமேனி கொண்டு எழுந்தருளச் செய்து, நமக்கு அருளும் பொருட்டு அனுப்பியருளியுள்ளான். அந்த அருளாளர்களை அதிட்டித்து நின்று அருளுகின்ற சிவபெருமானின் திறம் எத்தகையது, என்பதை நம்மால் அளவிட்டு அறியமுடியாது. அஃது அத்துணைத் தொலைவில் உள்ளது என்பதை நீ தெளிவாயாக.

இந்த இடத்தில்

''ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமும ஆதிமாண்பும்
கேட்பான் புகில் அளவில்லை; கிளக்க வேண்டா'' (3–54–4)

என்னும் சம்பந்தப் பெருமான் திருவாக்கு சிந்திப்பதற்குரியது.

## ஞானாசிரியன் சிவபெருமானே ஆவான்

**91.** 'சிவன்எனவே தேறினன்,யான்' என்றமையால் இன்றும்
சிவன்,அவனிவந்தபடி செப்பின் – அவனிதனில்
'உப்பு' எனவே கூர்மை உருச்செய்யக் கண்டமையால்
அப்படியே கண்டாய் அவன்.

தெளிவுரை:

மாணிக்கவாசகப் பெருந்தகை, தமக்கு மெய்யுணர்வு அளித்த ஞானாசிரியனைச், ''சிவன் என யானும் தேறினன்; காண்க'' என்று திருவண்டப்பகுதியில் கூறியருளி உள்ளமையால்,நம்மை உய்வித்து அருள்புரிதல் வேண்டி, சிவபெருமானே மானுடத்

திருமேனி தாங்கி, இந்தப் பூவுலகில் எழுந்தருளியுள்ளான். இவ்வாறு கூறுதற்கு உவமையாக உப்பினை வைத்து விளக்குகிறார். அது வருமாறு:–

''உப்பு'' க்கு உண்மையிலேயே உருவம் இல்லை. உவர் நீரில் உள்ள நுண்ணிய உவர்த் தன்மையே, 'உப்பு' எனப்பட்டு, உருவம் கொண்டு உள்ளது. அந்த அருவ நிலையில் இருக்கும் உவர்த் தன்மை, உப்பாக உருவம் கொள்ளாவிடில், அதனால் எந்தப் பயனையும் நாம் பெற முடியாது. அதுபோலவே, அருவத்திற்கும் அப்பாற்பட்ட நிலையில் உள்ள சிவபெருமான், மானுடத் திருமேனி தாங்கி, ஞானாசிரியனாகத் திருவுருக்கொண்டு வராமலிருந்தால், நம்மால் பிறவிப் பயனைப் பெற முடியாது. இவ்வுண்மையை இந்தவிதமாகத் தெளிந்து கொள்வாயாக.

## முத்தி பெற்ற ஆன்மா உயிர்க்கு அருள் வழங்காது

**92.** *அவன்இவனாய் நின்றது, அவன் அருளால் அல்லது*
*எவன் அவனாய் நிற்கின்றது, ஏழாய்? – அவனிதனில்*
*தோன்றுமரப் புல்லூரி தொல்உலகில் அம்மரமாய்*
*ஈன்றிடுமோ சொல்லாய் இது.*

**தெளிவுரை:**

அவன்–சிவன்; இவன்–ஆன்மா, உயிர்கள் ஆகிய நமக்கு நமது பக்குவம் அறிந்து, பேரின்பம் வழங்குதல் பொருட்டுச் சிவபெருமான், சீவன் முத்தர்களை அதிட்டித்து நின்று, திருமேனி கொண்டு எழுந்தருளி வருகிறான். அஃதன்றி, சீவன் முத்தர்கள் தாமாக விரும்பி, நமக்கு அருள் செய்தற்கு வரமுடியாது. அஃதாவது முத்தி பெற்ற ஆன்மாக்கள் ஆக இருந்தாலும், நமக்கு அருளை வழங்கும் தகுதி அவர்களுக்கு இல்லை என்பதாம்.

இஃது எதுபோல எனின்,

இப்பூவுலகிலுள்ள தோன்றி வளர்ந்த மரத்திலே ஒட்டி முளைத்த புல்லூரி, அம்மரத்தோடு நீண்ட காலமாக நிலைபெற்று இருந்தாலும், அந்த மரம் தரும் கனிகளை அளிக்க முடியாதது போல் ஆகும்.

புல்லூரி மரத்தில் ஒன்றி, அம்மரத்தின் ஒருபகுதியாக வளர்ந்தாலும், மரம் தரும் பயனைத் தருகின்ற தன்மை அற்றது. அது

போல, சிவனோடு ஒன்றிச் சிவமாம் தன்மை பெற்ற சீவன் முத்தர்கள், சிவபெருமான் ஒருவனாலேயே தரவல்ல, அருளைப் பிற ஆன்மாக்களுக்கு வழங்க வல்லாரல்லர். ஏழை மாணவனே, இதைப் புரிந்து கொள்.

புல்லூரி என்பது, தானே நிலத்தில் விதையாய் ஊன்றி நின்று நீருண்டு வளரும் ஆற்றல் அற்ற ஒருவகைத் தாவரம்.

## அருளின் உதவியாலேயே மலம் அறும்

93. முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்து
அத்திபழுத்தது அருள்என்னும் – கத்தியினால்
மோகக் கொடிஅறுக்க முத்திப் பழம்பழுக்கும்
ஏகக் கொடிஎழும்காண் இன்று.

தெளிவுரை:

முத்தி என்பது ஒரு கனி. அக்கனி விளையும் இடம் ஆன்மா. முத்திக்கனி விளைவதற்கு முதல் ஆக இருப்பது, ஆன்மா என்னும் கொடி. (முதற்கொடி).

ஆன்மா ஆகிய இந்தக் கொடியை வளரவிடாமல் தடுப்பது மற்றொரு கொடி. அஃது அஞ்ஞானத்தை ஏற்படுத்தும் ஆணவமலம். அது மோகக் கொடி எனப்படுகிறது.

ஆன்மக் கொடியோடு, ஆணவமலக் கொடிபடர்ந்து, அத்திப் பழம் போன்று மிகுந்த ஆசையை விளைவித்தது. அதனால், ஆன்மக் கொடியின் வளர்ச்சி தடைப்பட்டது.

எனவே, திருவருள் என்னும் கத்தியைக் கொண்டு, அந்த ஆணவமலக் கொடியின் வேரை, இறைவன் அறுத்து எறிந்தான். அதன்பிறகு, ஆன்மக் கொடியில் 'முத்தி' ஆகிய பழம் பழுத்தது. பழுக்கவே, ஆன்மாவும் சிவமும் ஒரு தன்மையனவாய், பிரிவு அறக்கூடி, இன்புறுதல் ஆகிய சிவமாம் தன்மை ஆன்மாவுக்கு வந்து சேரும்.

ஆன்மாவையும் ஆணவமலத்தையும் "கொடி" என்னும் சொல்லால் (முதற்கொடி – ஆன்மா; மோகக்கொடி–மலம்). குறிப்பிட்டதற்குக் காரணம், ஆணவமலத்தைப் பற்றி நிற்கும் நிலையில் ஆன்மா தன் உண்மைநிலையை உணராமல் ஆணவமலமாகவே நின்றமையாலேயே ஆகும்.

## இறைவன் குருவடிவம் கொண்டது

**94.** அகளத்தில் ஆனந்தத்து ஆனந்தி யாயே
சகளத்தில் தையலுடன் தோன்றி – நிகளத்தைப்
போக்குவதும் செய்தான், தன் பொன்அடிஎன் புன்தலைமேல்
ஆக்குவதும் செய்தான் அவன்.

**தெளிவுரை:**

சிவபெருமான், குற்றமற்ற அருவநிலையிலிருந்து, உயிர்களுக்குப் பேரின்பத்தை வழங்கும் பொருட்டு, தன் அருளையே திருமேனியாகக் கொண்டு, சத்தியுடன் தோன்றுகிறான். அவ்வாறு தோன்றி, அனாதியே ஆன்மாக்களைப் பிணித்துள்ள ஆணவமலத்தைப் போக்கி, ஆன்மாவைச் சிவமாக்குவதற்கான தீக்கை முதலானவற்றைச் செய்து, தன்னுடைய பொன்னார் திருவடிகளை என்னுடைய இழிவான தலைமேல், நிலைபெறுமாறு ஆக்குவதையும் செய்தருளினான். அவ்வாறு அருளிச் செய்தவன், குரு வடிவாய் எழுந்தருளியவனே ஆவன்.

***ஆனந்தத்து ஆனந்தம்*** – பேரின்பம்.
***அகளம்*** – அருவம்; சகளம் – உருவம்.
***நிகளம்*** – விலங்கு ஆகிய ஆணவமலம். இந்த இடத்தில்,

***"நானும் என்தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்,***
***நானும் என்சிந்தையும் நாயகனுக்கு எவ்விடத்தோம்"***

***என்னும் மணிவாசகம்*** நினைந்து போற்றுதற்குரியது.

***"தையலுடன் சகளத்தில்*** தோன்றுவது" என்பது, சிவ ***பெருமான் அருளையே*** திருமேனியாகக் கொள்வதைக் குறிக்கும்.

## பிராரத்தம் தாக்காமல் காத்தருள்வது

***95. குற்றம்அறுத்துஎன்னை*** ஆட்கொண்டு அருளித் தொண்டனேன்
***உற்ற நியமத்து*** உடன்உறைவர் – முற்றவரின்
***மாட்சியுமாய் நிற்பரியான்***, மற்றொன்றைக் கண்டிடின், அக்
***காட்சியுமாய் நிற்பார் கலந்து.***

தெளிவுரை:

குருவடிவாய் எழுந்தருளியுள்ள இறைவன், ஆணவமலப் பற்று ஆகிய என் குற்றத்தை வேர்அறக் களைந்து என்னை அடிமையாகக் கொண்டு, திருவடி ஞானத்தை வழங்கியருளி, 'யான்' என்றும் 'அது' என்றும் சொல்கின்ற வேறுபாட்டினை நீக்கி, அடியேன் திருவருளோடு பொருந்தி தியான நிலையில் நிற்கும்போது, தியானப் பொருள் ஆகிய சிவமும், தியானிப்பவன் ஆகிய (யான்) ஆன்மாவும், தியானித்தல் ஆகிய அறிவும் வேற்றுமை அற்று இருக்கும்படி, என்னோடு உடனாய் இருப்பான்.

இத்தகு தியானநிலை முற்றி வருகின்ற நிலையில், சிவபரம்பொருளில் அழுந்தி, கலந்த அன்பாகிக் கசிந்து உள்உருகும் பேரின்ப விளைவுமாய் நிற்பன்.

எனது தியான ஒருமை, சிறிது குலைந்து, என் பிராரத்துவம் காரணமாக உலகப் பொருளில் ஒருவேளை நான் ஈடுபட நேரிட்டால், அதனால் உலகவாதனை என்னைத் தாக்காதவாறு என்னைக் காத்து, காண்பது எல்லாம் சிவமே ஆமாறு எனக்குக் காட்டி, என்னுடன் கலந்து நிற்பன்.

## அருட்குருவின் பெருமை உணர்த்துவது

**96. ஆளுடையான் என்தரமும் ஆளுடையானே அறியும்**
**தாளுடையான் தொண்டர் தலைக்காவல் – நாளும்**
**திருவியலூர் ஆளும் சிவயோகி இன்று என்**
**வருவிசையை மாற்றினான் வந்து.**

**தெளிவுரை:**

**பக்குவம் வாய்ந்த ஆன்மாக்களை ஆட்கொள்ளும் இயல்பினன் ஆகிய சிவபெருமான், எந்தத் தகுதியும் இல்லாத என்னையும் ஆட்கொள்ளும் பொருட்டு, ஆளுடை தேவனாகவே எழுந்தருளி வந்தான்.**

**தன்பால் அன்புமீதூர்ந்துள்ள, அடியார்களை இருவினைகளின் வாதனை வந்து தாக்காதவாறு, காத்து அருளும் முதன்மைக் காவலனாக இருக்கிறான்.**

திருவியலூரினைத் திருப்படை வீடாகக் கொண்டு அருளிய சிவஞானி ஆகிய சிவபெருமான், இப்போது என் அறியாமையைப் போக்கும் பொருட்டு, பிறப்பு – இறப்புக்களிலே பட்டுச் சுழன்று வருகின்ற வேகத்தை ஒழித்து அசைவற்ற தன் திருவடிகளிலே என்னை வைத்தருளினுன்.

இந்த வெண்பாவில், நூலாசிரியர் ஆகிய திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனுர், தம்முடைய குரு ஆகிய ஆளுடைய தேவநாயனுர் தமக்கு அருளிச் செய்த உதவியைக் கூறுகிருர்.

''வருவிசை'' என்பது, கடல் அலைகள் போன்று, தொடர்ந்து வருகின்ற பிறப்பிறப்புக்கள் ஆகிய சுழலில் அகப்பட்டு உழலும் ஆன்ம போதத்தைக் குறிக்கும்.

## அருட்குருவின் கருணைத் திறம்

**97.** தூலத்து அடுத்த பளிங்கின் துளக்கம் எனத்
தூலத்தே நின்று துளங்காமல் – காலத்தால்
தாளைத்தந்து என்பிறவித் தாளை அறவிழித்தார்க்கு
ஆள்அன்று என்மாறு அதற்கு.

தெளிவுரை:

கண்ணுடிக்கு என்று ஒரு நிறம் கிடையாது. அஃது எந்த நிறம் உள்ள பொருளைச் சார்ந்து நிற்கிறதோ, அந்தப் பொருளின் நிறத்தையே காட்டும். அதுபோலவே, உயிர்க்கும் தனியாக ஓர் இயல்பு இல்லை. எந்தப் பொருளைச் சார்ந்து நிற்கிறதோ, அந்தப் பொருளின் இயல்பையே தன் இயல்பாகக் கொண்டு இருக்கும்.

கண்ணுடி, பல நிறங்காட்டும் பொருள்களை அடுத்து, அவற்ருல் மறைக்கப்பட்டு கலக்கம் உற்று இருப்பதைப் போன்று, உயிர்களும் உலகப் பொருள்களைச் சார்ந்து, கலக்கம் உற்று நிற்கின்றன.

நான் அவ்வாறு கலக்கம் உருதபடி, திருவருளால் இருவினை ஒப்பு ஏற்பட்டு, ஆணவமல நீக்கம் ஏற்படும்படி செய்து, பக்குவம் வந்த காலத்திலே, எழுந்தருளிவந்து, தன் திருவடியைத் தந்தருளி, என் பிறவி வேர் அறும்படி, எளியேனை அருட்கண்ணினுல் நோக்கித் தன் ஆளாகக் கொண்டு அருளிய, அருட்குருவுக்கு, என்றும் மீளா

அடிமையாகித் தொண்டு புரிவது அன்றி, யான் செய்தற்கு உரிய கைமாறு யாது உள்ளது, ஒன்றும் இல்லை.

''மீளா ஆள் அலால் கைமாறு இல்லை'' (4–40–7)

என்னும் அப்பர் வாக்கு இங்கு நினைவு கூர்தற்குரியது.

## ஆன்மா என்றும் இறைவனுக்கு அடிமையே

98. இக்கணமே முத்தியினை எய்திடினும் யான் நினைந்த
அக்கணமே ஆனந்தம் தந்திடினும் – தற்கணத்தார்
நாயகர்க்கும் நாயகிக்கும் நான்அடிமை எப்போதும்
ஆயிருத்தல் அன்றி, இலேன் யான்.

தெளிவுரை:

சைவசித்தாந்தம் கூறும் வீடுபேற்றினை, யான் இப்பொழுதே எய்தப் பெற்றாலும், நான் நினைப்பற நினைத்த அப்பொழுதே, இறைவன் விரைந்து எனக்குப் பேரின்பத்தைத் தந்தருளினாலும், நன்மை பெருகு அடியார் கூட்டத்தார்க்குத் தலைவன் ஆகிய சிவபெருமானுக்கும், அவனோடு பிரிவு அற விளங்கும் அம்மைக்கும் நான் எப்பொழுதும் அடிமையாய், இருத்தல் அன்றி, செய்யத்தகும், பணி வேறு ஏதுமில்லை.

''நினைந்து அக்கணமே'' என்பது துரியாதீத நிலையில் நினைப்பு அற நினைந்த அடியேன், இந்தத் துரிய நிலையில் நினைந்த உடனே என்பதைக் குறிக்கும்.

''நாயகிக்கும் நான் அடிமை'' என்றது, முத்தி நிலையினை ஆன்மாவுக்குச் சிவபெருமான் வழங்கும்போது, திருவருள் அத்தகு ஆன்மாவுக்கு எண்குண சரீரமாக நின்று உதவுகின்றதால், நாயகிக்கும் அடிமை என்றார்.

(திருவருட்பயன் – 88)

சில பதிப்புக்களில் ''நானடிமை எப்பொழுதும்'' என்னும் தொடருக்குப் பதில் ''நந்திக்கும் நானடிமை'' என்ற பாடம் உள்ளது. 'நந்திக்கு' என்பது குருநாதரைக் குறிக்கும்.



15

## அடியார்க்கு அடியேன் ஆதல்

99. என்னை உடையவன் வந்து என்உடனாய் என் அளவில்
என்னையும்தன் ஆளாகக் கொள்ளுதலால் – என்னை
அறியப் பெற்றேன்; அறிந்த அன்பருக்கே ஆளாய்ச்
செறியப் பெற்றேன் குழுவில் சென்று.

**தெளிவுரை:**

தொடக்கமில் காலந்தொட்டு, என்றும் என்னை அடிமையாக உடைய சிவபெருமான், ஞானசிரியனாகத் திருமேனி தாங்கி எழுந்தருளி வந்து என்னோடு உடனாய் நின்று ஒன்றுக்கும் பற்றாத என்னையும் தன் அடியவனாகக் கொண்டு அருளியமையால், எனது தன்மை எத்தகையது என்பதை உள்ளவாறு எனக்கு அவன் அறிவிக்க நான் அறியப்பெற்றேன்.

ஏற்கனவே இறைவன் அருளால் மெய்யுணர்வு கைவரப் பெற்ற சிவனடியார்கள், சிவமே திரு எய்தப் பெற்றவர்கள் ஆதலின், அவர்களுக்கே அடிமையாய் இருந்து, அவர்களை அணுகி இருக்கும் பெரும் பேற்றினைப் பெற்றுள்ளேன். இவ்வாறு சிவனடியார் கூட்டத்தில் இருக்கப் பெறுவதைவிட பெரும்பேறு வேறு என்ன இருக்கிறது? எதுவும் இல்லை.

''ஈசன் நேசரோடும் செறித்திட்டு..........
இறுமாப்பு எய்தி........ திரிந்திடுவர் சிவஞானச்
செய்தி உடையோரே''

என்னும் சிவஞானசித்தியார்க் கருத்து, இங்கு நினைவு கூர்தற்குரியது.

## சிவபெருமானை வாழ்த்தும் முறைமை

100. சிந்தையிலும் எந்தன் சிரத்தினிலும் சேரும் வகை
வந்தவனை, மண்ணிடைநாம் வாராமல் – தந்தவனை
மாதினுடன் எத்திறமும் வாழ்ந்து இருக்க என்பது அலால்
ஏதுசொலி வாழ்த்துவேன் இன்று.

தெளிவுரை:

செந்தாமரை மலர்போலும் திருவடிகள், என்னுடைய நெஞ்சத் தாமரையிலும், தலையின்மேலும் சேரப் பொருந்தும் வண்ணம் ஆசிரியத் திருமேனி கொண்டு எழுந்தருளி வந்து, அடியேனை ஆட்கொண்ட சிவபெருமானே,

மீண்டும் இந்த நிலவுலகிலே வந்து பிறந்து உழலாதவாறு, பேரின்பத்தைத் தந்து அருளிய என் வாழ்முதலே,

என் அன்னையாகிய திருவருளுடன் என்றும் பிரிவு அற நின்று, எம்மனோர் ஆகிய அனைத்து உயிர்களையும் உய்வித்து அருளல் வேண்டும் என்று வணங்கி வாழ்த்துவதைவிட வேறு எதனைக் கூறி வாழ்த்துவேன்? ஏதும் கூறும் திறம் அற்றவன் என்றவாறு.

இவ்வெண்பாவில் முக்கியமாகக் கொள்ளவேண்டிய செய்தி வருமாறு:

சிவபெருமான், மாதொரு பாகனாக, அம்மையப்பனாக. இருப்பதனால்தான், நாம் எல்லோரும் வாழ்கிறோம். எனவே தொடக்க வெண்பாவில்,

**''அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் என்று அறிக''**

என்றபடி இந்த இறுதி வெண்பாவில்

**''மாதினுடன் எத்திறமும் வாழ்ந்து இருக்க வாழ்த்துவேன்''**

என்று கூறி நிறைவு செய்கிறார்.

திருக்களிற்றுப்படியார் தெளிவுரை நிறைவுற்றது





உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உண்மை விளக்கம்

## காப்பு

வன்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா
உண்மைவிளக்கம் உரைசெய்யத் - திண்மதம்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற்று ஐங்கரனைப்
பந்தம் அறப் புந்தியுள்வைப் பாம்.

**தெளிவுரை:**

சிவாகமங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களின் வகைத்தைக் கூறுகின்றன. அவற்றுள் ஞான பாதத்தில் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் உண்மை இயல்புகள் அருளப்பட்டுள்ளன. அவற்றின் இயல்புகளை ஐயம் திரிபு அற்ற முறையில் உரைக்கும் நூல்களுள் "உண்மை விளக்கம்" ஒன்றாகும். இந்நூலின் வாயிலாக அவற்றைத் தெளிவாகக் கூறும் பொருட்டு, விநாயகப் பெருமானை வழிபடுவோம்.

விநாயகப் பெருமான், சிவந்த நிறத்தினையும், ஆனை முகத்தையும் பருத்த வயிற்றினையும் ஐந்து திருக்கைகளையும் உடையவர்.

யான் - எனதுஎன்னும் செருக்கு, நம்மைவிட்டு அறும்பொருட்டு, அவரை நம் உள்ளத்தில் வைத்து வழிபடுவோம். அவ்வாறு நினைந்து வழிபடுவோமானால், இந்நூல் எந்தவித இடையூறும் இன்றி இனிது நிறைவுறும்.

இந்நூலாசிரியர், திருவதிகை மனவாசகங்கடந்தார். தம் ஆசிரியர் மெய்கண்ட தேவரைப் போன்றே விநாயகரை வழிபட்டுத் தமது நூலைத் தொடங்குகிறார்.

## நூ மப

## குருமுதல்வரை வேண்டுதல்

1. பொய்காட்டிப் பொய்அகற்றிப் போத ஆனந்தப் பொருளாம்
மெய்காட்டும் மெய்கண்டாய் விண்ணப்பம்; பொய்காட்டா
மெய்யா திருவெண்ணெய் வித்தகா சுத்தவினு
ஐயா நீ தான்கேட்டு அருள்.

தெளிவுரை:

திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியுள்ள சிவஞான தேசிகரே, உம்மை வந்து அணைந்தார்க்குப் பொய் ஆகிய உலக உணர்வு, மீண்டும் வாராதபடி வாதனையைக் கெடுத்து, அவரை இன்புறு நிலையில் நிறுவ வல்ல, அருள்உருக் கொண்ட முதல்வரே.

மெய்ப் பொருளைத் தலைப்பட்டு உணர வைக்கும் மெய்கண்ட தேவரே, ஆச்சாரிய மூர்த்தியே,

அடியேன், உம்மை வேண்டிக் கேட்டுக்கொள்ளும் விண்ணப்பம்.

அடியேன், விழிப்புநிலை (சகலம்) உறக்க நிலை (கேவலம்) ஆகிய இரு நிலைகளையும் கடந்து, தூயநிலையைத் (சுத்தம்) தலைப்படுவதற்கு ஏதுவாக வினவும் வினுக்களைத் திருச்செவி ஏற்று அருளி, அவற்றிற்கு உரிய விடைகளைக் கூறியருளி, அடியேனை ஆட்கொள்ளவேண்டும்.

**பொய்காட்டி** – நிலையில்லாமல் தோன்றி மறையும் முப்பதாறு தத்துவங்கள். இவை என்பதனைக் காட்டுவித்து, 'பொய்' என்பது நிலையில்லாதது ஆகும். இல்லாதது என்பது பொருளன்று.

**பொய் அகற்றி** – நமது அறிவுக்கு எட்டும்படி சுட்டப்பட்டுக் காட்டப்படும் பொருள்கள் அனைத்தும் நிலைத்தவை ஆகா என்பதை உணர்த்தி.

## வினுக்கள்

2. ஆறுாறு தத்துவம்ஏது? ஆணவம்ஏது? அன்றேதான்
மாறுவினை ஏது? மற்றுஇவற்றின் –வேறுஆகா
நான்ஏது? நீ ஏது? நாதன்நடம் அஞ்சுஎழுத்துத்
தான்ஏது? தேசிகனே, சாற்று.

தெளிவுரை:

இச்செய்யுளில் எட்டு விஞக்கள் எழுப்பப்பட்டு உள்ளன. அவை வருமாறு:

1. முப்பத்தாறு ஆக வைத்து எண்ணப்படும் தத்துவங்களின் இயல்பு யாது?

2. ஆணவம் எனப்படும் மூலமலத்தின் இயல்பு யாது?

3. தொன்றுதொட்டு ஆணவமலத்தோடு தொடர்ந்து நீங்காமல் வரும் கன்மத்தின் இயல்பு யாது?

4. ஆணவம், கன்மம், மாயை ஆகிய இவற்ருேடு கூடி ஒற்றுமைப்பட்டு 'யான்–எனது' என உணர்கின்ற உயிர் ஆகிய என் இயல்பு யாது?

5. என் அறியாமையை நீக்கி, உண்மையை உணர்த்த எழுந்தருளி வந்துள்ள உம் இயல்பு யாது?

6. முதல்வன் இயற்றும் திருக்கூத்தின் இயல்பு யாது?

7. திருஐந்து எழுத்தின் இயல்பு யாது?

8. தான் (ஆதல்) எனப்படும் பரமுத்தியின் இயல்பு யாது? குருமுதல்வரே, இவற்றை எனக்கு விளக்கிக் கூறியருள வேண்டுகிறேன்.

இறைவனே, குருவாய் வெளிப்பட்டு வருவதால், 'நீ' என்று குறிப்பிட்டது, இறைவனைக் குறித்து நின்றது; திருவருளைக் குறித்தது என்று கூறினும் பொருந்தும்.

இவ்விஞக்களைக் கீழ்க்காணும் வகைகளில் வைத்து நோக்கலாம்.

**இறை:**

நீ எது? நாதன் நடம் எது?

**உயிர்:**

நான் எது?

**துணை:**

தத்துவம் எது? ஆணவம் எது? வினை எது?

**சாதனம்:**

அஞ்செழுத்து எது?

**பயன்:**

தான் (ஆதல்) எது?

இவ்வாறு நோக்கினுல், பின்வரும் சாத்திர நூல்களில் உள்ள நுட்பங்களைப் புரிந்துகொள்வதற்கு அது பயன்படும்.

## ஆசிரியர் இசைவு

3. உள்ளபடி இத்தை உரைக்கக்கேள்; உன்தனக்கு
வள்ளல், அருளால், அன்றுவாய்மலர்ந்த – தெள்ளியசீர்
ஆகமங்கள் சொன்ன அடைவிலே ஆனந்த
யோகம் நிகழ்புதல்வா, உற்று.

**கொண்டுகூட்டு:**

ஆனந்த யோகம் நிகழ் புதல்வா, வள்ளல் அருளால் அன்று, வாய்மலர்ந்து தெள்ளியசீர் ஆகமங்கள் சொன்ன அடைவில், உன் தனக்கு இத்தை உள்ளபடி உரைக்க, உற்றுக்கேள்.

**தெளிவுரை:**

சிவானந்த நிலையை எய்துவிக்க வல்ல சிவயோக நெறியில் நிற்கும் மாணவனே, நீ அறிய விரும்புகின்ற மெய்ஞ்ஞான நெறியை, சிவாகமங்கள் உரைக்கின்ற முறையில், அவற்றில் உள்ளவாறு உனக்கு உரைப்போம்.

சிவாகமங்கள், முன் ஒரு காலத்தில், கருணையே காரணமாக, சிவபெருமானுல் திருவாய்மலர்ந்து அருளப்பெற்றவை. அவை தெளிவாகவும் சிறப்பாகவும் உள்ளன.

எனவே, நாம் உரைப்பனவற்றைச் சிந்தையை ஒருமுகப் படுத்திக் கேட்பாயாக.

'இதனை' என்பது, 'இத்தை' என மரீஇற்று. 'ஆகமங்கள் சொன்ன அடைவிலே' என்ற தொடர், 'ஆகமங்களில் சொல்லப்பட்ட முறையில் பொருள்களை அமைத்து' என்ற பொருளைத் தரும்.

அடைவிலே – முறையிலே.

## ஐந்து பூதங்களின் வடிவு

4. நாற்கோணம் பூமி, புனல் நண்ணுமதி யின்பாதி,
ஏற்கும் அனல் முக்கோணம்; எப்போதும் – ஆர்க்கும்
அறுகோணம்கால்; வட்டம் ஆகாயம்; ஆன்மா
உறுகாயம் ஆம், இவற்ருல் உற்று.

தெளிவுரை:

பூதங்கள் ஐந்து, இவை பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் எனப்படும். அவற்றைத் தமிழில் மண், புனல், அனல், வளி, வெளி என்பர். இச்செய்யுளில், இவற்றின் வடிவம் எவ்வாறு உள்ளது என்பது கூறப்பட்டுள்ளது. அவை வருமாறு:

**மண்**, நான்கு புறமும் கோணம் கொண்டு சதுர வடிவு உடையதாக இருக்கும்.

**புனல்**, பிறைச் சந்திரனைப் போன்று அரைவட்ட வடிவு உடையது.

**அனல்,** மூன்று புறமும் கோணம் கொண்டு குவிந்து இருக்கும்.

**வளி**, ஆறு புறமும் கோணம் கொண்டு அறுகோண வடிவு உடையதாக இருக்கும்.

**வெளி**, வட்ட வடிவு உடையதாகும்.

உயிர்கள் பெறுகின்ற பருவுடல் (தூலசரீரம்) இந்த பூதங்களின் பரிணமத்தால் அமைந்துள்ளது.

'மண்' என்றதும் பூமியில் உள்ள நிலப்பரப்பைக் கருத்தில் கொள்ளக்கூடாது. சந்திரலோகத்தில் மண், கல் இருப்பதாக இப்போது கண்டுபிடித்திருக்கிறார்கள். சிவஞான சுவாமிகள் இதனை முன்னரே சொல்லியிருக்கிறார்கள். இச்செய்யுளில் வரும் மண் பிருதிவி தத்துவத்தைக் குறிக்கும்.

'புனல்' என்பது நீர் தத்துவம், 'அனல்' என்பது நெருப்பு தத்துவம். 'வளி' என்பது வாயுதத்துவம், 'வெளி' என்பது, ஆகாய தத்துவம் எனக் கொள்க.

கால் – காற்று; ஆர்க்கும் – ஒலிக்கும்.

காயம் – உடம்பு.

இவ்வடிவங்களை, இவற்றின் குறுக்குவெட்டால் உணர்ந்து கொள்ளவேண்டும்.

மண்ணிலிருந்து எலும்பு, தசை, தோல், நரம்பு, மயிர் ஆகியவை தோன்றுகின்றன. நீரிலிருந்து சிறுநீர், உமிழ்நீர், வியர்வை, குருதி, விந்து ஆகியவை தோன்றுகின்றன. தீயிலிருந்து பசி, உறக்கம், நீர் வேட்கை, சோம்பல், ஒன்று ஒன்றோடு சேர்தல்

ஆகியவை ஏற்படுகின்றன; காற்றிலிருந்து ஓடுதல், படுத்தல், நடத்தல், அமர்தல், தாண்டல் ஆகியவை நிகழ்கின்றன. விண்ணிலிருந்து மயக்கம், விருப்பு, வெறுப்பு, அச்சம், நாணம் ஆகியவை தோன்றுகின்றன.

இவையனைத்தும் உயிர்களின் பருவுடலில் நிகழ்வதால், பஞ்ச பூதங்களின் பரிணமத்தால் உயிர்களுக்குப் பருவுடல் அமைந்துள்ளன எனக் கூறுகிறார்.

## பஞ்ச பூதங்களின் நிறமும் எழுத்தும்

**5. பொன்பார்; புனல்வெண்மை; பொங்கும் அனல்சிவப்பு;**
**வன்கால்கருமை; வளர் வான்தூமம் – என்பார்**
**எழுத்து லவரயஅப் பார்ஆதிக்கு என்றும்**
**அழுத்தம்அதாய் நிற்கும் அது.**

**தெளிவுரை:**

மண் பொன்மை நிறம் உடையது;

புனல் (விளங்காத) வெண்ணிறம் உடையது; மேல் ஓங்கும் இயல்புள்ள நெருப்பு செந்நிறம் உடையது; வலிய காற்று கருநிறம் உடையது, எங்கும் பரவியுள்ள ஆகாயம் புகைநிறம் உடையது, என்று இவற்றின் நிறங்களை யோகக் காட்சியால் கண்டு உணர்ந்த அருளாளர்கள் கூறுகின்றார்கள்.

மண் முதலிய பூதங்களை, உடன் நின்று தொழிற்படுத்தும் வித்து எழுத்துக்கள், ல,வ,ர,ய,உற எனப்படு மெய்யெழுத்துக்கள் என்று ஆகமங்களை அறிந்தவர்கள் கூறுவார்கள்.

வித்து எழுத்துக்களை ''பீஜ அட்சரம்'' என்று வடமொழியில் கூறுவர். 'பீஜ' என்ற சொல் 'வீச்சு' என்ற பொருளைத் தரும், வீச்சு – சிதறுவது. இயங்கச் செய்வது. பூதங்களின் இயக்கத்திற்கு அடிப்படையாக இருப்பவை, இந்த வித்து எழுத்துக்களே ஆகும்.

மண்ணின் உள்ளுருவாக மஞ்சள்நிறம் ஊடாடுவதை வைத்தே, மண்ணுக்குப் பொன்னிறம் கூறப்பட்டுள்ளது.

இந்த பூதங்களின் தன் மாத்திரைகள் ஆகிய நுண்வெளிகளில் அசைவு ஏற்படும்பொழுது தோன்றும் ஒலிகளைக் கொண்டு, தவப் பயிற்சியில் சிறந்த மெய்ஞ்ஞானிகள், இவற்றிற்கு வித்து எழுத்துக்களை அமைத்துள்ளனர். அவர்களுக்குள்ள தவப்பயிற்சி



16

நமக்கு இல்லாததால், அவற்றை நமது ஆராய்ச்சி அறிவால் அறியமுடியாது. எனவே, இந்த வித்து எழுத்துக்களைப் பற்றிய ஆராய்ச்சி அவசியமற்றது ஆகும்.

## பூதங்களின் அடையாளம்

**6.** **குறிகுலிசம் கோகனதம் கொள்சுவத்தி குன்று**
**அறுபுள்ளி ஆர்அமுத விந்துப் - பிறிவுஇன்றி**
**மண்புனல்தீக் கால்வானம் மன்னும் அடைவே என்(று)**
**ஒண்புதல்வா ஆகமம், ஓதும்**

**கொண்டு கூட்டு:**

ஒண்புதல்வா, மண் புனல் தீ கால் வானம் அடைவே, குலிசம் கோகனதம், கொள் சுவத்தி, குன்று அறுபுள்ளி, ஆர்அமுத விந்து, பிறிவு இன்றி, குறி மன்னும் என்று ஆகமம் ஓதும்.

**தெளிவுரை:**

அறிவுவிளக்கம் உள்ள அருமை மாணுக்கனே, மண், நீங்காத அடையாளமாக வைரவேலைக் கொண்டுள்ளது; நீர், தாமரையைக் கொண்டுள்ளது; தீ, சுவத்திகத்தைக் கொண்டுள்ளது; காற்று, குறைவில்லாத ஆறு புள்ளிகளை அடையாளமாக உடையது; வானம் அமுதத்துளியினை நீங்காத அடையாளமாகக் கொண்டுள்ளது. ஐந்து பூதங்களும் மேற்குறிப்பிட்ட பொருள்களை அடையாளமாகக் கொண்டு நிலைபெற்று இருக்கும் என்று சிவாகமங்கள் கூறுகின்றன.

**குலிசம்** – வச்சிராயுதம் – இடிப்படை (Thunder bolt) இடியைத் தாங்கும் வன்மை உடையது.

**கோகனதம்** – தாமரை (Lotus) நீரில் மட்டுமே வளர்வது.

**சுவத்தி** – ''சுவஸ்திக்'' என்பது வடமொழிப் பெயர். நெருப்பு பல்வேறு திசைகளில் பரவுவதால், இந்த அடையாளம் கூறப்பட்டது.

**அமுதவிந்து** – இனிமையான புள்ளி; இதன் வியபாகத்தில் அனைத்து அண்டங்களும் அடங்கும்.

## பூதங்களின் அதி தெய்வங்களும் அவர் தொழிலும்

**7. பார்ஆதி ஐந்துக்கும் பன்னும்அதி தெய்வங்கள்**
**ஆர்ஆர்? அயன்ஆதி ஐவர் ஆம் – ஓர்ஓர்**
**தொழில்அவர்க்குச் சொல்லுங்கால் தோற்றம்முதல் ஐந்தும்**
**பழுதுஅறவே பண்ணுவர்கள் பார்.**

**தெளிவுரை:**

'பண்ணுவர் காண்' என்பது பாடம். (ஈ.மு.பிள்ளை புத்துரை). மண் முதலிய ஐந்து பூதங்களுக்கும் ஆகமங்கள் கூறும் அதிதெய்வம் யார், யார்? அவர் அவருக்குள்ள தொழில்கள் யாவை?

'படைத்தல்' தொழிலை 'அயன்' செய்வார்;
'காத்தல்' தொழிலை 'மால்' செய்வார்;
'அழித்தல்' தொழிலை 'அரன்' செய்வார்;
'மறைத்தல்' தொழிலை 'மகேசன்' செய்வார்;
'அருளல்' தொழிலை 'சதாசிவன்' செய்வார்.

இவர்கள் ஐவரும் அதிதெய்வங்கள்; அஃதாவது, இவர்களை நிலைக்களமாகக் கொண்டு இயக்கிச் சிவபெருமான் ஐந்தொழில்களைச் செய்யும்போது கொள்ளும் வடிவங்கள் என்பது பொருள். இதன் விளக்கத்தைச் சிவஞானசித்தியார் 164ல் காணலாம்.

### அத்தொழில்களை வகுத்துக் கூறுதல்

**8. படைப்பன் அயன், அளிப்பன் பங்கயக்கண் மாயன்,**
**துடைப்பன் உருத்திரனும் சொல்லில் – திடப்பெறவே**
**என்றும் திரோபவிப்பர் ஈசர்; சதாசிவரும்**
**அன்றே அநுக்கிரகர் ஆம்.**

**தெளிவுரை:**

முன்னைப் பாட்டில் தொகுத்துக்கூறிய செய்தியை, இப்பாட்டில் வகுத்துக் கூறுகிறார், அவ்வளவே.

**'படைத்தல்'** என்பது உடல், கருவி, நிலன், நுகர்ச்சிப் பொருள் எனப் பாகுபடும் உலகத்தை, அவற்றின் முதற்காரணத்தினின்றும் தோற்றுவித்து, உயிர்கள் செய்த வினைக்கு ஈடாகப் பொருத்துதல்.

**'காத்தல்'** என்பது, அங்ஙனம் தோற்றுவித்த உலகத்தை மீண்டும் ஒடுக்கும்வரை உயிர்களுக்குப் பயன்பட்டு நிற்கச் செய்தல்.

**'அழித்தல்'** என்பது, தோன்றிச் செயற்படும் உலகத்தை மீளவும் காரண உருவில் மறையச் செய்தல்.

இம்மூன்று செயலும், அறிவில் பொருள் ஆகிய மூலப் ப்குதியில் நிகழ்வன.

**'திரோபவித்தல்'** என்பது மறைத்தலே, அஃதாவது, உயிர்களைப் பிறப்பு–இறப்பு, விழப்பு–உறக்கம், நினைப்பு–மறப்பு என்னும் சகல கேவலங்களில் மாறி மாறி நிற்கச் செய்வது. உயிர்களின் அறிவு, விழைவு. செயலாற்றல்களைப் படிப்படியாக வளரச் செய்தல், உலக நுகர்ச்சியில் அழுத்தியும் இளைப்பாற்றியும் வருவதே மறைத்தல் எனப்படும்.

**'அருளல்'** என்பது, உயிரின் முதிர்ந்த பக்குவநிலையில், மாசு நீக்கித் தன்னையும் அதனையும் உணர்த்தி, தான் ஆம் வண்ணம் செய்து, உயிரை ஆட்கொள்ளுதல். இஃதே இறைவன் செய்யும் முடிநிலைச் செயல் ஆகிய வீடுபேறு நல்குதல் எனப்படும்.

## பூதங்களின் குணமும் தொழிலும்

**9. *மண்கடின மாய்த்தரிக்கும்; வாரிகுளிர்ந்தே, பதமாம்,***
***ஒண்கனல்சுட்(டு) ஒன்றுவிக்கும்; ஓவாமல் – வண்கால்***
***பரந்து, சலித்துத் திரட்டும்; பார்க்கில் ஆகாயம்***
***நிரந்தரமாய் நிற்கும் நிறைந்து.***

**தெளிவுரை:**

ஆய்ந்து அறிவோமானால், 'மண்' திண்மைக் குணமும் பொருள்களைத் தாங்கும் தொழிலும் உடையது. 'நீர்' குளிர்ச்சிக் குணமும் பொருள்களை மென்மைப்படுத்தும் தொழிலும் உடையது. அஃதாவது பொருள்களைக் கரையும்படி செய்வது. ஒளியினை உடைய அனல், வெம்மைக்குணமும் பொருள்களை உருக்கி ஒன்றுவிக்கும் தொழிலும் உடையது. வளப்பம் உள்ள காற்று, ஒழிவு இல்லாமல் பரவும் குணமும் பொருள்களைத் திரட்டும் தொழிலும் உடையது. ஆகாயம்; வெளி ஆதல் ஆகிய குணமும் எப்பொருள்களிலும் ஊடுருவி நிறைந்து நிற்கும் தொழிலும் உடையது.

இதுவரை பூதங்களின் குணப்பண்பும், தொழிற்பண்பும், கூறப்பட்டன. குணம் வேறு; பண்பு வேறு, ஒரு பொருளின் இயல்பு, குணம் எனப்படும். ஒரு பொருளின் இயல்பு காரணமாக பிறபொருள்களின் கண் நிகழும் விளைவு, அப்பொருளின் தொழில் எனப்படும். குணம் தொழில் ஆகிய இரண்டும் சேர்ந்தது 'பண்பு' எனப்படும்.

## தன்மாத்திரைகள்

**10.** **உள்ளபடி மாபூதம் ஓதினோம் உன்தனக்குக்**
**கள்ளமிகும் ஐம்புலனும் கட்டுரைக்கின் – மெள்ளவே**
**ஓசை பரிசம் உருவம் சுவைநாற்றம்**
**ஆசைதரும் ஐம்புலனே ஆம்.**

**கொண்டுகூட்டு:**

உன் தனக்கு, மெள்ள உள்ளபடி, மாபூதம் ஓதினோம்; கள்ளம் மிகும் ஐம்புலனும் கட்டுரைக்கில், ஆசைதரும் ஓசை பரிசம் உருவம் சுவை நாற்றம் ஐம்புலன் ஆம்.

**தெளிவுரை:**

இதுவரை, உனக்கு பெரும் பூதங்களின் இயல்பை சிவாகமங்களில் உள்ளவாறு, அன்புடன் சொன்னோம். இனி, அப் பூதங்களுக்கு முதற்காரணமாய்ச் சூக்குமித்து உள்ள ஐந்து தன்மாத்திரைகளும் யாவை என எடுத்துரைக்கின்றோம்.

மனத்தைக் கவரும் அவற்றைச் சுட்டிக் கூறினால், அவை ஓசை, ஊறு, உரு, சுவை, நாற்றம் என்பன ஆகும். இவற்றை முறையே சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்று கூறுவர்.

தன்மாத்திரைகள், சூக்கும பூதங்கள் எனப்படும்.

சைவசித்தாந்தத்திலே, ஒரு பொருளே ''குணம்''எனவும், ''குணி'' எனவும் இருதன்மைப்பட விளங்குகின்றது. குணங்களின் செறிவே, ............ ''குணி'' எனப்படும். ''மாத்திரை'' என்பது ''அளவு'' ஆகும்.

'தன் மாத்திரை' என்பது தன் அளவில் உள்ள குணம் என்று பொருள்படும்.

| | | |
|---|---|---|
| **மண்ணின் குணம் மணம் (நாற்றம்)** | – | **Sence of Smell** |
| **நீரின் குணம் சுவை** | – | **Sence of taste** |
| **நெருப்பின் குணம் ஒளி** | – | **Sence of light** |
| **காற்றின் குணம் ஊறு** | – | **Sence of touch** |
| **ஆகாயத்தின் குணம் ஓசை** | – | **Sench of hearing** |

சூக்குும பூதங்கள் ஆகிய தன் மாத்திரைகளிலிருந்தே தூல பூதங்கள் தோன்றின.

தன் மாத்திரைகளுடன் சத்த மாத்திரையாய் நிற்பது சத்தம்; சத்தத்தை உள்ளடக்கிப், பரிச மாத்திரையாய் நிற்பது பரிசம்; சத்தத்தையும் பரிசத்தையும் உள்ளடக்கி, உருவ மாத்திரையாய் நிற்பது உருவம்; சத்தத்தையும், பரிசத்தையும் உருவத்தையும் உள்ளடக்கி, இரசமாத்திரையாய் நிற்பது இரசம்; சத்தத்தையும் பரிசத்தையும் உருவத்தையும் இரசத்தையும் உள்ளடக்கிக் கந்த மாத்திரையாய் நிற்பது கந்தம்.

சத்தத்தின் காரியம் ஆகிய ஆகாயத்தில் இருப்பது, சத்தம் ஆகிய ஒரு குணம்.

பரிசத்தின் காரியம் ஆகிய வாயுவில் இருப்பது, சத்தமும் பரிசமும் ஆகிய இரு குணம்.

உருவத்தின் காரியம் ஆகிய தேயுவில் இருப்பது சத்தமும், பரிசமும் உருவமும் ஆகிய முக்குணம்.

இரசத்தின் காரியம் ஆகிய அப்புவில் இருப்பது, சத்தமும் பரிசமும் உருவமும் இரசமும் ஆகிய நாற்குணம்.

கந்தத்தின் காரியம் ஆகிய பிருதிவியில் இருப்பது சத்தமும் பரிசமும் உருவமும் இரசமும் கந்தமும் ஆகிய ஐங்குணம்.

தன்மாத்திரைகளுக்கும் புலன்களுக்கும் பெயர் ஒன்றே. ஆயினும், அவை தம்முள் சிறிது வேற்றுமை உண்டு. தன் மாத்திரைகள் பூதங்கள் தோன்றுவதற்கு மூலமாக இருக்கும் பொருளாகும். ஐம்பொறிகளுக்குக் குணமாக இருப்பவை ஐம்புலன்கள் ஆகும். ஐம்பொறிக்கும் உரிய குணங்களே, விடய தன்மாத்திரை என்று கூறுவர். பூத தன் மாத்திரை பொருள்; விடய தன்மாத்திரை குணம். இவ் வேறுபாட்டை நன்கு அறிந்து கொள்க.

## அறிவுப்பொறிகள் ஐந்து

11. ஞானஇந் திரியங்கள் நன்று உரைக்கக்கேள்;
ஊனம்மிகுபூதம் உற்றஇடமா – ஈனம்ஆம்
சத்தஆதியை,அறியும் தானம்,செவி,தோல்,கண்
அத்தாலு மூக்குஎன்று அறி.

**தெளிவுரை:**

ஞானேந்திரியங்கள் எனப்படும் அறிகருவிகள், இத்தகைய இயல்பினை உடையன என்பதை விளக்கமாக நாம் சொல்வதை நீ கேட்பாயாக.

அக்கருவிகள், தாமதகுணம் மிகுந்த தன் மாத்திரைகளைப் பொருந்தி அவற்றை இடமாகக் கொண்டு, கீழ்த்தரமான சத்தம் முதலிய ஐந்து விடயங்களையும் அறிந்துவரும்.

அவை நிற்பதற்கு உரிய இடங்கள், காதும், தோலும், கண்ணும், அழகிய நாக்கும் மூக்கும் ஆகும் என்பதை அறிவாயாக.

விடயம் – புலன்; தாலு – நாக்கு.

செவி, தோல், கண், நாக்கு, மூக்கு என்னும் அறிகருவிகளை வடமொழியில் முறையே சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்நுவை, கிராணம் என்னும் ஞானேந்திரியங்கள் என்பர்.

## செவி, தோல், கண் அறியும் விதம்

12. வான்இடமாய் நின்று செவி மன்னும் ஒலியதனை,
ஈனம்மிகும் தோல் கால் இடமாக – ஊனப்
பரிசம் தனை அறியும்; பார்வையில் கண் அங்கி
விரவி உருவம் காணுமே.

**தெளிவுரை:**

'செவி' என்னும் அறிகருவி, 'ஓசை'ப்புலனை இடமாகக் கொண்டு, 'காது' என்னும் உறுப்பின் வாயிலாக 'ஒலி' ஆகிய புலனை அறிந்து வரும்.

இழிவு மிகுந்த 'தோல்' என்னும் அறிகருவி, 'ஊறு'ப் புலனை இடமாகக் கொண்டு, 'தோல்' என்னும் உறுப்பின் வாயிலாக குற்றமுள்ள மெய்யுணர்வுப் புலனை அறிந்துவரும்.

'கண்' என்னும் அறிகருவி, 'ஒளி'ப்புலனை இடமாகக் கொண்டு 'கண்' என்னும் உறுப்பின் வாயிலாக உருவத்தை அறிந்து வரும்.

## நாக்கு, மூக்கு அறியும் விதம்

13. நன்றாக நீர்இடமா நா இரதம் தான்அறியும்;
பொன்றா மணம்மூக்குப் பூஇடமா – நின்(று) அறியும்
என்றுஓதும் அன்றே இறை, ஆகமம் இதனை
வென்றார், சென்றார், இன்ப வீடு.

'நாக்கு' என்னும் அறிகருவி, 'சுவை' என்னும் புலனின் இடமாக நின்று, நாக்கு ஆகிய உறுப்பின் வாயிலாகச் சுவையைச் செவ்வையாக அறியும்.

'மூக்கு' என்னும் அறிகருவி, 'மணம்' என்னும் புலனின் இடமாக நின்று, 'மூக்கு' ஆகிய உறுப்பின் வாயிலாகக் குறைவில்லாத மணத்தை நுகர்ந்து அறியும்.

இவ்வாறு சிவாகமங்கள் சொல்லும்.

இந்த ஐந்து பொறிகளையும் புலன்களின் வழிச் செல்ல ஒட்டாமல், திருவருள் துணையால், நல்வழிப் படுத்துபவர்கள், தடை ஏதும் இன்றிப் பேரின்ப வீட்டிற்குச் சென்றவர் ஆவார்கள்.

இந்திரியம் – கருவி – பொறி என்பன ஒருபொருட் சொற்கள்.

தன்மாத்திரைகளைக் குறித்துத் திருவள்ளுவர்,

சுவைஒளி ஊறுஓசை நாற்றம்என் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு. (27)

என்றும், ஐம்புலன்களைக் குறித்துக்

கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்
ஒண்டோடி கண்ணே உள. (1101)

என்றும் கூறித் தெளிவுபடுத்தியுள்ளார்.

இவ்விரு குறள்களிலிருந்து, புலன்கள் வேறு – தன்மாத்திரைகள் வேறு என்பதைப் புரிந்துகொள்ளலாம்.

## தொழிற்பொறி ஐந்து

14. கண்ணுதல்நூல் ஓதியிடும் கன்மேந் திரியங்கள்
எண்ணும், வசனாதிக்கு இடமாக – நண்ணியிடும்
வாக்குப், பாதம், பாணி, மன்னு குதம், உபத்தம்
ஆகக், கருதும் நாளும் அது.

தெளிவுரை:

நெற்றிக்கண்ணை உடைய சிவபெருமானுல் அருளப்பட்ட சிவாகமங்களில் கூறப்பட்டிருக்கிறபடி செயற்கருவிகள் ஆகிய கன்ம இந்திரியங்கள் ஐந்து எனக் கணக்கிடப்பட்டுள்ளன.

அவை வருமாறு:

வாக்கு, பாதம், பாணி, குதம், உபத்தம் என்ற முறையே கூறப்படும், வாய், கால், கை, எருவாய், கருவாய் என்பன ஆகும்.

## பொறிகள் செயல்படும் வீடும்

**15.** **வாக்கு, ஆகாயம் இடமா வந்து வச னிக்கும், கால்**
**போக்கு ஆரும் காற்று, இடமாப்; புல்கிஅனல் – ஏற்கும்**
**இடும் கை; குதம், நீர் இடமா மலாதி**
**விடும்; பார் இடம் உபத்தம் விந்து.**

தெளிவுரை:

'வாக்கு' என்னும் இந்திரியம், 'ஓசை'த் தன்மாத்திரையின் இடமாக வந்து, 'வாய்' ஆகிய உறுப்பின் வாயிலாகப் பேசும்.

'பாதம்' என்னும் இந்திரியம், 'ஊறு'த் தன்மாத்திரையின் இடமாக வந்து, 'கால்' ஆகிய உறுப்பின் வாயிலாகப் போவதும் வருவதும் ஆகிய தொழிலைச் செய்யும்.

'பாணி' என்னும் இந்திரியம், 'ஒளி'த் தன்மாத்திரையின் இடமாக வந்து, 'கை' ஆகிய உறுப்பின் வாயிலாகக் கொள்வதும் கொடுப்பதும் ஆகிய தொழிலைச் செய்யும்.

'குதம்' அல்லது 'பாயுறு' என்னும் இந்திரியம், 'சுவை'த் தன் மாத்திரையின் இடமாக வந்து 'எருவாய்' வாயிலாக, மலம் நீர் முதலியன வெளிப்படுத்தும்.

'உபத்தம்' என்னும் இந்திரியம், 'நாற்றத்' தன்மாத்திரையின் இடமாக வந்து, பிறப்பு உறுப்புக்களின் வாயிலாகச் சுக்கில சுரோணிதங்களை வெளிப்படுத்தும்.

இப்பொறிகளுக்குச் சார்பாய் நின்று, வலிசெய்யும் நுண் பூதங்கள் முறையே ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலன் ஆகியன ஆகும்.

## அந்தக்கரணங்கள் நான்கு

**16.** அந்தக் கரணம் அடைவே உரைக்கக்கேள்;
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் – சிந்தை; இவை
பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்து அங்கு
உற்றசிந் திக்கும் உணர்.

**தெளிவுரை:**

அகக்கருவிகள் நான்கினையும் முறைப்படி கூறுகிறோம், கேள். அவை, மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் எனப் பெயர் பெறும்.

உள்ளம் தெளிவுபெற்று முடிந்த நிலையில், 'மனம்' பொறிவழி வரும் புலன் ஒன்றைப் பற்றும்; மனம் பற்றியதனைப், 'புத்தி' இஃது இன்னது, என நிச்சயிக்கும்; பற்றுதல், நிச்சயித்தல் ஆகிய செயல்களுக்கு அடிநிலையாக அமைந்து, ''ஆங்காரம்'' ''யான்'' இதைச் செய்வேன்'' என்று ஊக்க வடிவில் முந்தும்; ''சித்தம்'' இம் மூன்றாலும் வரும் வழிகளின் பயனைக் கவர்ந்து நினைவு வடிவில் இருக்கும். இவற்றின் உண்மையை இவ்வாறு உள்நோக்கி உணர்ந்துகொள்.

அந்தக் கரணங்கள், அமைப்பு முறையில், மனம், புத்தி ஆங்காரம், சித்தம், என்று உள்ளன. அவை தொழில் செய்யும் முறையில், சித்தம், மனம், ஆங்காரம், புத்தி என்னும் வரிசை முறையில் அமைந்துள்ளன.

முதலில் எந்த ஒருபொருளும் நம் சிந்தைக்கு எட்டிய பிறகே, அப்பொருளை நாம் விரும்புகிறோம். எனவே, ''சித்தம்'' தொழிற்பட்ட பின்பே ''மனம்'' தொழிற்படுகிறது; அப்பொருளை அடைந்தே தீருவேன் என்று பின்பு ''ஆங்காரம்'' எழுகிறது. எனவே, மனம் தொழிற்பட்டதும் ஆங்காரம் தொழிற்படுகிறது. பின்பு அது நல்லதா கெட்டதா என்று ''புத்தி'' நிச்சயிக்கிறது. எனவே, ஆங்காரத்திற்குப் பிறகு புத்தி தொழிற்படுகிறது.

## ஆன்ம தத்துவங்களைத் தொகுத்துக் கூறி வித்தியா தத்துவங்களைச் சொல்வோம் என்றல்

**17.** *ஓதியிடும் நால்ஆறும் உற்று ஆன்ம தத்துவம் என்று*
*ஆதி அருள்நூல் அறையும்; காண் – தீது அறவே*
*வித்தியா தத்துவங்கள் தம்மை விளம்பக்கேள்*
*உத்தமனே, நன்றா உனக்கு.*

**தெளிவுரை:**

நல் மாணுக்கனே, நாம் இதுவரை சொன்ன இருபத்து நான்கு தத்துவங்களும் உயிர்க்கு நுகர்ச்சியாக உள்ள ஆன்ம தத்துவங்கள் என்று சிவாகமங்கள் கூறும்.

இனி, வித்தியா தத்துவங்களின் இயல்பை ஐயம் அற உனக்கு உரைப்போம்; அவற்றை நீ கேட்பாயாக.

ஆன்ம தத்துவக் கொத்து வருமாறு:

பூதங்கள் ஐந்து, தன்மாத்திரைகள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து, அந்தக் கரணம் நான்கு; ஆக மொத்தம் இருபத்து நான்கு.

## வித்தியா தத்துவங்களின் பெயர்

**18.** *காலம் நியதி கருதும் கலை, வித்தை*
*ஏலஅரா கம், புருடன் (ஏ)மாயை – மால்அற ஏழ்*
*சொன்னேம் அடைவாகச் சொன்னஇவை தம் உண்மை*
*உன்னி உரைக்கும்; நாம் உற்று.*

**கொண்டு கூட்டு:**

ஏலக் கருதும் காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை, மால்அற அடைவு ஆகச் சொன்னேம்; சொன்ன இவைதன் உண்மை, நாம் உன்னி உற்று உரைக்கும்.

**தெளிவுரை:**

சிவாகமங்களுக்கு ஏற்ப, ஆராய்ந்து கொள்ளத்தக்க முறையில், காலம், நியதி,கலை, வித்தை, அராகம், புருடன், மாயை ஆகியவை வித்தியா தத்துவங்கள் என்று மயக்கம் நீங்க, வரிசையாகக் கூறினேம். இனி, உத்தேசமாகச் சொல்லப்பட்ட இத்தத்துவங்களின் இலக்கணத்தை நாம் உனக்கு விளக்குகிறோம். அதற்கான வழியைச் சிந்தித்து, அதனைக் கடைப்பிடித்துச் சொல்லுவோம்.

## வித்தியா தத்துவங்களின் தொழில்

**19.** எல்லை பலம், புதுமை எப்போதும் நிச்சயித்தல்
அல்லல் தரும்கிரியை ஆன்மாவுக் (கு) ஒல்லே
அறிவு, ஆசை ஐம்புலனும் ஆரவரும் – காலம்
குறியா மயக்குஎன்று கொள்.

**தெளிவுரை:**

உயிர்களுக்கு நுகர்ச்சியின் முடிவாகிய எல்லேயும், அதன் விளேவு ஆகிய நிகழ்வும், இனி வரும் என்னும் புதுமை எதிர்பார்ப்பும் ஆகிய உணர்வுகளேக் 'காலம்' என்னும் தத்துவம்,

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் எனத் தான் பகுப்புற்று நிற்கும்.

உயிரின் வினேக்கு ஈடாக, இஃது உரியது, இஃது உரியதன்று என அந்நுகர்ச்சியை, நியதித் தத்துவம், ஒரு வரையறைக்கு உட்பட்டு நின்று நியமிக்கும்.

உயிருக்குத் துன்பம் தருவதற்கு ஏதுவாகிய உயிரின் கிரியாசக்தியைக் கலேத் தத்துவம், சிறிதே எழுப்பும்.

உயிரின் ஞானசக்தியை வித்தியா தத்துவம் விரைந்து சிறிதே எழுப்பும்.

உயிரின் இச்சாசக்தியை, அராகத் தத்துவம் சிறிதே விளங்கச் செய்யும்.

காலம், நியதி, கலே, வித்தை, அராகம் ஆகிய இந்த ஐந்து தத்துவங்களோடு உயிர், கூடிநின்று, ஐம்புலன்கள் தரும் பயனே, நுகருவதற்கு வரும்போது, புருடன் எனப் பெயர்பெறும். புருட தத்துவம், மற்றத் தத்துவங்களேப் போல ஒரு தனித்தத்துவமன்று.

புருட தத்துவத்தை 'உயிர்' என்றும் 'உள்ளம்' என்றும் நூல்கள் கூறுகின்றன. உயிர், இன்பவேட்கை உற்று, உலகியல் இன்ப நினேவாய் நிற்கும் நிலேயைப் 'புருட தத்துவம்' என்று முகமனுகக் கூறப்படுகிறது.

'மாயை' என்பது, உயிரின் அறிவு இச்சை செயல் என்னும் மூன்றும், பிரிந்து தோன்ருமல், எதையும் குறிப்பிட முடியாத மயக்க நிலேயை, உயிர்க்குத் தருவது ஆகும்.

அசுத்தமாயையின் ஒருபகுதியை, இறைவன் கட்டளேயால் சீகண்டருத்திரர் கலக்கியதும், தோன்றுவது மாயை.

வித்தியா தத்துவத்தில் உள்ள ஏழு தத்துவங்களின் தொழில்களை இவ்வாறு அறிந்து கொள்க.

## சுத்த (அல்லது) சிவ தத்துவங்கள்

20. வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினோம்;
சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள் – நித்தமாம்
சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம்நற்
சத்திசிவம் காண், அவைகள் தாம்.

தெளிவுரை:

வித்தியா தத்துவங்கள் ஏழினையும் நாம் இதுவரை விளக்கிச் சொன்னோம். இனி, சுத்தமாயையின் விருத்திகள் (கலைகள்) ஆகிய தத்துவங்களின் இயல்பைக் கூறுகின்றோம். கேள்.

அவை, நித்தமாகிய சுத்த வித்தை, ஈசுரம், அவற்றின் மேலாகச் சொல்லப்படும் சதாசிவம் (சாதாக்கியம்) சத்தி, சிவம் என்னும் பெயர்களை உடையன ஆகும்.

இவ்வைந்து சுத்த தத்துவங்களும், கால தத்துவத்திற்கு உட்படாதவை. எனவே, இவை, நித்தமாக உள்ளவை எனப்படுகின்றன.

## சுத்த தத்துவங்களின் நிலை

21. சுத்தவித்தை ஞான(ம்) மிகும்; தொன்மையாம் ஈசுரந்தான்
அத்தன் தொழில்அதிகம் ஆக்கியிடும் – ஒத்தல்இவை
சாதாக் கியம்; என்றும் சத்தி சிவம், கிரியை
ஆதார ஞானஉரு ஆம்.

தெளிவுரை:

உயிர்களின் அறிவு இச்சை செயல்களின் ஆற்றல்களை, ஆணவ மலத் தடையிலிருந்து நீக்கி, உயிர்களுக்கு உதவும்பொருட்டு, இறைவன் சுத்தமாயையில் தங்கி ஐந்தொழில் ஆற்றுகிறான்.

அவ்வாறு ஆற்றும்போது இறைவனின் திருவருளும் இச்சை, ஞானம், கிரியை என மூவகைப்பட்டு நிற்கிறது.

அவற்றுள், இறைவனின் அருளாற்றல் ஆகிய இச்சாசத்தி எந்தவிதச் சலனமும் இன்றி நிற்க, ஏனைய இரண்டு ஆற்றல்கள் ஆகிய ஞானசத்தியும் கிரியாசத்தியும் தொழிற்படும் விதத்தை இச்செய்யுள் கூறுகிறது.

'சுத்தவித்தை' என்னும் தத்துவத்தில் இறைவனின் ஞானசத்தி மிகுந்தும் கிரியாசத்தி குறைந்தும் தொழில் நிகழ்கிறது.

'ஈசுரம்' என்னும் தத்துவத்தில், கிரியாசத்தி மேம்பட்டு, ஞானசத்தி அடங்கித் தொழில் நடக்கின்றது.

ஞானம், இச்சை ஆகிய இரு சத்திகளும் ஒத்து இணைந்து, சாதாக்கிய தத்துவத்தில் தொழில் நிகழ்கின்றது.

இறைவனின் சத்தி தத்துவம், கிரியையே வடிவமாக உள்ளது; சிவத்தத்துவம் ஞானமே வடிவமாக உள்ளது.

வித்தியா தத்துவத்தில் வரும் வித்தை வேறு; சுத்த தத்துவத்தில் வரும் வித்தை வேறு; இவ்வேறுபாட்டை உணர்த்தும் பொருட்டு, சுத்த தத்துவத்தில் உள்ள வித்தை, 'சுத்தவித்தை' எனப்பட்டது.

அத்தன் – சிவபெருமான்;
தொன்மையாம் – பழமையான
ஞானஉரு – ஞானவடிவு.

## ஆணவம் கன்மம்

**22.** ***ஆறுறு தத்துவம் சொன்னோம் அடைவாக***
***மாறா மலம்இரண்டும்,வா,சொல்லக் – கூறில்***
***அறியாமை ஆணவம்; நீ யான, சுக துக்கம்***
***குறியா வினைஎன்று கொள்.***

**தெளிவுரை:**

முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பையும் இதுவரை எடுத்துரைத்தோம். அடுத்தபடியாக, உயிரைவிட்டு நீங்காமல் தொடர்ந்து வரும் ஆணவம், கன்மம் என்னும் இரண்டு மலங்களின் இயல்பைச் சுருக்கமாக கூறுகிறோம். அதனை மனம் பொருந்திக் கேள்.

குறிப்பிட்டுக் கூறுவதானல், உன்னை, 'நான், நான்' என்று நீ கூறிக்கொண்டிருக்கிறாயே, அந்த நீயேயாய் உன்னை அறியாமைக்கு உட்படுத்திக் கொண்டுள்ள பொருள் எதுவோ, அஃதே 'ஆணவமலம்' ஆகும்.

அடுத்து, நான் இன்பங்களில் திளைக்கிறேன்; துன்பங்களில் துவள்கிறேன் என்று, ஏதோ சிலபல பொருள்களோடு உன்னை நீயே தொடர்புபடுத்திக்கொண்டு இருக்கிறாயே, அத்தொடர்புகளுக்குக் காரணமான உனது செயற்பாடே 'கன்மமலம்' ஆகும்.

உயிரின் அறிவை விளங்க ஒட்டாமல் மறைத்து, உயிர்க்கு அறியாமையைச் செய்வது ஆணவமலம், இதுவே 'மூலமலம்' எனப்படும்.

உயிர்க்கு இன்பநுகர்ச்சியைத் தருவது, உயிரின் நல்வினை ஆகும்; உயிர்க்குத் துன்ப மற்றும் மயக்க நுகர்ச்சியைத் தருவது, உயிரின் தீவினை ஆகும். ஆக நல்வினை, தீவினை எனப்பட்டு வினை இருவகைப்படும். வினை – கன்மம்.

இச்செய்யுளில், 'நீ' ஆன அறியாமை என்றும் 'நீ ஆன சுக துக்கம் வினை' என்றும் வரும் செய்திகள், சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் வகையைச் சேர்ந்தவை ஆகும்.

## நான் யார்? (வினா)

**23. ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்**
**மாறா அருளால் வகுத்துரைத்தீர் – வேறாகா**
**என்னை எனக்கு அறியக் காட்டீர்; இவைகண்டேன்**
**உன்னரிய தேசிகரே உற்று.**

**தெளிவுரை:**

நினைதற்கு அரிய பெருமையை உடைய குருமுதல்வரே, நீர் என்றும் அடியேனை விட்டு விலகாத பேரருளை உடையவர்.

அப்பேரருளால், (1) முப்பத்தாறு தத்துவங்கள், (2) ஆணவ மலம், (3) கன்மமலம் ஆகியவற்றின் இயல்புகளை வகைப்படுத்தி எளியேனுக்கு உணர்த்தியருளினீர். உமது திருவடியைப் பற்றி நின்று, இவற்றைத் தெளிவாகப் புரிந்துகொண்டேன்.

மேற்கூறிய மூவகைப் பொருள்களின் பந்தங்களில் பட்டுக் கிடக்கின்றமையால் அவற்றின் வேறாக என்னை அறிய, என்னால் இயலவில்லை. எனவே, 'நான் யார்?' என உணரும்படி என் இயல்பை எனக்கு உணர்த்தியருள வேண்டுகின்றேன்.

## நான் யார்? (விடை)

24. நன்று உரைக்கக்கேள்; நல்லசித்தின் முன், ஆசித்து இங்கு
ஒன்றாது; சித்துஅசித்தை ஓராது; நின்று இவற்றை
அன்றே பகுத்துஅறிவது ஆன்மாவே என்றுமறை
குன்றாமல் ஓதும் குறித்து.

**தெளிவுரை:**

நல் மாணுக்கனே, உன் இயல்பு யாது என்பதை இப்போது உனக்கு உணர்த்துகின்றோம்; நன்றாகக் கேள். சிவபெருமான், தூய முற்றுணர்வு உடையவன். அவன் முன், அறிவற்ற சடப்பொருள்கள் ஆகிய ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களும் முனைத்துத் தோன்றமாட்டா. இஃது எதுபோல என்றால், சூரியப் பேரொளியின் முன் மற்ற எந்த ஒளியும் விளங்கி எதிர்ப்பட்டு நிற்கமாட்டாது அல்லவா? அதுபோன்றது ஆகும்.

உயிர் ஆகிய உன் அறிவு அத்தகையது அன்று. தொடக்கமில் காலம் தொட்டு (அநாதியே) மும்மலங்களோடு தொடர்புகொண்டு, பிறப்பு இறப்புகளுக்கு உட்படுபவன் நீ. பின்பு, குருவருள் உணர்த்தியதும், சிவம் வேறு – நீ வேறு என்ற உணர்வைப் பகுத்து அறிந்து நிற்கும் அறிவை உடையவனே நீ.

இறைவன் வேறு – உயிர் வேறு என்ற உண்மையை வேதங்கள், ஐயம் திரிபுகளுக்கு இடமின்றி ஓதுகின்றன.

இந்த வெண்பா, சிவஞானபோதம் ஏழாம் சூத்திரக் கருத்தைத் தழுவி அமைந்துள்ளது.

சித்து – அறிவுடைப் பொருள்

அசித்து – அறிவில்லாத பொருள்; சடம்.

''பகுத்து அறிவது ஆன்மா'' என்ற செய்தி, கருத்தில் கொள்ளத் தக்கது.

## தத்துவங்கள் தம்மை அறியா

25. தத்தவங்கள் ஆறாறும் தம்மைத்தாம் என்று அறியா,
எத்தன்மை என்னில், இயம்பக்கேள் – சுத்தமாம்
ஆறு சுவையும் அறியாவே தம்மைத்தாம்
கூறில் அவை, இவைபோல் கொள்.

தெளிவுரை:

தத்துவங்கள் அறிவற்றவை. எனவே, அவை தம்மை நோக்கித் தாம் என்று அறியும் இயல்பினை உடையனவல்ல. இவ்வுண்மைக்கு எடுத்துக் காட்டு வருமாறு:

நீ உணவிலுள்ள சுவைகளை, இஃது இனிப்பு, இது கைப்பு, இது புளிப்பு, இஃது உவர்ப்பு, இது கார்ப்பு, இது துவர்ப்பு என ஆறு விதங்களில் அறிகிறாய். இச்சுவையை உடைய அந்தப் பொருள்கள் யான் இனிப்பு யான் துவர்ப்பு என்று தம்மை நோக்கித் தம்இயல்பை அறியமாட்டா அல்லவா? அவ்வாறு முப்பத்தாறு தத்துவங்களும் தத்தம் இயல்புகளை அறியமாட்டா என்பதை நீ நன்றாகப் புரிந்துகொள்.

## தத்துவங்களை அறிவது உயிரே

**26.** ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை
வேறுஒருவன் கூறியிடும் மென்மைபோல் – ஆறாறும்
ஒன்றுஒன்றா நாடிஉணர்ந்து ஓதில், அதில் உற்று அறிவாய்;
நின்றபொருள் தானேகாண் நீ

தெளிவுரை:

இனிப்பு, கைப்பு, உவர்ப்பு, புளிப்பு, துவர்ப்பு, கார்ப்பு – ஆகிய ஆறு சுவைகளையும், நீ சுவைத்து, இஃது இன்ன சுவை என்று அறிந்து கூறும் தன்மை உடையவன்; அவ்வாறு சுவைக்கும்போது, அச்சுவை வேறு; அதனை சுவைக்கின்ற நீவேறு என்பது புலனாகிறது அல்லவா?

அதுபோல, முப்பத்தாறு தத்துவங்களையும், ஆய்ந்து ஆய்ந்து அனுபவித்து, அவற்றுடன் பொருந்தி நிற்பதை நீ அறிகின்றாய்.

அவ்வாறு அத்தத்துவக் கொத்தை அறியும் நீ, அவற்றின் வேறு ஆகிய அறிவுடைப் பொருள் என்பதை உன்னை உள்நோக்கி உணர்ந்துகொள்.

## உயிர்க்கு வேறாய் நின்று இறைவன் உயிர்க்கு அறிவிப்பது

**27.** குன்றா அருளாலே கூறினீர் என்வடிவு,
பொன்றாத நும்உருவம் போதியீர் – நின்று அருக்கன்
கண்ணுக்குக் காட்டுமாப் போலே உனது அறிவில்
நண்ணி, அறி வித்திடுவோம் நாம்.

தெளிவுரை:

குருமூர்த்தியே, நிறைவான உமது அருளைக்கொண்டு, என் உண்மை இயல்பை எளியேனுக்கு உணர்த்தி அருளினீர். தூய இயற்கை முற்றுணர்வு ஆகிய உம்முடைய இயல்பு யாது என்பதை இந்த ஏழைக்கு உணர்த்தியருள வேண்டுகிறேன்.

இங்ஙனம் மாணுக்கர் வேண்டிக் கொள்ளவும் ஆசிரியர் உணர்த்துவது வருமாறு:

''கண்'' காணவேண்டிய பொருளைக் கண்ணுக்கு வேருய் நின்று, கதிரவன் தன் ஒளியினுல் கண் காணுமாறு, விளக்கிக் காட்டுகின்றது.

அதுபோன்று, நீ, அறிய வேண்டிய பொருளை, உனக்கு வேருய் நின்று, நாம் நமது அருளினுல், நீ அறியுமாறு, உனக்கு உணர்த்தி வருவோம்.

இறைவன் வேருய் நிற்பதற்குக் காரணம், உயிர்க்கு உணர்த்தும் பொருட்டே ஆகும்.

## இறைவன் உயிரில் ஒன்ருய் (அதுவதுவாய்) நிற்றல்

**28.** **அன்றியும்கேள்; ஆன்மாவால் ஆய்ந்து அறியும் ஐம்பொறிகள்**
**இன்றி அறியா இவைஎன்ன – நின்றதுபோல்**
**ஓவாமல் உன்னை உணர்த்துவோம் உன்அறிவில்**
**மேவாமல் மேவி, நா மே.**

**தெளிவுரை:**

இன்னும் கூறுகின்ருேம்; கேள்.

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய அறிபொறிகள் ஐந்தும், உயிரின் அறிவாற்றலால் பற்றி விளங்கப் பெற்றே, தன்தன் புலன்களை அறிய வல்லவன ஆகும். உயிரின் துணை இன்றி, இவைதாமே அறியமாட்டா. இப்பொறிகளை இடமாகக் கொண்டு, உயிர் அவற்றின் புலன்களை அறியும்படி செய்யும்.

அவ்வாறு, நாமும் (இறைவனும்) உன் (உயிரின்) அறிவின் கண், நீ (உயிர்) அறியாமலே கலந்து இருந்து, நீயேயாய் நின்று, உன் அறிவு நிலைபெறுமாறு உன்னை உணர்த்தி வருவோம்.

மேவாமல் மேவி – இறைவன் உயிரில் பொருந்தி நிற்பது உயிரால் அறியப்படாத வகையில் பொருந்தி.

## இறைவன் உயிர்க்கு உடனாய் நிற்றல்

**29. அக்கரங்கட்கு எல்லாம் அகரஉயிர் நின்றார்போல்
மிக்க உயிர்க்குஉயிராய் மேவினோம் – எக்கண்ணும்
நில்லா இடத்து, உயிர்க்கு நில்லாது அறிவு, என்று
நல்ஆ கமம், ஓதும் நாடு.**

**தெளிவுரை:**

உயிர் எழுத்து ஆகிய 'அ' கரத்தின் ஒலி, எழுத்துக்கள் எல்லாவற்றிலும் கலந்து, அவற்றோடு நின்று, அவற்றின் இயக்கத்திற்குக் காரணமாக உள்ளது. அதுபோல, எண்ணில்லாத எல்லா உயிர்களிடத்தும் கலந்து, உயிர்க்கு உயிராய் உடன் இருந்து, நாம் உயிர்களைத் தொழிற்படுத்துவோம்.

நாம் அவ்வாறு உயிர்க்கு, உள்ளும் புறமும் ஆகிய எல்லா இடத்தும் பொருந்தி, உடனாய் நிற்கவில்லையானால், உயிரின் அறிவு தொழிற்படாது.

இவ்வாறு சிவாகமங்கள் சிறப்பாகக் கூறுகின்றன; நீயும் இவ்வுண்மையை ஆழ்ந்து சிந்தித்துத் தெளிவு பெறுவாயாக.

எக்கண்ணும் – எல்லாப் பொருள்கள் இடத்தும்.

கண் – இடம் – (ஏழாம் வேற்றுமை உருபு)

## இறைவன் நடனத்தைப் பற்றி அறிய வேண்டுதல்

**30. நற்றவத்தோர் தாம்காண நாதாந்தத்து அஞ்செழுத்தால்
உற்றஉருவாய் நின்று, ஆடல் உள்ளபடி – பெற்றிட நான்
விண்ணார் பொழில்வெண்ணெய் மெய்கண்ட நாதனே
தண்ணார் அருளாலே சாற்று.**

**தெளிவுரை:**

விண்ணை முட்டும் உயர்ந்த சோலைகள் நிறைந்தத் திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியுள்ள மெய்கண்ட சிவாச்சாரியப் பெருந்தகையே,

சரியை, கிரியை, யோகம் ஆகிய தவத்தைச் செய்தவர்கள் காணும்படி, முப்பத்தாறு தத்துவங்களின் முடிவில், திருவைந்து எழுத்தால் திருவுருக்கொண்டு, சிவபெருமான் ஆற்றும் திருக்கூத்தின் இயல்பை, அடியேன் அஃது உள்ளவாறே, காண

விரும்புகிறேன். அவ்வரும் பெரும் நடனத்தைக் கண்டு அடியேன் நன்மை உறும் பொருட்டு, கனிவான உமது திருவருளால் அறிவுறுத்துமாறு வணக்கத்துடன் வேண்டிக்கொள்கிறேன்.

நாதாந்தம் – நிலம் முதல் நாதம் ஈறு ஆகிய முப்பத்தாறு தத்துவங்களின் நீங்கிய எல்லே.

அது பரவெளி ஆகும்.

பெரியபுராணத்தில் ''சிற்பர வியோமமம் ஆகும் திருச்சிற்றம்பலம்'' என்றதும் அஃதே ஆகும்.

## திருக்கூத்தின் இடமும் நோக்கமும்

**31. எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே**
**நட்டம், புதல்வா, நவிலக்கேள் – சிட்டன்**
**சிவாயநம என்னும் திருஎழுத்து, அஞ்சாலே**
**அவாயம்அற நின்று, ஆடுவான்.**

**தெளிவுரை:**

எட்டும் இரண்டும் பத்து, அது தமிழில் ''ய'' எனக் குறிக்கப் படுகின்றது. இந்த எண்ணுக்கும் ''ய'' என்ற எழுத்திற்கும் ஒற்றுமை உளது. ''ய'' என்ற எழுத்து, ''சிவாயநம'' என்ற ஐந்தெழுத்தில், உயிரைக் குறித்து நிற்கின்றது.

மாணுக்கனே, உயிர் ஆகிய ஆதாரத்தில் நின்று, சிவபெருமான் திருநடனம் செய்கின்ருன். அத்திருநடனத்தின் இயல்பு இன்னது என நாம் கூறுகிரேம்; நீ கேள்.

சிவபெருமான் ''சிவாயநம'' என்னும் சிவபஞ்சாக்கரத்தால் திருமேனி கொண்டருளி, உயிர்களின் துன்பத்திற்குக் காரணமான பிறப்பு அறும்படி, தன் திருவடியை ஊன்றித் திருநடனம் புரிகின்ருன். இவ்வுண்மையைத் தெளிவாகப் புரிந்துகொள்.

இலிங்கம் – குறி – இந்தச் செய்யுளில் ஆதாரம் என்று பொருள்.

ஆன்ம அறிவை நெறிப்படுத்துவது அஞ்செழுத்தே என்பது இதனல் இனிதே பெறப்பட்டது.

## அஞ்செழுத்தில் அம்பலவாணன் திருமேனி

32. ஆடும் படி, கேள் நல் அம்பலத்தான்; ஐயனே,
நாடும் திருவடியிலே, நகரம்; – கூடும்
மகரம் உதரம்;வளர்தோள் சிகரம்;
பகரும்முகம் வா; முடியப்பார்.

**தெளிவுரை:**

நல் மாணுக்கனே, அழகிய திருச்சிற்றம்பலம் உடையான், திருக்கூத்து இயற்றும் கோலத்தைக் கூறுகிறேன்; கேள்.

அன்பர்கள் நாடும் அவன் திருவடி, ''ந''காரமாய் இருக்கும்;/ திருவயிறு ''ம'' காரமாய் இருக்கும்;/உயர்ந்த திருத்தோள் ''சி'' காரம் ஆகும்;/வேதாகமங்களே அருளிய திருமுகம், ''வ'' காரமாகும்/திருமுடி ''ய'' காரமாய் இருக்கும்./

இவ்வாறு அம்பலவாணன் திருமேனி அமைந்திருக்கும் அழகை உணர்வாயாக.

திருவடியில் 'ந' கரம் என்றது, திருவடியே நகரம் என்பது கருத்து. அஞ்செழுத்து மந்திரத்தையே திருவுருவாகக் கொண்டிப்பதால், அதனைப் பஞ்சாக்கரத் திருமேனி என்பர். இத்திருமேனியைப் பாதாதி கேசம் (திருவடியிலிருந்து திருமுடிவரை) பார்த்தால், 'நமசிவாய' போல, அஃது அமைந்திருப்பதைக் காணலாம்.

## அவயவ அமைப்பு

33. சேர்க்கும் துடிசிகரம்; சிற்கனவா வீசுகரம்;
ஆர்க்கும் யகரம் அபயகரம்; – பார்க்கில் இறைக்(கு)
அங்கி நகரம்; அடிக்கீழ் முயலகனுர்
தங்கும் மகரம்அது தான்.

**தெளிவுரை:**

நடராசப் பெருமானின் திரு அங்க அமைப்பைக் கேசாதி பாதமாக (திருமுடியிலிருந்து திருவடி வரை) கூர்ந்து நோக்கினுல், கீழ்க்காணும் முறையில் அஞ்செழுத்து வடிவில் அமைந்திருக்கும்.

உடுக்கு ஏந்திய வலது திருக்கரத்தில் 'சி' காரம் அமையும். குஞ்சித்த திருவடியைக் காட்டும்.

இடது திருக்கரத்தில் அருளைச்சுட்டும் 'வ' காரம் அமையும்.

'அஞ்சேல்' என அபயக்குறி காட்டும் வலது திருக்கரத்தில் ஒளிபெற்ற 'ய' காரம் அமையும்;

அக்னி ஏந்திய இடது திருக்கையில் 'ந' காரம் அமையும்;

முயலகனை அழுத்திப் பொருந்தியிருக்கும் வலது திருக்காலில் 'ம' காரம் அமையும்.

சிற்கனவா –

கனசிற்பா எனக் கொண்டு கூட்டுக.

கன – பெருமை மிக்க; சிற் – சி ஸ்ரீ – ஞானம் – ஒளி; வா – 'வ' காரம்.

முந்திய செய்யுளில் பாதாதி கேசமாகவும் இந்தச் செய்யுளில் கேசாதிபாதமாகவும், அம்பலவாணனின் அஞ்செழுத்து வடிவம் கூறப்பட்டுள்ளது.

அஞ்செழுத்து மந்திரம், அம்பலவாணனின் ஐந்து தொழில்களையும் உணர்த்தும். அது வருமாறு;

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **1. உடுக்கை ஏந்திய திருக்கை** | – | **படைத்தல்** | – | **சி** |
| **2. அமைந்த திருக்கை** | – | **காத்தல்** | – | **ய** |
| **3. அனல் ஏந்திய திருக்கை** | – | **அழித்தல்** | – | **ந** |
| **4. ஊன்றிய திருவடி** | – | **மறைத்தல்** | – | **ம** |
| **5. தூக்கிய திருவடியைச் சுட்டும் வீசிய திருக்கை** | – | **அருளல்** | – | **வ** |

## பிரணவத்துள் திருக்கூத்து அமைப்பு

**34. ஓங்கார மே நல் திருவாசி; உற்று அதனில்**
**நீங்கா எழுத்தே நிறைசுடராம் – ஆங்காரம்**
**அற்றார் அறிவர்; அணி அம்பலத்தான் ஆடல்இது**
**பெற்றார் பிறப்பு அற்றார் பின்.**

**தெளிவுரை:**

'ஓம்' என்னும் பிரணவமே, அம்பலவாணனின் வடிவத்தைச் சுற்றி அமைந்துள்ள திருவாசி ஆகும். அப்பிரணவத்தில் பொருந்தி அதனைவிட்டு நீங்காத அஞ்செழுத்தே, அதன் உள்நிறைந்த ஒளியாகும்.

அப்பிரணவத்தை, 'யான்–எனது' என்னும் செருக்கு நீங்கப் பெற்றவரே அறிவர்.

இதனை அறிந்து, அழகிய திருச்சிற்றம்பலமுடையானது திருக்கூத்தை வழிபடப் பெற்றவர், மீண்டும் இங்கு வந்து பிறப்பதை அறுத்துக்கொள்ளும் திறனுடையவர் ஆவார்.

'ஓம்' என்னும் மந்திரம் நாதம், விந்து, அகரம், உகரம் மகரம் என்னும் ஐந்து பொருள்களால் ஆகியது.

நாதம் சதாசிவனையும், விந்து மகேசுவரனையும்
(அகரம்) (மறைத்தல்)
அகரம் அயனையும், உகரம் மாலையும் மகரம்
(படைத்தல்) (காத்தல்)
உருத்திரனையும் குறிக்கும்; எனவே ஓங்காரமும்
(அழித்தல்) ஐந்தொழில்களை உணர்த்துகிறது.

'ஓம்' என்னும் மந்திரமும் 'சிவாயநம' என்னும் மந்திரமும் பொருளால் ஒன்றே ஆகும். ஆகவே, 'ஓம்' என்பதன் உள்ளீடு (உள்ளொளி) 'சிவாயநம' என்பது புலனாகும். ஓங்காரம் (புறத்து) உலகை இயக்கும் பஞ்சாட்சரம்.

சிவாயநம (அகத்து) உயிரை இயக்கும் பஞ்சாட்சரம்.

திருவாசி 'ஓம்' அமைப்பை ஒத்திருக்கிறது. எனவே, திருவாசியின் உள்ளொளியாக விளங்கும் அம்பலவாணன் வடிவம், அஞ்செழுத்தாகவும் காட்சி அளிக்கிறது.

## <u>ஊன நடனம்</u>

**35. தோற்றம் துடியதனில்; தோயும் திதி அமைப்பில்,**
**சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் – ஊற்றமா**
**ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி**
**நான்ற மலர்ப்பதத்தே நாடு.**

தெளிவுரை:

உடுக்கு ஏந்திய திருக்கரத்தில் படைத்தலையும், அமைந்த திருக்கரத்தில் உயிரை நெகிழச் செய்யும் காத்தலையும், பரவலாகப் பேசப்படும் அக்னி ஏந்திய திருக்கரத்தில் அழித்தலையும், அழுத்தமாக ஊன்றியிருக்கின்ற திருவடித் தாமரையில் பொருந்திய மறைப்பாற்றலையும் தூக்கிய திருவடித் தாமரையில் அருளுதலையும்

ஆகிய ஐந்தொழில்களையும் ஊனநடனத்தில் அம்பலவாணன் ஆற்றுவதை உணர்வாயாக.

அம்பலக்கூத்தன் திருக்கூத்து, நாம் உலக இன்பங்களை நுகர்தற்கும் துணை செய்கிறது; உலகை விடுத்து, வீடு அடைவதற்கும் துணை செய்கிறது. இவ்விரு நிலைகளிலும் ஒரே நடனம் துணை செய்வதால், உலகியல் இன்பத்திற்காகச் செய்யும் பொழுது அதனை ஊனநடனம் என்றும் வீடுபெறத் துணை செய்யும் போது, அதனை ஞான நடனம் என்றும் கூறுவர்.

## ஞான நடனம்

**36.** **மாயை தனைஉதறி, வல்வினையைச் சுட்டு, மலம்**
**சாய அமுக்கி, அருள் தான்எடுத்து – நேயத்தால்**
**ஆன்நத வாரிதியில் ஆன்மாவைத் தான் அழுத்தல்**
**தான் எந்தை யார், பரதம் தான்.**

**தெளிவுரை:**

ஆன்மாக்கள் வீடுபேறு அடையும் பொருட்டு நிகழும் நடனம் ஞானக்கூத்து எனப்படுகிறது. அத்தகு ஞான நடனத்தின் போது ஐந்தொழில் எவ்வாறு நிகழ்கிறது என்பதை இச்செய்யுள் விவரிக்கின்றது. அது வருமாறு:

**உடுக்கை ஏந்திய திருக்கை, மாயாமலத்தை**
**நீக்குதல் ஆகிய தொழிலைச் செய்கிறது**
**நெருப்பு ஏந்திய திருக்கை, கன்ம மலத்தைச்**
**சுடுதல் ஆகிய தொழிலைச் செய்கிறது**
**ஊன்றிய திருவடி, ஆணவமலத்தை**
**வலி அடங்கச் செய்தல் ஆகிய தொழிலைச் செய்கிறது**
**தூக்கிய திருவடி, பேரின்பம் அருளுதல் ஆகிய**
**தொழிலைச் செய்கிறது**
**அமைந்த திருக்கை அப்பேரின்பத்தில் ஆன்மாவை**
**அழுத்துவித்தல் ஆகிய தொழிலைச் செய்கிறது**

இவ்வாறு ஞானத்தொழில் ஐந்தினையும் புரிவதால் இந்த நடனம், ஞான நடனம் எனப்படுகிறது. அஞ்செழுத்து மந்திரத்தில், 'சிவ' என்பது ஞான நடனத்தையும், 'நம' என்பது ஊன நடனத்தையும், உணர்த்தும். 'ய' என்னும் உயிர், அவ்விரு கூத்தின் பயனையும் நுகரும்.

## ஆனந்த நடனம்

37. மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தான், அந்தம் ஆன, இடத்தே தங்கிடும் – ஆனந்தம்
மொண்டு, அருந்த நின்றுஆடல் காணும் அருள் மூர்த்தியாக்
கொண்டதிரு அம்பலத்தான் கூத்து.

**தெளிவுரை:**

மௌனம் ஆகிய ஞானவரம்பில் சிறந்த முனிவர்கள் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மல வாசனைகளை அறவே நீக்கி, யான் – எனது என்னும் செருக்கு அற்ற நிலையில் விளங்கி, சிவானந்த அமுதத்தைத் தம் உணர்வினுல் வாரி வாரி விழுங்கித் துய்க்கும் பொருட்டு,

நமக்கெல்லாம் தாயாக விளங்கும் சிவகாமசுந்தரி, தம் நடனத்தைக் கண்டு, எப்போதும் மகிழும் வண்ணம், அவளைத் தம்முடன் என்றும் நீக்கமின்றி நிற்குமாறு செய்தருளிய அம்பலவாணனின் பேரானந்தக் கூத்தே தில்லையம்பதியில் வெளிப்பட்டு நின்ருடும் திருக்கூத்தாகும்.

இத்தகு நடனத்தையே சுந்தரர் பெருமான், திருத்தில்லைக்குச் சென்றபோது, ஆனந்த எல்லையில் கண்டு தரிசித்த தனிப்பெருட கூத்து என்று சேக்கிழார் வருணிக்கிருர்.

ஞானவரம்பில் நிற்கும் ஞானிகளின் உள்ளத்தில் விளங்கும் அருள்ஞானமே திருவம்பலம். அங்குப் பொங்கி எழும் பேரின்பமே சிவம். இங்ஙனம் சிவஞானம் பொங்கிவரும் நிலையில், ஐம்பொறிகளிலும் அத்தகு ஞானம் எளிதில் கைகூடுமாறு உணர்ந்து வழிபடப் பெறுவதே திருத்தில்லைத் திருக்கூத்து ஆகும்.

ஆனந்த நடனம். ஓர் அனுபவக் கூத்து,.

ஊன நடனம். சகலர்க்காக நிகழ்த்தப் பெறுவது;

ஞான நடனம், முத்தர்க்காக நிகழ்த்தப் பெறுவது;

ஆனந்த நடனம், சீவன் முத்தர்க்காக நிகழ்த்தப் பெறுவது.

## பிறப்பறுக்கும் பெருநடனம்

38. பரைஇடமா நின்றுமிகு பஞ்சாக்கரத்தால்
உரைஉணர்வுக்கு எட்டா ஒருவன் – வரைமகள் தான்
காணும்படியே கருணை உருக்கொண்டு, ஆடல்
பேணும் அவர்க்குஉண்டோ பிறப்பு.

**தெளிவுரை:**

சொற்களாலும் உள்ளத்து உணர்வுகளாலும் அளந்து அறியப்பட முடியாத ஒப்பற்ற பரம்பொருள் ஆகிய நம் சிவபெருமான், தன் திருவருளையே ஆடல் அரங்காகக் கொண்டு, திருநடனம் புரிகின்றான்.

அத்திருவருளையே உருவாகக் கொண்டு இலங்குகின்றான் மந்திரவேந்து எனப்படும் திருவைந்து எழுத்தையே அருட்டிரு மேனியாகக் கொண்டு ஆடுகின்றான்.

அவனருள் ஆகிய தம்மையே அவனது திருக்கூத்தைக் காணும் படி ஆடுகின்றான்.

அத்தகு திருக்கூத்தை, மேற்கூறியபடி, உணர்ந்து விரும்பித் தொழுபவர்க்கு மீண்டும் பிறப்பு இல்லை.

சில பதிப்புகளில், இவ்வெண்பா, ''உரைவுணர்க்கு எட்டா ஒருவன் - பரைஇடமாக'' என்று அமைந்துள்ளது. (ஆ.ஈசுரமூர்த்திப் பிள்ளை புத்துரை)

சிவபெருமான் ஆடும் இடமும் அருள்;

எடுக்கும் திருமேனிகளும் அருள்;

ஆட்டத்தை உயிர்களின் பொருட்டுத் தரிசித்துக் கொண்டு இருக்கும் நம் அம்மை சிவகாமியும் அருளே,

சிவபெருமான் கொள்ளும் அருட்டிருமேனி, அதிசூக்கும வடிவம்;

உயிரைத் திருமேனியாகக் கொள்வது சூக்கும் வடிவம்;

பஞ்சாக்கரத் திருமேனி, தூலவடிவம்.

அருளால் இயக்கப்படுவது உயிர்.

பஞ்சக்கிருத்திய (ஐந்தொழில் ஆற்றும்) சத்திகள் பஞ்சாக்கரம்.

## அஞ்செழுத்து விளக்கம் வேண்டுதல்

**39.** நாதாந்த நாடகத்தை நன்று அருள்செய்தீர்;
ஓதீர் எழுத்துஅஞ்சும் உள்ளபடி – தீதுஅறவே;
அஞ்செழுத்துஈது ஆகில் அழியும்எழுத் தாய்விடுமோ?
தஞ்ச அருட்குருவே சாற்று.

தெளிவுரை:

அடியேனுக்குப் புகலிடம் ஆக உள்ள அருளுரு ஆகிய ஆசாரிய மூர்த்தியே,

நாதம் முடிவாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்த திருக்கூத்தின் இயல்பை அடியேன் உறுதியாகக் கூடும்படி அருமையாக அருளிச் செய்தீர்.

இனி, தீமையின் வாசனை கூட எளியேனைத் தாக்காமல் இருக்கும் பொருட்டு திருஐந்து எழுத்தின் பொருளை உள்ளவாறு உணர்த்தியருள வேண்டுகிறேன்.

ஐந்துஎழுத்துக்களும் எழுதப்படுவது எனப்படுமாயின், ஏனைய எழுத்துக்களைப் போல, இவையும் அழியும் தன்மை உடையன ஆகி விடுமோ?

இந்த ஐயப்பாட்டினையும் நீக்கியருள வேண்டும், பெருமானே.

## அஞ்செழுத்தும் அருளுதி

**40.** ***உற்ற குறிஅழியும்; ஓதுங்கால் பாடைகளில்***
***சற்றும் பொருள்தான் சலியாது – மற்றதுகேள்;***
***ஈசன், அருள், ஆவி, எழிலார் திரோத(ம்), மலம்,***
***ஆசில்எழுத்து அஞ்சில்அட வாம்.***

**தெளிவுரை:**

மொழியின் இயல்பை ஆராய்ந்து கூறினுல், அது சொல்லும், பொருளும் என இருவகைப்படும். சொல், பொருளைக் குறிப்பது, பொருள், சொல்லால் குறிக்கப் பெறுவது. இவ்விரண்டனுள் சொல் ஆகிய குறி அழியும் தன்மை உடையது, ஆயினும் அச்சொல்லால் குறிக்கப்பெறும் பொருள் சிறிதும் மாறுபடுவதன்று.

திருஐந்து எழுத்து ஒவ்வொன்றும் ஒவ்வொரு சொல்லைக் குறிக்கும்; அச்சொற்களால் குறிக்கப்பெறும் பொருள் வருமாறு:

| | | | | |
|---|---|---|---|---|
| **சி** | – | **ஈசன்** | – | **சிவன்** |
| **வா** | – | **அருள்** | – | **அருள்** |
| **ய** | – | **ஆவி** | – | **உயிர்** |
| **ந** | – | **திரோதம்** | – | **மறைப்பாற்றல்** |
| **ம** | – | **மலம்** | – | **ஆணவம்.** |

இந்த ஐந்து பொருள்களும் தொடக்கமில் காலந்தொட்டு (அநாதியே) என்றும் உள்ளவை. எனவே, இந்த ஐந்து பொருள்களைக் குறிக்கும் திருஐந்து எழுத்துக்களும் என்றும் உள்ளவையே ஆகும். ஏனைய எழுத்துக்கள், திருவைந்தெழுத்து எழுத்துக்களைப் போல் பொருள் உடையனவாக இல்லை. எனவே, அவை அழியும்; இவை அழியா.

திருவைந்தெழுத்துக்கள் என்றும் அழிவதில்லை; ஆதலால் ''அஞ்செழுத்து அநாதி'' எனப்படுகிறது.

## அஞ்செழுத்து ஓதும் முறை

**41.** சிவன், அருள், ஆவி, திரோதம், மலம்ஐந்தும்
அவன்எழுத்து அஞ்சின் அடைவாம் – இவன்நின்று
நம்முதலா ஓதில், அருள் நாடாது; நாரும்அருள்
சிம்முதலா ஓது, நீ சென்று.

**தெளிவுரை:**

இறைவன், அளவையறிவைக் கடந்தவன், ஐந்தெழுத்து அவனது நிறைவை உயிர்களுக்கு நினைப்பிக்கச் செய்வது. ஐந்தெழுத்தில் உள்ள ஒவ்வோர் எழுத்திற்கும் ஒவ்வொரு பொருள் முறைப்படி அமைந்துள்ளது.

அஃது அமைந்துள்ள முறை வருமாறு:

| | | |
|---|---|---|
| சிவன் | – | சி |
| அருள் | – | வா |
| ஆவி | – | ய |
| திரோதம் | – | ந |
| மலம் | – | ம |

இறையருள் இன்பங்களை விரும்புகிறவர்கள் இந்த அமைப்பு முறையில் வைத்து ஓதவேண்டும். உலகியல் இன்பங்களை விரும்புகிறவர்கள் 'நமசிவாய' என்னும் முறையில் வைத்து ஓதலாம்; இவ்வாறு ஓதினுல், இறையருளினுல் பெறத்தக்க பேரின்பம் கிட்டா.

'நமசிவாய' என்று ஓதும்போது, மறைப்பாற்றலைக் குறிக்கும். 'ந' காரத்தை முன் வைத்து ஓதுவதால் உலகியல் இன்பம் மட்டுமே கிட்டும்.

'சிவாயநம' என்று ஓதும்போது, சிவபெருமானைக் குறிக்கும். 'சி'காரத்தை முன்வைத்து ஓதுவதால், இறையருள்வழி இன்பமும் கிட்டும் உலகியல் வழி நியாயமான இன்பமும் கிட்டும்.

எனவே 'சிவாயநம' என்று திருவைந்தெழுத்தை ஓதுவதே சிறப்பாகும்.

## அஞ்செழுத்து ஓதும் பயன்

**42.** அண்ணல் முதலா அழகார் எழுத்துஐந்தும்
எண்ணில் இராப்பகல் அற்ற இன்பத்தே – நண்ணி
அருள், ஆனது, சிவத்தே ஆக்கும் அணுவை
இருள் ஆனது, தீர இன்று

**தெளிவுரை:**

முந்திய வெண்பாவில் கூறிய முறையில், சிவபெருமானைக் குறிக்கும் எழுத்து ஆகிய 'சி'காரத்தை முதலாக வைத்துச் 'சிவாயநம' என்று திருஐந்து எழுத்தை எண்ணி வருதல் வேண்டும். அவ்வாறு எண்ணிவந்தால் திருவருள் வெளிப்பட்டுத் தோன்றி உயிர்க்குள்ள ஆணவ மலத் தொடக்கு (பற்று)அ(கட்டு) அறவே கழியுமாறு செய்யும். அதன்பயனாக, 'இரவு' போன்று இருக்கும் கேவலநிலையும், 'பகல்' போன்று இருக்கும் சகல நிலையும் நீங்கப் பெற்றுப் பேரின்பப் பெருநிலை ஆகிய சுத்த நிலையில் உயிரை நிலை நிறுத்தும். அந்நிலையே ஆன்மா, சிவமாம் தன்மை பெறும் பெருநிலை; அதற்கு மேல் ஏதும் இல்லை.

'சிவாயநம' என்ற முறையில் அஞ்செழுத்து ஓதிவரும்போது, அதில் உள்ள மந்திர ஆற்றல், உயிர்க்குள்ள மலவாசனையைப் பையப் பைய நீக்கும்; அவ்வாறு நீக்கி வர வர, உயிர் தூய்மை பெற்றுவரும். வரவே முடிவு நிலையில் பேரின்பமயமான சிவத்தைப் பெற்று அவ்வின்பத்தை அம் மந்திரம் நுகரும்படிச் செய்யும்.

அண்ணல் – சிவபெருமான்; அணு ..... உயிர்.
இராப்பகல் அற்ற இன்பம் – மாறாத பேரின்பம்.
சிவத்தே ஆக்கும் – சிவமாம் தன்மை பெறுவிக்கும்.
இருள் .... ஆணவமலம்.

## ஓதும் பயன் (தொடர்ச்சி)

43. ஆதி மலம்இரண்டும் ஆதியா ஓதினுல்
சேதியா மும்மலமும் தீர்வுஆகா – போதம்
மதிப்புஅரிதாம் இன்பத்தே வாழலாம்; மாறி
விதிப்படிஓது, அஞ்சுஎழுத்துமே.

**தெளிவுரை:**

'ஆதி' என்பது மறைப்பாற்றலைக் குறிக்கும். 'ந' காரம். 'மலம்' என்பது ஆணவமலத்தை மட்டுமே குறிக்கும் 'ம' காரம்.

ஆக, 'ந','ம' ஆகிய இரண்டு எழுத்துக்களையும், அஞ்செழுத்தின் முதல் எழுத்துக்களாக வைத்து ஓதினுல், (அஃதாவது 'நமசிவாய' என்று அஞ்செழுத்து மந்திரத்தை ஓதினுல்)

ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று மலங்களும் களையப்படமாட்டாது. மும்மலங்களின் விளைவுகளாகிய துன்பங்களும் ஒருபோதும் உயிரைவிட்டு நீங்கமாட்டா.

எனவே, நாம் முன்பே விதித்துள்ளபடி, ''சிவ'' வை முன்வைத்துச் 'சிவாயநம' என்றே திருஐந்து எழுத்தை ஓதுக. இவ்வாறு ஓதினுல், இவ்வுலகத்தில் எந்தத் துன்பமும் இல்லாமல் வாழ்வதோடு வீடுபேறு பெற்றுப் பேரின்பத்தோடும் வாழலாம்.

முந்திய வெண்பாவில் வெளிப்படுத்திய அதே கருத்தை இந்த வெண்பாவிலும் மீண்டும் கூறியருளியதற்குக் காரணம், ''சிவாயநம'' என்ற முறையிலேயே அஞ்செழுத்தை ஓதவேண்டும் என்பதில், துணிவும் தெளிவும் பிறத்தற்பொருட்டு ஆகும்.

## திரு ஐந்தெழுத்தின் முழுமுதல் தன்மை

44. அஞ்சுஎழுத்தே ஆகமமும், அண்ணல் அருமறையும்
அஞ்சுஎழுத்தே ஆதிபுராணம், அனைத்தும் – அஞ்சுஎழுத்தே
ஆனந்த தாண்டவமும் ஆறுறுக்கு அப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும்.

**தெளிவுரை:**

உயிர்கள் உண்மையை உணர்ந்து உய்யும்பொருட்டு, இறைவன் அருளிச் செய்த சிவாகமங்கள், வேதங்கள், புராணங்கள் என்பவற்றின் பயனுக உள்ளது திருஐந்து எழுத்தே ஆகும்.

அம்பலவாணனின் ஆனந்தத் தாண்டவத்தை நினைப்பிப்பதும், திருஐந்து எழுத்தே ஆகும்.

முப்பத்தாறு தத்துவங்களின் நிலைகளையும் படிப்படியாகக் கடந்து, அவற்றிற்கு அப்பாற்பட்ட பரமுத்தி நிலையைத் தெளிவித்து எய்துவிப்பதும் திருஐந்து எழுத்தே ஆகும்.

இவ்வெண்பா, பஞ்சாக்கரமே ''மந்திர ராஜம்'' என்பதைத் தெளிவுறுத்துகின்றது. எல்லாப் பொருள்களுக்கும் மெய்ப்பொருளாக இருப்பது அஞ்செழுத்து ஒன்றே ஆகும்.

''ஆருறுக்கு'' என்ற சொற்குப் பதில், ''யாவைக்கும்'' என்றும் பாடம் உண்டு. (ஈ.மூ.புத்துரை).

## முத்திநிலைக்கு ஓர் எடுத்துக்காட்டு

**45.** **முத்தி தனைஅடைந்தோர் முந்துபழம் போது, அங்கி**
**வித்தகமாம் வீணை இவையிற்றின் – ஒத்த**
**இரதமணம் வெம்மை எழில்நாதம் போல**
**விரவுவர்என்றுஓதும் விதி.**

**தெளிவுரை:**

பழத்தில் சுவையும், மலரில் மணமும், நெருப்பில் சூடும், வீணையில் இன்னிசையும், அந்த அந்தப் பொருளில் அடங்கிப் பிரிக்க முடியாத நிலையில் கலந்து இருப்பதுபோல், பரமுத்தி நிலையை அடைந்தவர்கள், இறைவனோடு கலந்து, தற்போதம் அடங்கி, பிரிப்பின்றி நிற்பர் என்று வேதாகமங்கள் கூறுகின்றன.

| | | |
|---|---|---|
| வித்தகமாம் வீணை | – | அற்புதமான வீணை |
| முந்து பழம் | – | முதிர்ந்த பழம் |
| விரவுவார் | – | கலந்து நிற்பர். |

## மற்றும் ஓர் எடுத்துக்காட்டு

**46.** **தத்துவங்கள் எல்லாம் சகசமாய் ஆன்மாவில்**
**பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல் – முத்திதனில்**
**சித்தமலம் அற்றோர் செறிந்திடுவர் என்றுமறை**
**சத்தியமா ஓதியிடும் தான்.**

**தெளிவுரை:**

பிறப்புக்கு உட்பட்டு இருக்கும் நிலையில், உயிரினிடத்தில் எல்லாத் தத்துவங்களும், தாம்வேறு உயிர்வேறு என்று பிரித்து அறிய முடியாதபடி, உயிரே என்று கருதுமாறு ஒன்றுமைப்பட்டு நிற்கின்றன.

அதுபோல், மலம் அறவே நீங்கிய முத்தான்மாக்கள், வீட்டு நிலையில், சிவத்தில் பொருந்தித் தாம் வேறு சிவம் வேறு என்று பிரித்து அறிய முடியாதபடி, சிவமே என்று கருதுமாறு செறிந்து நிற்பர்.

இவ்வாறு வேதாகமங்கள் உண்மையாகவே உரைக்கின்றன.

பெத்தம் – பிறப்பு நிலை

பெற்றி – தன்மை

சித்தமலம் – உயிரின் நினைவில் உள்ளஆணவமலம்.

## பின்னும் ஓர் எடுத்துக்காட்டு

**47.** **ஆதவன்தன் சந்நிதியில் அம்புலியின் ஆர்சோதி**
**பேதம்அற நிற்கின்ற பெற்றிபோல் – நாதாந்தத்து**
**அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்துஇன்பக்**
**கண்ணில் அழுந்தியிடும் காண்.**

**தெளிவுரை:**

சூரியனின் ஒளியில், நிலவின் ஒளி, தனித்துக் காணப்படாமல் அடங்கி நிற்கும். அதுபோன்று, அனைத்துத் தத்துவங்களையும் கடந்த நிலையில் ஆன்மா, இறைவன் திருவடியில் அணைந்து, தன் முனைப்புத் தோன்றுதவாறு, இறைவன் வழங்கும் பேரின்ப நுகர்ச்சியில் மூழ்கி அடங்கி, அழுந்தி அறிந்து, இன்புறும்.

இவ்வுண்மையைத் தெளிவாக அறிவாயாக.

## முத்திநிலை அநாதியே உள்ளது என்றது

**48.** **சென்றுஇவன்தான் ஒன்றில் சிவபூர ணம்சிதையும்;**
**அன்றுஅவன்தான் ஒன்றும் எனில் அந்நியமாம் – இன்று இரண்டும்**
**அற்றநிலை ஏதுஎன்னில் ஆதித்தன் அந்தன்விழிக்**
**குற்றம்அற நின்றதுபோல் கொள்.**

தெளிவுரை:

சிவபெருமான், அங்கு இங்கு எனுதபடி எங்கும் முழு நிறைவுடன் ஒளிமயமாய் நிற்கின்ருன். உயிர், தான் செய்த சாதனங்கள் காரணமாக, முத்தியில் சிவபெருமானைச் சென்று அடையும் என்று கூறினுல், இறைவன் முழுநிறைவு உடையவன் என்னும் அடிப்படைக் கொள்கைக்கு, அது முரண் ஆகிவிடும்.

இனி, முத்திநிலையில் சிவபெருமானே, உயிரிடம் வந்து உயிரைக் கூடுவான் என்று சொன்னுல், அதுவும் அவனது வியாபகத் தன்மைக்கு இழுக்கு ஆகும். எப்படி?

இறைவன், உயிர்களுக்குள்ள பிறப்புநிலை வீட்டுநிலை என்னும் இரு நிலைகளிலும், ஒன்ருய், வேருய், உடனுமாம் தன்மையில், உயிர்களோடு பிரிக்கப்பட முடியாதவாறு நிற்பன் என்னும் அடிப்படைக் கொள்கை, அதனுல் அடிபட்டுப் போய்விடும்.

முத்திநிலையில், உயிரும் இறைவனைச் சென்று அடைவதில்லை. இறைவனும் உயிரிடம் வந்து உயிரைக் கூடுவதில்லை, என்று கூறினுல், வீடுபேற்று நிலையினை விளக்குவதற்கு எடுத்துக்காட்டுதான் யாது? அது வருமாறு:

குருடனின் கண்ணைப் படலம் மறைத்திருக்கும்போது, அவன் சூரிய ஒளியைக் காணமுடிவதில்லை. கண்ணின் படலம் நீங்கியதும் சூரியஒளியை அவன் காண்கிருன்.

குருடனின் விழியில் குற்றம் உள்ளபோதும் அக்குற்றம் நீங்கிய போதும், அவனது கண் சூரியஒளி நிறைவில் பிரிக்கமுடியாதபடி இருந்திருக்கிறது; ஆயினும், குற்றம் உள்ளபோது அவனது கண், ஒளியில் அழுந்த முடியவில்லை; இருளில் அழுந்தியது; அப்போது அதற்கு ஒளியும் இருளே ஆக இருந்தது. குற்றம் நீங்கிய உடன், ஒளிமுன் இருள் நில்லாமையால், கண், ஒளியில் அழுந்தி, ஒளிநிறைவில் கலந்து நின்று, இன்புறுகின்றது.

இவ்வாறே உயிரும் பாசப்பற்று அற்றவுடன், திருவருள் நிறைவில் கலந்து, பேரின்பச் சிவத்தில் அழுந்தி நின்று, முத்தியில் இன்புறுகின்றது.

கண் – உயிர்; விழிக்குற்றம் – ஆணவமலம்;

ஆதித்தன் – சிவன்

சூரியஒளி – திருவருள்; சிவபூரணம் – முழுநிறைவு – வியாபகம்.

## முத்தியில் முப்பொருள் நிலை (தடை)

**49.** **வாக்கு மனம்இறந்த வான்கருணையாளன் உருத்**
**தாக்கு அறவே நிற்கும் தனிமுதல்வா – நீக்காப்**
**பதியினைப்போல் நித்தம் பசுபாசம் என்றாய்**
**கதியிடத்து மூன்றினையும் காட்டு.**

**தெளிவுரை:**

உரைஉணர்வுக்கு எட்டாத நிலையில் உள்ள சிவபெருமானின் உயர்ந்த அருளே உருவாக எழுந்தருளியுள்ள குருமுதல்வரே, உலகியலால் சிறிதும் தாக்கப்படாமல் நிற்கும் பெருந்தகையே,

முழுநிறைவுடைய சிவபெருமானைப் போலவே, உயிர்களும் ஆணவமலமும் என்றும் உள்ள பொருள்களே என்று உணர்த்தியருளினீர்.

எனவே, முத்திநிலையில், இறைவன், உயிர், ஆணவமலம் ஆகிய இம்முப்பொருளும் உள்ள முறைமையினை விளக்கியருள வேண்டுகிறேன்.

## முத்தியில் முப்பொருள் நிலை (விடை)

**50.** **முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்;**
**சுத்தஅனு போகத்தைத் துய்த்தல்அணு; மெத்தவே**
**இன்பம் கொடுத்தல் இறை; இத்தைவிளை வித்தல்மலம்;**
**அன்புடனே கண்டுகொள்; அப்பா.**

**தெளிவுரை:**

என் அருமை மாணக்கனே, பரமுத்திநிலையில் இறை, உயிர், தளை (ஆணவம்) ஆகிய முப்பொருளும் உள்ள முறைமையைக் கூறுகிறோம்; கேள்.

பிறப்பு நிலையில் 'அணு' எனப் பெயருடன் நின்ற ஆன்மா வீடு பேறு பெற்ற இப்பரமுத்தி நிலையில், துன்பக்கலப்பு இல்லாத தூய பேரின்ப போகத்தை நுகர்ந்துகொண்டிருக்கிறது.

அப்பேரின்ப நுகர்ச்சியை, இடையீடு ஏதும் இன்றி, இறைவன் உயிர்க்கு வழங்கிக் கொண்டிருக்கிறுன்.

அத்தகு பேரின்பத்தை ஆன்மா, அனுபவித்துக்கொண்டு இருக்கும் நிலையை விளைவித்துக் கொண்டு இருப்பது ஆணவமலத்தின் இருப்பே ஆகும்.

ஆகவே, முத்திநிலையில் இறை உயிர் தளை (ஆணவமலம்) ஆகிய மூன்று பொருள்களும், அதன் அதன் அளவில் உண்மை இயல்பில் எந்தவிதக் குறைபாடும் இன்றி முழுநிறைவில் உள்ளன என்னும் உண்மை இந்த வெண்பாவில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. முத்திநிலையில், ஆணவமலத்தின் இருப்புப் பற்றிப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன.

சிவஞானபாடியம் 6-ஆம் சூத்திரம், 2-ஆம் அதிகரணத்தில், சிவஞானசுவாமிகள்,

''அது அது வாய் நின்று அநுபவிக்கும் ஆன்மா ஏனையவற்றையும் அறிவுழிச் சிவாநுபவ விளைவில் குறைபடும் ஆகலின், ஏனையவற்றை அறிதல், முத்திப் பெரும்பயனுக்கு இடையூறு என்பதும் ஏனையவற்றை அறியாமையே முத்திப் பெரும்பயனுக்குச் சிறந்த காரணம் என்பதும் உணராது, இக்கருத்தைப் பற்றி அன்றே ''இன்பங்கொடுத்தல்இறை; இத்தை விளைவித்தல் மலம்'' என்று ஓதியது என்பதூஉம் உணராது........ தமக்கு வேண்டியவாறு எல்லாம் வலியுறுத்தி உரை செய்து, ......... தாமே தம்மை வியந்து கொள்வர்'' என்று அருளிச் செய்துள்ள கருத்து இங்கு நுட்பமாகக் கவனிக்கத்தக்கது.

உயிர், சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடையது என்பது, எவராலும் மறுக்க முடியாததோர் உண்மை. முத்தியில், உயிர் இறைவனை மட்டுமே சார்ந்து நிற்பதால், சார்ச்சிச் சிறப்பு காரணமாக, இறைத்தன்மை எய்திப் பேரின்பம் துய்க்கிறது.

இறைச்சார்பைச் சற்றேனும் விட்டு நீங்கிஞல், அவ்வுயிரை ஆணவமலம் அக்கணமே பந்தித்துவிடும். அப்பந்தம், உயிரைப் பசுத்தன்மைக்கு உட்படுத்திவிடும் விடவே, பேரின்ப நுகர்வு. உயிர்க்குத் தடைப்பட்டுவிடும். இத்தடை உயிர்க்கு ஏற்படுவதற்குக் காரணம், ஆணவமலம் தன் அளவில் எந்தவிதக் குறைபாடுமின்றி முத்தி நிலையிலும் வலுக் குன்ருமல் நிற்பதே

ஆகும். வியாபகப் பொருளுக்கு இடநீக்கம் கூறுவது சற்காரியவாதம் ஆகாது.

இறைச்சார்பிலிருந்து சற்றேனும் உயிர்விட்டு விலகாமலிருப்பதற்குக் காரணம் முத்தியிலும் ஆணவமலம் வலுக்குன்றுமல் இருப்பதே ஆகும். ஆக, ''இத்தை விளைவித்தல் மலம், என்பதற்கு, ''முத்தியில் உயிர்க்கு இடைவிடாத பேரின்ப நிலையை நேராக விளைவிக்காமல் மறைமுகமாக விளைவிப்பது ஆணவமலமே'' என்று பொருள் கொள்வதே பொருத்தம் உடையதாகும், மேலும் முத்திநிலையில் ஆன்மா சிவனுக்கு அடிமையாக இருக்கவேண்டிய நிலை. ஆணவமல இருப்பாலேயே நிகழ்கிறது. இந்த அடிமை நிலையை விளைவிப்பது மலம் என்றும் கூறலாம்.

## முத்தி பெறுதற்கு வழி யாது?

**51.** அப்பா இம் முத்திக்கு அழியாத காரணம்தான்
செப்பாய் அருளாலே; செப்பக்கேள் – ஒப்புஇல்
குருலிங்க வேடம்எனக் கூறில், இவைகொண்டார்
கருஒன்றி நில்லார்கள், காண்.

**தெளிவுரை:**

இத்தகு சிறப்பியல்பு உள்ள வீடுபேற்றினை அடைவதற்கு உரிய நிலையான வழிமுறைகளைக் கருணைகூர்ந்து கூறியருள வேண்டுகிறுர், மாணவர்.

அதற்கு ஆசிரியர் கூறியருளியது வருமாறு:

குருவழிபாடு, இலிங்க வழிபாடு, சங்கம வழிபாடு ஆகிய இம்மூன்று திருவருள் நிலைகளே வீடுபேற்றுக்கு உரிய வாயில்கள் ஆகும். இவ்விடங்களில், இறைவனை இடைவிடாது நினைந்து, தொழுது இறைஞ்சுபவர்கள், மீண்டும் பிறக்கமாட்டார்கள்.

## பத்திநெறி என்பது யாது?

**52.** கற்று மனம்போல் கசிந்துகசிந் தேஉருகி
உற்றுசான் (இ)லிங்கம் உயர்வேடம் – பற்றுக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனில் நின்றிடுவர் பார்.

தெளிவுரை:

சீவன் முத்தர்களாய் உள்ள தலைவர்கள், சிவஞானம் உணர்த்தும் ஞானதேசிகனையும் சிவலிங்கத் திருமேனியினையும், உயர்ந்த திருவேடம் பூண்ட மெய்யன்பர்களையும் சார்ந்து நிற்பர்,

அந்நிலையில், கன்றை ஈன்ற பசுவின் மனம் குழைந்து நிற்பதைப் போன்று, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, உருகிய அன்புநெறியில் நிற்பர். சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு நெறிகளில் எந்த நெறியில் நின்றாலும், அன்பு ஒன்றே பந்தத்தைப் போக்கவல்லது என்பதை உணர்ந்து, ''கலந்த அன்பாகிக் கசிந்து உள் உருகும் '' நலம் பெற்றிருப்பர்.

இதுவே பக்தி நெறி ஆகும்.

## ஆசிரியருக்கு நன்றி உணர்வை வெளிப்படுத்தியது

**53.** **வாழ்ந்தேன் அருட்கடலே வற்றாப் பவக்கடலில்**
**வீழ்ந்தே அலையாமல் மேதினியில் – சூழ்ந்துவிடா**
**வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே**
**உண்மைத் தவப்பயனே உற்று.**

**தெளிவுரை:**

திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளி இருக்கின்ற, சுவேதவனப் பெருமான் என்னும் பிள்ளைத் திருநாமம் உடைய மெய்கண்டநாதரே, கருணைக் கடலே, பெருந்தகையே,

உம்மைவந்து தரிசிக்கும் அன்பர்கள், உம்மை விட்டு நீங்காமல் இருக்க அருள்புரியும் அண்ணலே,

முன் பல்வேறு பிறவிகளில் செய்த உண்மைச் சரியை, கிரியை, யோகம், ஆகிய தவப்பயன் கைகூடப் பெற்றமையால், அடியேன் உம்மைச் சரணடையப் பெற்று, உம்மால் சிவஞானம் உபதேசிக்கப் பெற்றேன்

உம்மிடம் உபதேசம் பெற்றதனால், பிறவிப் பெருங்கடலில் இனி வீழ்ந்து அலையாமல், சிவானந்த வெள்ளத்துள் திளைத்து இன்புற்று வாழும் பெரும் பேற்றினைப் பெற்றேன்.

என் வாழ்முதலே, உம்முடைய செம்மலர் நோன்தாள் என்றும் எளியேன் தலைமேல் இருக்க அருள்புரிவீராக.

உண்மைவிளக்கத் தெளிவுரை முற்றிற்று

## பிற்சேர்க்கை – (1)
## முப்பத்தாறு தத்துவங்கள்




**செய்யுள் (4) முதல் (21) வரை**
**தத்துவ விளக்கப் படம்**

குறிப்பு: (1) 'சித்தம்' என்னும் தத்துவத்தை 'மனம்' என்னும் தத்துவத்துள் அடக்கி, 'மூலப்பிரகிருதி' என்னும் தத்துவத்தை (24)–ஆவதாக வைத்துக் கூறும் முறையும் ஒன்று உண்டு.

(2) முப்பத்தாறு தத்துவங்களைப் பற்றிய விரிவான விளக்கமும் அவற்றின் இன்றியமையாமையும் பற்றிய விபரங்களைத் தனி நூலில் காண்க.

## 1. அகப்பூதம்:

இது சூக்கும பஞ்சபூதம் எனப்படும். இவை, ஞானேந்திரியங்களில் வரும் ஐந்து புலன்களையும் ஆன்மாக்கள் அனுபவிக்கும்படி, செவியில் ஆகாயமாயும், மெய்யில் வாயுவாயும், கண்ணில் தேயுவாயும், நாவில்அப்புமாயும், நாசியில் பிருதிவியாயும், அந்தந்த இந்திரியங்களுக்கு ஆதாரமாகிச் சூக்கும வடிவாய், உட்பூதங்களாய் நிற்பன.

## 2.அகப்புற பூதங்கள்:

சரீரத்தில் உள்ளும் புறமுமாய் இருக்கும் தூலபூதங்கள், அவை வருமாறு:

**பிருதிவி** – எலும்பு, தசை முதலியன.
**அப்பு** – இரத்தம், வியர்வை முதலியன
**தேயு** – அன்னம், பானம் முதலியவற்றை சீரணிக்கச் செய்வதும், தேககாந்தி, நித்திரை முதலியவற்றை உண்டாக்குவதும்.
**வாயு** – வியானன், சமானன், பிராணன், முதலிய தச வாயுக்கள்
**ஆகாயம்** – இருதயம் முதலிய தானங்களிலும், நாடிகளிலும், வாய் முதலிய துவாரங்களிலும், தச வாயுக்களுக்கும் இடங்கொடுப்பதாய் இருப்பது.

## 3. புறப் பூதங்கள்:

மண், நீர் முதலிய பஞ்ச பூதங்கள். இவை அகப்புற பூதங்களிலும் தூலமாய் இருப்பன.





## பிற்சேர்க்கை – 2

### புறப்பூதங்களுக்குரிய வடிவு, நிறம் முதலியவற்றின் அட்டவணை (செய்யுள் 4 முதல் 9 வரை)

| புறப் பூதங்கள் | வடிவு விபரம் | வடிவு படம் | நிறம் | வித்து எழுத்து | அடையாளம் | அதிதெய்வம் | அதிதெய்வங்களின் தொழில் | குணம் | பூதங்களின் தொழில் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| பிருதிவி (மண்) | நாற்கோணம் | | பொன்மை | ல | வச்சிராயுதம் | அயன் | படைத்தல் | கடினம் | பொருளைத் தாங்கல் |
| அப்பு (நீர்) | அர்த்தசந்திரன் | | வெண்மை | வ | தாமரைப்பூ | மால் | காத்தல் | குளிர்ச்சி | பொருளை நினைத்தல் |
| தேயு (தீ) | முக்கோணம் | | செம்மை | ர | சுவத்திகம் | உருத்திரன் | அழித்தல் | வெம்மை | பொருளை நீறாக்கி ஒன்று படுத்தல் |
| வாயு (வளி) | அறுகோணம் | | கருமை | ய | அறுபுள்ளி | மகேசுரன் | மறைத்தல் | சலனம் | பொருளைப் பரப்பலும் குவித்தலும் |
| ஆகாயம் (வான்) | வட்டம் | | புகைமை | உற | அமுதவித்து | சதாசிவம் | அருளல் | வெளியாதல் | பொருளை உட்சென்று கலத்தல் |

குறிப்பு: பஞ்சபூதங்கள் அகப்பூதம், அகப்புறப்பூதம், புறப்பூதம் என மூவகைப்படும்.

# பிற்சேர்க்கை (3)

## இந்திரியங்களும் அவற்றின் தொழிலும்

(செய்யுள் 11 முதல் 15 முடிய)

| இந்திரியங்கள் | | எங்கு | எதன் வாயிலாய் | என்ன தொழில் செய்யும் |
|---|---|---|---|---|
| 1 | | 2 | 3 | 4 |
| ஞானேந் திரியம் | கன்மேந் திரியம் | | | |
| செவி | | சத்த தன்மாத்திரை | செவி | சத்தத்தைஅறியும் |
| தோல் | | பரிச ,, | தோல் | பரிசத்தை அறியும் |
| கண் | | உருவ ,, | கண் | உருவத்தை அறியும் |
| நாக்கு | | இரச ,, | நாக்கு | இரசத்தை அறியும் |
| மூக்கு | | கந்த ,, | ~~வாய்~~ மூக்கு | கந்தத்தை அறியும் |
| | வாய் | சத்த ,, | வாய் | பேசும் |
| | கால் | பரிச ,, | பாதம் | போக்குவரவு |
| | கை | உருவ ,, | கை | ஏற்றல், இடுதல் |
| | குதம் | இரசம் ,, | எருவாய் | மலசலம் கழித்தல் |
| | குறி | கந்த ,, | கருவாய் | சுக்கிலசுரோணிதங் களை வெளிப்படுத்தல் |

